# ஆசிய
# வரலாறு

ஒன்பதாம் வகுப்பு

தீண்டாமை ஒரு பாவச்செயல்
தீண்டாமை ஒரு பெருங்குற்றம்
தீண்டாமை மனிதத்தன்மையற்ற செயல்



தமிழ்நாட்டுப்
பாடநூல் நிறுவனம்
சென்னை.

முதல் பதிப்பு — 1982

**ஆசிரியர்கள் :**

திரு. **சி. சீனிவாசன்**
தலைமை ஆசிரியர்,
ராஜா முத்தையா மேல்நிலைப் பள்ளி,
ராஜா அண்ணாமலைபுரம்,
சென்னை

திரு. **ஜி. ரங்கநாதன்**
மதுரை திரவியம் தாயுமானவர் இந்துக் கல்லூரி
மேல்நிலைப் பள்ளி,
திருநெல்வேலி

**விலை : ரூ. 1-90**

**மேலாய்வாளர்கள் :**

பேரா. **எம். வி. சுப்பிரமணியம்**
ஸ்ரீபுரம், திருநெல்வேலி சந்திப்பு

திரு. **தி. க. இராஜகோபாலன்**
தலைமை ஆசிரியர்,
அரசினர் மேல்நிலைப் பள்ளி,
பாடலூர், திருச்சி மாவட்டம்

இந்திய அரசு சலுகை விலையில் வழங்கிய 60 ஜி. எஸ். எம். தாளில் இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது.

அச்சிட்டோர்,
ஏஷியன் அச்சகம், சென்னை-600 014

# பொருளடக்கம்

*உங்கள் பள்ளிகளில் நீங்கள் பல அற்புதமான கருத்துகளைக் கற்றுக்கொள்கிறீர்கள். அக்கருத்துகளை உருவாக்கியவர் யார்? உலகிலுள்ள ஒவ்வொரு நாடுகளிலும் பலப்பல தலைமுறைகளைச் சார்ந்தவர்கள் எல்லையற்ற உழைப்பினாலும் இடைவிடாத முயற்சியினாலும் இக்கருத்துகளை உருவாக்கினார்கள். இதனை உங்கள் நினைவில் கொள்ளுங்கள். உங்கள் பரம்பரைச் சொத்துப் போல் இவையனைத்தும் உங்கள் கைகளிலே வழங்கப் பட்டிருப்பது ஏன்? இக்கருத்துகளை நீங்கள் பெற வேண்டும்—பெற்றுச் சிறப்பிக்க வேண்டும்—இவற்றோடு மேலும் பல புதிய கருத்துகளைச் சேர்க்கவேண்டும்—உங்கள் குழந்தைகளின் கையில் இவற்றை ஒருநாள் நீங்கள் ஒப்படைக்க வேண்டும். இவ்வாறாக நாம் ஒருங்கிணைந்து உருவாக்கும் நிரந்தரமான கருத்துகளில் நாமே அமரத் தன்மையை எய்துகிறோம்.*

—*ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்*

# 1. ஆசியா

## முன்னுரை

'நிலவியலும், காலக்கணக்கும் (chronology) வரலாற்றின் இரு கண்கள்' என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். நிலவியல் அமைப்பு வரலாற்றைப் பாதிக்கிறது. காலக்கணக்கு தெரிந்தால்தான் வரலாற்று நிகழ்ச்சிகளைச் சரியானபடி மதிப்பிட முடியும். ஆசியாக் கண்டத்தின் வரலாற்றைப் படிக்கும் முன் அக்கண்டத்தின் நிலவியல் அமைப்பின் முக்கிய அம்சங்களை நாம் தெரிந்துகொள்ளுதல் அவசிய மாகும். எனவே, இப் பாடத்தில் ஆசியாக் கண்டத்தைப்பற்றிச் சில விவரங்களைப் படிப்போம்.

## பொது விவரம்

உலகில் உள்ள கண்டங்களுள் மிகப்பெரியது ஆசியாக் கண்ட மாகும். உலகில் உள்ள நில பாகத்தில் மூன்றில் ஒரு பங்கு ஆசியாக் கண்டமாகும். உலகில் உள்ள மக்கள் தொகையில் பெரும் பகுதி இக் கண்டத்திலேயே அடங்குகிறது. உலகிலேயே உயர்ந்த மலையான **இமயமலையும்**, அதன் முக்கிய சிகரமான **எவரெஸ்டும்**, உயர்ந்த பீடபூமியான **திபெத்தும்** ஆசியாவில் உள்ளன. அதுபோல் உலகில் அதிகக் குளிரும், அதிக வெப்பமும் உள்ள பகுதிகளும், மக்கள் அடர்த்தி அதிகமாக உள்ள பகுதிகளும், அடர்த்தி குறைவாக உள்ள பகுதிகளும் இக்கண்டத்திலேயே உள்ளன. உலகிலேயே மிக அதிக மாக மழையைப் பெறும் பகுதியான **சிரபுஞ்சியும்**, உலகின் **குளிர் துருவம்** என அழைக்கப்படும் **வெர்கோயான்சும்** ஆசியாவில் உள்ளன. வண்டல் மண் நிறைந்த சமவெளிகளும், விவசாயத்திற்குப் பயன்படாத நிலங்களும் அதிக அளவில் இங்கு உள்ளன. உலகில் அதிக அளவில் **பாறை எண்ணெய்** கிடைக்கும் பகுதிகள் ஆசியாவில் உள்ளன. இவற்றிலிருந்து ஆசியாவின் சிறப்பினை நாம் நன்கு அறிந்துகொள்ள முடிகிறது.

**இயற்கை அமைப்பு**

இயற்கையமைப்பை அடிப்படையாகக்கொண்டு, ஆசியாவை நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவையாவன :

1. வடக்கே ஆர்க்டிக் கடலை நோக்கிச் சரிந்துள்ள சமவெளிகள். இதன் பெரும் பகுதி **சைபீரியா** ஆகும்.




**படம் 1. ஆசியா: இயற்கையமைப்பு**

2. மத்தியில் உள்ள மடிப்பு மலைகளும் பீடபூமிகளும்.

3. தெற்கிலுள்ள **யூனான், இந்தோசீனப்** பீடபூமிகளும், **இந்திய, அரேபிய** தீபகற்பப் பிரதேசங்களும்.

4. **ஆற்றுப் பள்ளத்தாக்குகள் :** மடிப்பு மலைகளுக்கும், பீட பூமிகளுக்கும் இடையில் உள்ள செழிப்பான சமவெளிகள், **சிந்து,**

**கங்கைச் சமவெளி, ஐராவதிச் சமவெளி, யூப்ரடிஸ் — டைகிரிஸ்** சமவெளிகள் ஆகும்.

ஆசியாவில் உள்ள மலைத் தொடர்கள் பாமீர் முடிச்சிலிருந்து தொடங்கி எல்லாத் திசைகளிலும் பிரிந்து செல்கின்றன. மலைத் தொடர்கள் அனைத்தும் பாமீர்ப் பகுதியில் ஒன்று சேர்வது முடிச்சு போல் காணப்படுவதால் இது **பாமீர் முடிச்சு** என்றழைக்கப்படுகிறது. இங்குள்ள **திபெத் பீடபூமி, உலகத்தின் கூரை** என அழைக்கப்படுகிறது. இப் பீடபூமி கடல் மட்டத்திற்கு 3,600 மீட்டருக்கு மேல் உள்ளது. இது உலகிலேயே மிக உயர்ந்த பீடபூமியாக உள்ளதால் அவ்வாறு அழைக்கப்படுகிறது.

ஆசியாக் கண்டத்தில் மலைகள் மையத்தில் உள்ளமையால் ஆறுகள் இங்கிருந்து உற்பத்தியாகிப் பல திசைகளில் சென்று கடலை அடைகின்றன. அவ்வாறு செல்லும் ஆறுகள் ஆர்க்டிக் கடல், பசிபிக் பெருங்கடல், இந்தியப் பெருங்கடல், ஏரல் கடல்களில் கலக்கின்றன. **ஆப், எனிசி, லீனா** முதலிய ஆறுகள் ஆர்க்டிக் கடலில் கலக்கின்றன. இவை குளிர்ப்பகுதியில் பாய்வதால் ஆண்டிற்கு ஒன்பது மாதங்கள் உறைந்துவிடுகின்றன. இவைகளால் பயன்கள் அதிகமில்லை. **ஹோவாங்கோ, யாங்சிகியாங்கு** முதலியன பசிபிக் கடலில் கலக்கின்றன. ஹோவாங்கோ ஆறு அடிக்கடி தன் போக்கை மாற்றிக்கொள்வதால் ஏற்படும் உயிர்ச்சேதமும், பொருள்சேதமும் கணக்கிலடங்கா. அதனால் இந்த ஆறு **சீனாவின் துயரம்** என அழைக்கப்படுகிறது. **சிந்து, கங்கை, பிரம்மபுத்திரா** ஆறுகள் இமய மலைத் தொடரில் உற்பத்தியாகி முறையே அரபிக்கடல், வங்காள விரிகுடாக் கடலில் கலக்கின்றன. இவைகள் விவசாயத்திற்கு நன்கு பயன்படுகின்றன. **யூப்ரடிஸ்—டைகிரிஸ்** ஆறுகள் பாரசீக வளை குடாவில் கலக்கின்றன.

**மக்கள் நெருக்கம்**

பரப்பளவு அதிகமாயுள்ள ஆசியாவில் மக்கள் நெருக்கம் அதிகம் உள்ளது. வண்டல் மண் படிந்த வளமுள்ள பகுதிகளில் மக்கள் நெருக்கம் அதிகமாக உள்ளது. ஆசியாவின் தெற்குப் பிரதேசங்களில் வடக்குப் பிரதேசங்களைவிட மக்கள் நெருக்கம் மிக அதிகம். சமீபத்திய கணக்கெடுப்பின்படி, கி.பி. 2,000-ல் ஆசியாவின் மக்கள் தொகை உலக மக்கள் தொகையில் மூன்றில் இரண்டு பங்காக அதிகரித்துவிடும் எனத் தெரிகிறது. உலகின் மக்கள் தொகையில்

முன்னணியில் நிற்கும் நாடு சீனா. அதற்கடுத்தாற் போலுள்ளது இந்தியா.

**வரலாற்று முக்கியத்துவம் கொண்ட கண்டம்**

ஆசியாக் கண்டம் பல வழிகளில் உலக வரலாற்றில் உன்னத நிலையில் உள்ளது. உலகில் தோன்றியுள்ள மக்கள் இனங்களில் நான்கு முக்கிய இனங்கள் ஆசியாவில் உள்ளன. அவர்கள் திராவிடர்கள், ஆரியர்கள், மங்கோலியர்கள், செமிட்டிக் இனத்தவர்களாவர். இவர்கள் உலக நாகரிக வளர்ச்சிக்குச் சிறந்த சேவையை ஆற்றி உள்ளனர். ஆசியாவில்தான் **சுமேரிய நாகரிகம், சிந்துச் சமவெளி நாகரிகம், மஞ்சள் ஆற்று நாகரிகம், திராவிட நாகரிகம், ஆரிய நாகரிகம்** முதலியன தோன்றியுள்ளன. மேலும், பழங்காலத்திலேயே, அதாவது கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே, பேரரசுகள் தோன்றி, திறமையான நிர்வாகத்துடன் செயல்பட்டு வந்தன. **அஸ்ஸீரியப் பேரரசு, பாபிலோனியப் பேரரசு, மௌரியப் பேரரசு** ஆகிய பழங்கால ஆசியப் பேரரசுகளும் முக்கியமானவையாகும். இவை பற்றிப் பின் வரும் பாடங்களில் படிப்போம். ஆசியாவில்தான் சமயங்கள் அனைத்தும் தோன்றியுள்ளன. அவை **இந்து சமயம், புத்த சமயம், கன்பூஷிய சமயம், யூத சமயம், கிறிஸ்தவ சமயம், சொராஸ்டிரிய சமயம், இஸ்லாமிய சமயம்** முதலியவைகளாகும்.

எனவே, உலக வரலாற்றில் ஆசியா தனிச் சிறப்பிடத்தைப் பெற்றுள்ளது. நம் நாடு அக்கண்டத்தின் ஒரு முக்கிய பகுதியாக இருப்பது பற்றி நாம் பெருமிதம் அடைகிறோம்.

## கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய்க :**

1. ———— உலகில் உள்ள மிக உயரமான மலைச் சிகரமாகும். இது ————மலைத் தொடரில் உள்ளது.
2. ———— உலகத்திலேயே அதிக மழையைப் பெறும் இடமாகும்.
3. உலகின் குளிர் துருவம் ———— ஆகும். இது ———— அருகில் உள்ளது.
4. கங்கை, பிரம்மபுத்திரா ஆறுகள் ———— மலைத் தொடரில் உற்பத்தியாகின்றன.

**II. குறுகிய விடையளிக்கவும் :**

1. 'உலகத்தின் கூரை' சிறு குறிப்பு தருக.
2. 'சீனாவின் துயரம்' சிறு குறிப்பு தருக.
3. ஆசியாவில் தோன்றிய நாகரிகங்கள் யாவை ?
4. பழங்கால ஆசியாவில் தோன்றிய பேரரசுகள் யாவை ?

**III. விரிவான விடையளிக்கவும் :**

1. ஆசியாவின் இயற்கை அமைப்பை விவரிக்கவும் ?
2. ஆசியாவின் தனிச் சிறப்பியல்புகள் யாவை ?

**பயிற்சி**

ஆசியாப் படத்தில் கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடுக :

1. மலைத் தொடர்கள். 2. முக்கிய ஆறுகள்.
3. மக்கள் நெருக்கம் மிகுந்துள்ள பகுதிகள்.

# 2. ஆற்றங்கரை நாகரிகங்கள்

**முன்னுரை**

நிலவியல் எவ்வாறு வரலாற்றைப் பாதிக்கிறது என்பதை ஆற்றங்கரை நாகரிகங்களிலிருந்து நீங்கள் அறியலாம். உலகின் மிகப்பழைய சிறந்த நாகரிகங்கள் அனைத்தும் ஆற்றங்கரைகளில் தோன்றி வளர்ச்சி அடைந்துள்ளன என்பதைக் காண்கிறோம். அதற்குச் சில காரணங்களைக் கூறலாம். ஆற்று நீரினால் மண் வளம் பெற்றிருப்பதால் அங்கு வாழும் மக்களுக்குத் தேவையான குடிநீரும், ஆடு மாடுகளுக்குத் தேவையான புல்வெளிகளும் உள்ளன. ஆறுகள் போக்குவரத்திற்கும், மீன் பிடிப்பதற்கும் பயன் பட்டன. பொதுவாக அம் மக்கள் அமைதியான வாழ்க்கையை மேற் கொள்ள எல்லா வசதிகளையும் பெற்றதால் மக்கள் தங்கள் நாடோடி வாழ்க்கையை விட்டு ஓரிடத்தே நிரந்தரமாகத் தங்கி வாழத் தலைப்பட்டனர். எளிதில் அவர்களுக்கு வேண்டிய பொருள்கள் கிடைத்ததால் அவர்களுக்கு ஓய்வு நேரம் கிடைத்தது. ஓய்வு நேரம் சிந்திப்பதற்கும், அறிவுத் திறமையை வெளிப்படுத்தவும் உதவியது. அதனால் நாகரிகம் வளர்ச்சி அடைந்தது. இதனால் ஆற்றங்கரைகள் **நாகரிகத் தொட்டில்கள்** என்றழைக்கப்படுகின்றன.

## சுமேரிய நாகரிகம்

தென்மேற்கு ஆசியாவில் யூப்ரடிஸ்- டைகிரிஸ் பாயும் சமவெளி, வளமுள்ள பகுதியாக இருப்பதால் அங்கு நாகரிகம் தோன்றியது. இப்பகுதி **மெசபடோமியா** என்றழைக்கப்படுகிறது. **மெஸ்பாட்** என்றால் இரு ஆறுகளுக்கு நடுவே உள்ள இடம் என்பது பொருள். முதன் முதலில் இங்குத் தங்கி நாகரிகத்தை ஏற்படுத்திய




**படம் 2. ஆசியா—நாகரிகம் வளர்த்த ஆற்றுச்சமவெளிகள்**

வர்கள் **சுமேரியர்கள்** ஆவர். சுமேரியர்கள் அநேக நகரங்களை அமைத்து அவைகளில் வாழ்ந்து வந்தனர். அவர்கள் ஏற்படுத்திய நகரங்களுள் **ஊர்**, **நிப்பூர்** போன்றவை சிறப்பானவையாகும். இந் நகரங்களுள் அடிக்கடி போர்கள் ஏற்படுவது சாதாரண நிகழ்ச்சியாகும்.

வரலாற்று அறிஞர்கள் சுமேரிய நாகரிகமானது கி.மு. 4,000-ல் தோன்றியிருக்க வேண்டுமெனக் கருதுகின்றனர். இவர்கள் ஆற்று நீரைப் பயன்படுத்தி விவசாயம் செய்தனர். ஆறுகளிலிருந்து கால்வாய்கள் வெட்டி நிலங்களுக்கு நீரைப் பாய்ச்சினர். அக்கால்வாய் களில் படகுகளை விட்டு வாணிகம் செய்தனர். இம் மக்களே முதன் முதலில் சக்கரத்தினாலான வண்டிகளைப் போக்குவரத்திற்குப் பயன் படுத்தினர்.

சுமேரியர், நாகரிகத்தில் மேம்பட்டவர் என்பதற்கு அவர்கள் உபயோகித்த எழுத்துகள் சான்றாகும். இவ்வெழுத்துகள் ஆப்பு வடிவத்தில் எழுதப்பட்டிருந்தன. இவைகள் **க்யூனிபாரம்** என்றழைக் கப்பட்டன. எகிப்தியர்களைப் போலவே, சுமேரியர்களும் தங்களுக் கென ஒரு நாட்காட்டியை அமைத்திருந்தனர். இவர்கள் மாதத்திற்கு 29 நாள்கள் எனக் கணக்கிட்டனர்.

சமூகத்தில் ஏற்றத்தாழ்வுகளிருந்தன. பிரபுக்களும் மத குருமார்களும் முதல் பிரிவைச் சார்ந்தவர்களாகக் கருதப்பட்டனர். அடிமைகள் கடைசிப் பிரிவைச் சேர்ந்தவர்கள். சுட்ட செங்கற்களைக் கொண்டு சுமேரியர் வீடுகளைக் கட்டினர். மாட மாளிகைகளும் கோவில்களும் செங்கற்களால் கட்டப்பட்டன. சமவெளியில் வாழ்ந்து வந்ததால் அவர்கள் களிமண்ணைப் பயன்படுத்த வேண்டிய நிலையிலிருந்தனர். இக்களிமண்ணைக்கொண்டு அழகிய மட்பாண் டங்களையும் வீட்டிற்குத் தேவையான பொருள்களையும் செய்தனர்.

சுமேரியர் நகர அரசுகளை அமைத்து வாழ்ந்து வந்தனர். ஒவ்வொரு நகர அரசிற்கும் ஓர் அரசன் இருந்தான். மதகுருமார்கள் சிறந்த மதிப்பையும், செல்வாக்கையும் மக்களிடையே பெற்றிருந் தனர். சில இடங்களில் அரசரும், மதகுருவும் ஒருவராகவே இருந் தனர். காலப்போக்கில் மதகுருமார்கள் தங்கள் செல்வாக்கை இழந் தனர். அரசனது அதிகாரங்கள் அதிகரித்தன.

சுமேரியர், ஆறுகளில் உள்ள நீரை ஏரிகளில் தேக்கி வைத்துப் பயன்படுத்தும் முறையை அறிந்திருந்தனர். இவர்கள் தாமிர உலோ கத்தைப் பயன்படுத்தும் முறையை அறிந்திருந்தனர். இவர்கள் குதிரைகளைக்கொண்டு இரதங்களைச் செலுத்தினர். விளைச்சல் அதிகமாக உள்ள காலங்களில் பொருள்களைப் பாதுகாத்துத் தேவை யான காலங்களில் அவைகளைப் பயன்படுத்தும் முறையைப் பின்

பற்றினர். இவர்கள் நிலத்தை உழுது பயிரிடுவதில் மிகுந்த அக்கறை காட்டினர். பயிரிடாது நிலத்தை வைப்பவர்களுக்கு அபராதம் விதிக்கப்பட்டது. பொருள்களை வாங்குபவர்களுக்கு இரசீது கொடுக்கும் முறை பின்பற்றப்பட்டு வந்தது. இவர்கள் வாணிகத்தில் சிறந்து விளங்கினர் என்றும், பொருள்களுக்கு முத்திரை வைக்கும் முறையைப் பின்பற்றினர் என்றும் தெரிகிறது.

சுமேரியர் பல தேவதைகளை வணங்கினர். என்லில் என்ற பூமி தேவதை முக்கியமான கடவுளாகும். ஜிக்குராட் என்ற கோபுரம் கொண்ட கோயிலைச் சுமேரியர் கட்டினர். எகிப்தியர்களைப் போலவே, சுமேரியர்களும் மனிதனின் மறைவிற்குப் பின் உயிர் தொடர்கிறது என்று நம்பினர். இதற்காக அரசர்கள் அல்லது பிரபுக்கள் இறந்தவுடன் அவ்வுடல்களோடு அவர்கள் பயன்படுத்திய பொருள்களையும் புதைத்து வந்தனர்.

சுமேரிய நாட்டை அமோரைட் என்ற இனத்தினர் கைப்பற்றினர். ஆனால், அவர்கள் பின்பற்றியதும் சுமேரிய நாகரிகமேயாகும்.

## சிந்துச் சமவெளி நாகரிகம்

சமீபகாலம் வரை இந்திய வரலாறு ஆரியர் இந்தியாவிற்கு வந்ததிலிருந்து தொடங்குகிறது என்ற கருத்து பொதுவாக இருந்து வந்தது. ஆனால், கி. பி. 1922 - ல் டாக்டர் ஆர். டி. பானர்ஜி என்பவர் சர் ஜான் மார்ஷல் என்பவரின் தலைமையில் சிந்துப் பகுதியில் உள்ள லர்கானா மாநிலத்தில் உள்ள மொகஞ்சதோரா என்னுமிடத்திலும், பஞ்சாபில் உள்ள மான்ட்கோமரி மாநிலத்தில் ஹரப்பா என்னுமிடத்திலும் நடத்திய தொல்பொருள் ஆராய்ச்சியின் விளைவாக இப்பகுதிகளில் நாகரிகத்தில் தலைசிறந்த மக்கள் வாழ்ந்து வந்தனர் என்பதைக் கண்டுபிடித்தார். அக்காலத்திய எகிப்து, சுமேரிய நாகரிகங்கள் சிறந்து விளங்கியபோது இந்நாகரிகமும் சிறந்திருந்தது என்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. சமீபத்தில் நடந்த தொல்பொருள் ஆராய்ச்சிகளிலிருந்து இந்நாகரிகம் குஜராத், இராஜஸ்தான் வரை பரவியிருந்தது எனத் தெரிகிறது.

மொகஞ்சதோரா நகரம் செவ்வனே திட்டமிட்டு நல்ல முறையில் கட்டப்பட்டுள்ளது. தெருக்கள் அகலமாகவும், நேராகவும் அமைக்கப் பட்டுள்ளன. குறுக்கே சந்திக்கும் தெருக்களும் ஒழுங்காக அமைக்கப் பட்டுள்ளன. வீடுகள் சுட்ட செங்கற்களினால் கட்டப்பட்டுள்ளன.

ஒவ்வொரு வீடும் அளவு முறைகளில் வேறுபடுகின்றது. ஒவ்வொரு வீட்டிலும் வடிகால்கள் மிக நல்ல முறையில் கட்டப்பட்டுள்ளன. குளிக்கும் அறை ஒவ்வொரு வீட்டிலும் உள்ளது. வீடுகளில் உள்ள அறைகள் நல்ல அளவில் அமைக்கப்பட்டுள்ளன. வீடுகளில் மாடி வீடுகளும் காணப்படுகின்றன. வீடுகளின் கூரைகள் மரத்தினால் அமைக்கப்பட்டுள்ளன.

பெரிய நீச்சல் குளம் நகரத்தின் நடுவில் காணப்படுகிறது. இது இந்நகரத்தின் சிறப்பிற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இக் குளத்தைச் சுற்றிலும் குளிப்பதற்குப் பல அறைகள் கட்டப் பட்டிருந்தன. இக் குளத்தில் உள்ள நீரை வெளியேற்றுவதற்கும், வெளியிலிருந்து நீரைக் கொண்டுவருவதற்கும் வசதிகளிலிருந்தன.

சாலை ஓரங்களில் தெருவிளக்குகள் அமைக்கப்பட்டிருந்தன. சுகாதார வசதிகளையும், சிறந்த வாழ்க்கை முறையையும் நோக்கும் பொழுது இம் மக்கள் பண்பட்ட மாநகராட்சி முறையை அறிந் திருந்தனர் என்பது தெரிகிறது.

சிந்துச் சமவெளி மக்கள் கோதுமை, பார்லி, பால், அரிசி போன்றவைகளை உணவாகப் பயன்படுத்தினர். அவர்கள் பழங் களையும், காய்கறிகளையும் உண்டனர். மீன் , இறைச்சி போன்றவை களையும் உண்டனர். அவர்கள் பருத்தி, கம்பளம் இவற்றால் நெய்யப்பட்ட ஆடைகளைப் பயன்படுத்தினர். இருபாலாரும் தங்களுக்கேற்ற ஆடைகள் நெய்து அணிந்தனர். பெண்கள் நகைகள் அணிந்தனர். நகைகள், தங்கம், வெள்ளி, தாமிரம், பித்தளை போன்றவைகளால் செய்யப்பட்டிருந்தன. வேட்டையாடுதல் அவர்களது பொழுதுபோக்காகும். மீன்பிடித்தல் அவர்களது தொழி லாகவும், பொழுதுபோக்காகவும் இருந்தது. இரும்பின் பயனை அம் மக்கள் அறியவில்லை. பொதுவாக அவர்கள் அமைதியான வாழ்க்கையை விரும்பினர். இறந்தவர்களின் உடலை எரிக்கவும், புதைக்கவும் செய்தனர்.

இந்நாகரிக மக்கள் எகிப்து, சுமேரியா போன்ற நாட்டுமக்களுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். வாணிகத்தின் பொருட்டு வெளிநாடுகளுக்கு அனுப்பப்படும் பொருள்களின்மீது முத்திரை வைக்கும் முறையைக் கையாண்டர்.

சிந்துச் சமவெளி மக்கள் சிவனையும் சக்தியையும் வணங்கினர். எருது புனிதமாகக் கருதப்பட்டது. தற்கால இந்து சமயமானது

சிந்துச்சமவெளி மக்களுக்கு நன்றிக்கடன்பட்டுள்ளது என்று கூறலாம்.

இம் மக்கள் எழுதும் முறையினை அறிந்திருந்தனர். இவர்களது எழுத்து சித்திர வடிவத்தைக் கொண்டுள்ளது. இவர்களது மொழியைப்பற்றி ஏதும் கூறுவதற்கில்லை. இவர்களது எழுத்தின் பொருளை இன்றளவும் அறியமுடியவில்லை. இவர்களது எழுத்தின் பொருளைத் தெரிந்துகொண்டால் இந் நாகரிகச் சிறப்பு இயல்புகளை இன்னும் அதிகம் தெரிந்துகொள்ளலாம்.

சிந்துச் சமவெளி நாகரிக மக்கள் யார் என்பதற்கு விடையளிப்பது மிகவும் கடினம். இவர்களை ஆரியர் என்று கூற முடியவில்லை. ஏனெனில் ஆரியர் கிராம வாழ்க்கையை மேற்கொண்டனர். நகர வாழ்க்கையை மேற்கொள்ளவில்லை. சில வரலாற்று வல்லுநர்கள் இவர்கள் திராவிட இனத்தைச் சேர்ந்தவர்கள் எனக் கூறுகின்றனர். இவர்கள் ஆரியருக்கு முன் வாழ்ந்த இனத்தவர்கள் எனக் கூறுகின்றனர். இவர்கள் ஆரியருக்கு முன் வாழ்ந்த இனத்தவர்கள் என்றும், ஆனால் ஆரியர்கள் அல்லர் என்றும் கருதலாம். இவர்கள் 3,250-லிருந்து கி.மு. 2,750 வரை வாழ்ந்தனர் என்று கருதப்படுகிறது. நில நடுக்கம், வெள்ளம் போன்றவைகளால் இந் நாகரிகம் முடிவுற்றது.

## மஞ்சள் ஆற்று நாகரிகம் அல்லது சீன நாகரிகம்

சீனாவில் இரண்டு முக்கிய ஆறுகள் பாய்கின்றன. அவைகள் **ஹோவாங்கோ, யாங்சிகியாங்கு** ஆகும். இவ்வாறுகள் சீனாவில் மேட்டு நிலங்களில் உற்பத்தியாகி கிழக்கு நோக்கிப் பாய்கின்றன. ஹோவாங்கோ ஆறு **மஞ்சள் ஆறு** எனவும் அழைக்கப்படும். ஹோவாங்கோ ஆறு மிருதுவான மஞ்சள்மண்ணை அடித்து வருவதால் இப் பெயர் பெற்றது. சீனாவைச் சுற்றி இயற்கை அரண்கள் சூழ்ந்துள்ளமையால் உலகின் மற்ற நாடுகளோடு அதனால் தொடர்பு கொள்ள முடியவில்லை. ஆகவே, அதன் நாகரிகம் தனித்திருந்தது.

சீனர்கள் மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர்கள். இந் நாகரிகம் சுமார் கி.மு. 2,000-ல் தோன்றியது எனலாம். சீனர்களின் நாகரிகத்தைப் பற்றி அறிந்துகொள்ள அவர்களால் எழுதப்பட்ட பழங்கதைகள் உதவுகின்றன. சீனாவில் தொல்பொருள்கள் மிகவும்

குறைவாகவே காணப்படுகின்றன. ஆனால், வரலாற்றினை மக்கள் தொடர்ச்சியாகவும் சிறந்த முறையிலும் எழுதி உள்ளனர். சீனர்களின் புராணக் கதைகள் சீனாவை கி.மு. 3,000-லிருந்து அரசர்கள் ஆண்டு வந்தனரென்று குறிப்பிடுகின்றன. மஞ்சள் ஆற்றுப் பள்ளத்தாக்கில் ஷாங் (Shang) வமிசத்தினர் ஆண்டு வந்த திலிருந்து வரலாறு தொடர்ந்து எழுதப்பட்டுள்ளது. இவர்கள் மக்களை ஒன்றுபடுத்தி ஒரு நிலையான அரசியலை ஏற்படுத்தினர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. ஷாங் வமிசத்திற்குப் பின் சௌ (Chow) வமிசம் ஆட்சி புரிந்தது. இவர்கள் கண்ணாடி செய்யும் முறையைக் கண்டுபிடித்தனர். 'சௌ' வமிசததினர் காலத்தில் **கன்பூஷியஸ்** என்ற தத்துவ மேதை நல்லுரைகள் வழங்கி ஒரு நல்வழியை வகுத்தார். அது **கன்பூஷியானிஸம்** என்றழைக்கப்படுகின்றது. சௌ வமிசத்திற்குப் பின் சின் (Chin) வமிசம் சீனாவை ஆண்டது. இதன் ஆட்சிக்காலம் குறுகியதாக இருந்த போதிலும் முக்கியம் வாய்ந்தது. இவ்வமிசத்து மன்னர்களுள் சிறந்தவர் ஷி ஹவாங் டி (Shi Hwang Ti). இவர் பிரபுக்களின் ஆட்சியை ஒழித்தார். சீனாவின் முதல் பேரரசர் என்று இவர் தம்மைக் கூறிக்கொண்டார். எதிரிகள் நாட்டில் புகாமலிருக்க ஒரு பெரிய மதிற்சுவரைக் கட்டினார். இதன் நீளம் 2,880 கி.மீ. ஆகும். உயரம் 6·6 மீ. அகலம் 6 மீ. இது உலக அதிசயங்களில் ஒன்றாக அமைந்துள்ளது.

சீனர்களின் முக்கியத் தொழில் விவசாயம். தினை வகைகள் அவர்களின் முக்கியப் பயிராகும். பின்பு கோதுமை, நெல் பயிரிடப் பட்டன. விவசாயத்திற்காகக் கால்வாய்களை வெட்டினர். தச்சுத் தொழிலை அறிந்திருந்தனர். வீடு கட்டுவதற்கு மூங்கில்கள் பயன் படுத்தப்பட்டன. இரும்பாலான பொருள்கள் பயன்படுத்தப்பட்டன. பீங்கான் பொருள்கள் செய்வதில் சீனர்கள் சிறந்து விளங்கினர் கண்ணாடி செய்யும் முறையைச் சீனரகளே கண்டு பிடித்தனர். பருத்தி ஆடைகளை அணிந்தனர். காகிதம் செய்யும் முறையைச் சீனர்களே கண்டுபிடித்தனர். மரப்பட்டைகளிலிருந்தும், செடிகளின் தண்டுகளிலிருந்தும் காகிதங்கள் செய்தனர். தேயிலையை உலகிற்கு அறிமுகப்படுத்தியவர்களும் சீனர்களே. பட்டுப்பூச்சி வளர்ப்பதிலும், பட்டு எடுப்பதிலும் இவர்கள் சிறந்து விளங்கினர்.

இவர்களது எழுத்து சித்திர வடிவம் கொண்டது. முதலில் மூங்கிற்பட்டைகளிலும், பின்பு பட்டுத்துணிகளிலும் எழுதினார்கள்.

இவர்கள் ஓவியம் தீட்டுவதில் சிறந்திருந்தனர். ஓவியம் தீட்டுவதற்கு ஒட்டகத்தின் உரோமத்தாலான புருசு (Brush) ஒன்றைப் பயன் படுத்தினர். இவர்கள் நீர்க்கடிகாரத்தையும், நிழற்கடிகாரத்தையும்



படம் 5. பழங்காலச் சீன எழுத்துகள்

பயன்படுத்தினர். இறந்தவர்களை வணங்கும் முறையை இவர்கள் பின்பற்றி வந்தனர். ஆனால், இறந்தவர்களின் மீது கட்டடம் கட்டும் பழக்கத்தை மேற்கொள்ளவில்லை.

## கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய்க :**

1. சுமேரியர்களின் எழுத்து முறைக்கு ________ என்று பெயர்.
2. சுமேரிய நகர அரசுகளில் ________, ________ சிறந்தவையாகும்.
3. ________ சுமேரியர்களின் முக்கிய கடவுள்.
4. ________ ஒரு நகர நாகரிகமாகும்.
5. ________ ஆறு மஞ்சள் ஆறு என அழைக்கப்படுகிறது.
6. ________ சீனாவின் பெருஞ்சுவரைக் கட்டினார்.

**II. குறுகிய விடையளிக்கவும் :**

1. பண்டைய நாகரிகங்கள் ஆற்றங்கரைகளில் தோன்றக் காரணங்கள் யாவை ?

2. க்யூனிபாரம் எழுத்து முறையைப் பற்றிக் குறிப்புத் தருக.
3. மெசபடோமியா என்பதன் பொருள் என்ன ?
4. சீனர்களின் சிறந்த கண்டுபிடிப்புகளைப்பற்றிக் குறிப் பெழுதுக.
5. சீனர்களின் பெருஞ்சுவர்பற்றிக் குறிப்புத் தருக.

**III. விரிவான விடையளிக்கவும் :**

1. சுமேரிய நாகரிகத்தின் சிறப்பியல்புகளை விவரிக்கவும்.
2. சிந்து சமவெளி நாகரிகத்தின் சிறப்பு அம்சங்களை விவரிக்கவும்.
3. மஞ்சள் ஆறு நாகரிகம் பற்றிக் கட்டுரை வரைக.

**பயிற்சி**

ஆசியாப் படத்தில் ஆற்றங்கரை நாகரிகங்கள் தோன்றிய இடங்களைக் குறிக்கவும்.

# 3. ஆரியர்

**முன்னுரை**

இந்தியாவின் செழிப்பும், செல்வமும் பல மக்களின் கவனத்தை ஈர்த்தன. பழங்காலத்திலிருந்து பல மக்கள் இந்தியாவில் குடியேறுவதற்காகவோ அல்லது இராச்சியங்களை அமைக்கவோ வந்திருக்கின்றனர். அப்படி வந்தவர்களுள் ஆரியர் முதல்வராவர்.

**பூர்வீக இருப்பிடம்**

ஆரியர் என்பவர் யார் ? அவர்கள் முதன்முதலில் எங்கு வாழ்ந்து வந்தனர்? இது போன்ற கேள்விகட்கு வரலாற்று அறிஞர் களிடையே கருத்து வேற்றுமைகள் நிலவி வருகின்றன. **மாக்ஸ்முல்லர்** என்ற ஜெர்மானியப் பேரறிஞர், இவர்கள் மத்திய ஆசியாவில் வாழ்ந்து வந்த இனத்தவர்கள் என்றும், அங்கிருந்து இவர்கள் பல திசைகளில் பிரிந்து உலகில் உள்ள பல இடங்களில் குடியேறினர் என்றும், இவர்களில் ஒரு பிரிவினரே கைபர், போலன் கணவாய்கள் வழியாக இந்தியாவிற்கு வந்தவர்கள் என்றும் கூறுகிறார். ஆனால் **பாலகங்காதர திலகர்** ஆரியர் குளிர்ப்பகுதியான ஆர்க்டிக்கி லிருந்து வந்தவர்கள் என்று கூறுகிறார். இதற்கு ஆதாரங்கள் வேதங்களில் உள்ளன எனக் கூறுகிறார்.

**இந்தியாவில் ஆரியர்கள் குடியேறுதல்**

எல்லா ஆரியர்களும் ஒரே சமயத்தில் இந்தியாவில் வந்து குடியேறவில்லை. சிறு சிறு பிரிவினராக இந்தியாவிற்கு வந்தனர். அவர்கள் பஞ்சாப் சமவெளியில் குடியேறினர். பின்னர் அவர்கள் கங்கைச் சமவெளியில் குடியேறத் தொடங்கினர். அவர்கள் வசித்த பகுதியை **ஆரிய வர்த்தம்** எனக் கூறுகின்றனர்.

**ஆரிய நாகரிகம்**

ஆரியர்களின் வாழ்க்கை நெறியை அறிய வேதங்களே நமக்கு ஆதாரங்களாகும் **வேதம்** என்ற சொல்லுக்கு **புனித அறிவு** என்பது பொருள். வேதங்கள் நான்கு வகைப்படும். அவை **ரிக், யஜுர், சாமம், அதர்வணம்** என்பதாகும்.

வேதங்களைத் தொடர்ந்து **இராமாயணம், மகாபாரதம்** என்ற வீர காவியங்கள் (இதிகாசங்கள்) தோன்றின.

ஆரியர்கள் குடும்பங்களாக வாழ்ந்தனர். ஒவ்வொரு குடும்பத்திற்கும் தந்தையே தலைவர். அவரே குடும்பப் பொறுப்பை முழுவதும் ஏற்றார். பெண்களும் பெரிதும் உதவினர். கணவர் செய்யும் வேள்விகளில் பெண்டிரும் பங்கு கொண்டனர். சமூகத்தில் பெண்கள் நன்மதிப்பைப் பெற்றிருந்தனர். சிலர் கல்வி கற்று சிறந்து விளங்கினர். அரசனுக்குச் **சபா, சமிதி** என்ற இரு குழுக்கள் உதவி புரிந்தன.

ஆரியர்களின் முக்கிய உணவு கோதுமை, பார்லி, பால் ஆகும். மக்கள் சைவ, அசைவ உணவு வகைகளையும் **சோம பானம், சுரா பானம்** போன்ற பான வகைகளையும் விரும்பினர். கம்பளம், பருத்தியாலான ஆடைகளை நெய்து அணிந்தனர். அணிகலன்கள் ஆண், பெண் இருபாலராலும் விரும்பி அணியப்பட்டன.

தொடக்கக் காலத்தில் ஆரியர்கள் இயற்கையைக் கண்டு பயந்தனர். பின்பு அவற்றையே தேவதைகளாகப் பாவித்து வணங்கினர். அவர்களின் முக்கிய தேவதைகள் **அக்கினி, வருணன், இந்திரன்** ஆகும். பின்பு **பிரும்மா, விஷ்ணு, சிவன்** முதலான தெய்வங்களை வணங்கினர்.

தொடக்கக் காலத்தில் சாதிப் பிரிவினைகள் ஆரியர்களிடையே இருக்கவில்லை. கங்கைச் சமவெளியில் குடியேறியபோதுதான் நான்கு சாதிகள் தோன்றின. செய்யும் தொழிலையொட்டி நான்கு விதமான சாதிகள் ஏற்பட்டன. பின்பு அவை பிறப்பின் அடிப்படையில் மாறின.

### கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய்க :**

1. பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் ஆரிய மக்களின் பூர்விக இருப்பிடம் ——— ஆகும்.
2. ஆரியவர்த்தம் ——— என அழைக்கப்படும்.
3. ஆரம்பத்தில் சாதி ———அடிப்படையில் தோன்றியது.

**II. குறுகிய விடையளிக்கவும் :**

1. வேதங்கள் எத்தனை வகைப்படும் ? அவை யாவை ?
2. வீர காவியங்கள் யாவை ?
3. அக்கால அரசனுக்கு உதவிப் புரிய இருந்த குழுக்கள் யாவை ?

**III. விரிவான விடையளிக்கவும் :**

ஆரியர்களின் நாகரிகம்பற்றி எழுதுக.

### பயிற்சி

1. இந்தியாப் படத்தில் ஆரியர்கள் இந்தியாவிற்கு வந்த வழியினைக் குறிக்கவும்.
2. 'இராமாயண', 'மகாபாரத'க் கதைகளைத் தெரிந்து கொண்டு நாடகங்களாக நடிக்கவும்.

# 4. சமண சமயமும் புத்த சமயமும்

**முன்னுரை**

கி. மு. ஆறாம் நூற்றாண்டில் வட இந்தியாவில் பெரிய சமயத் தலைவர்கள் தோன்றினர். பிறப்பு, இறப்பு, வீடுபேறு (முக்தி) முதலிய விஷயங்களைப்பற்றி அறிஞர்கள் சிந்திக்கலாயினர். அதன் விளைவாகப் புதிய சமயங்கள் தோன்றின. அவை **சமண, புத்த** சமயங்களாகும்.

### சமண, புத்த சமயங்கள் தோன்றக் காரணங்கள்

வேதகால சமயத்தில் சடங்குகள் வடமொழியில் நடத்தப்பட்டன. சாதாரண மக்கள் அவற்றைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

சடங்குகளை நடத்தித் தந்த புரோகிதர்களின் செல்வாக்கு அதிகரித்தது. இதை அநேகர் வெறுத்தனர். சடங்குகள் செய்யப்படும்போது உயிர்ப்பலி கொடுக்கும் முறை இருந்தது. இதையும் மக்கள் வெறுத்தனர். இத்தகைய காரணங்களால் சமண சமயமும் புத்த சமயமும் நம் நாட்டில் தோன்றின.

## சமண சமயம்

சமண சமயத்தைத் தோற்றுவித்தவர் **மகாவீரர்** ஆவார். இவரது இயற்பெயர் **வர்த்தமானர்** என்பதாகும். கி.மு. 599 முதல் 527 வரை இவர் வாழ்ந்தார் என்று சொல்லப்படுகிறது. இவருக்குத் திருமணம் நடைபெற்றது. பின்பு இல்லற வாழ்க்கையை நீக்கித் துறவறத்தை மேற்கொண்டார். இவர் மக்களிடையே காணப்படும் கவலைகளையும் துன்பங்களையும் நீக்க மக்கள் நேர்மையான வாழ்க்கையையும் அகிம்சையையும் கடைப்பிடிக்க வேண்டுமென்றும் கூறினார். இவரது போதனைகள் **த்ரீ இரத்தினங்கள்** எனப்படும். அவை : **நன்னம்பிக்கை, நல்லறிவு, நன்னடத்தை** ஆகும். உடலை வருத்தி உயிர் விடுவதே சிறந்ததாகும் என்று கூறினார். இப்பிறவி தொடர்கிறது என்று நம்பினார். மறுபிறவி நேராமலிருக்கத் தவம் செய்தலே சிறந்த வழி என்று கருதினார். இவர் கடவுள் உண்டு என்பதை மறுத்தார். கொல்லாமை, திருடாமை, எதிலும் பற்றுக்கொள்ளாமை, தன்னை அடக்கிக் கொள்ளுதல் முதலியன இவரின் போதனைகளாகும். ஆனால், வேத சமயக் கொள்கைகளான ஊழ்வினை, மறுபிறப்புக் கொள்கை ஆகியவற்றை ஏற்றுக்கொண்டார்.

## புத்த சமயம்

### புத்தரின் வாழ்க்கை வரலாறு

புத்த சமயத்தைத் தோற்றுவித்தவர் **சித்தார்த்தர்** எனப்படும் **கௌதம புத்தர்.** இவர் கி. மு. 563-ல் கபிலவஸ்துவில் பிறந்தாரென்று சொல்லப்படுகிறது. இளவரசரான இவர் இல்லற வாழ்க்கையைச் சிறிது காலம் நடத்திவிட்டு முடிவில் மகாவீரரைப் போல் துறவியாக மாறினார். இவர் உலக வாழ்க்கையின் இன்னல்களைக் களையவேண்டுமென விரும்பினார். பல பெரியோர்களைச் சந்தித்தார். முடிவில் **கயா** என்னுமிடத்தில் **ஞான ஒளி** பெற்றார். அவர் **புத்தர்** என அழைக்கப்பட்டார். இவர் ஏற்படுத்திய சமயம் புத்த சமயமாகும்.

இவரின் போதனைகள் ஒழுக்கத்தின் அடிப்படையில் எழுந்தன. இவரால் ஏற்பட்ட சமயம் பின்பற்றுவதற்கு எளிதாகவும், எல்லா மக்களுக்கும் பொருந்தும்படியாகவும் இருந்தது. சமண சமயத்தைப் போல் கடும் துறவறத்தைப் போதிக்கவில்லை. இவர் தமது 80 ஆவது வயதில் காலமானார்.

**புத்தரது போதனைகள்**

உலகம் துன்பங்களை உடையது. இத்துன்பத்திற்குக் காரணம் ஆசையே. மக்கள் எண்வகை மார்க்கங்கள் என்ற எண்வகை நல்வழியைப் பின்பற்ற வேண்டுமென்றார். அவை : 1. நன்னம்பிக்கை, 2. நற்சிந்தனை, 3 நற்செயல், 4. நன்மொழி, 5. நல்வாழ்க்கை, 6. நன்முயற்சி, 7. நல்ல நினைவுகள், 8. நல்ல தியானம் ஆகும். இவர் சாதிப் பிரிவினைகளை எதிர்த்தார். இவர் கடவுளைப் பற்றி எதுவும் கூறவில்லை. மறுபிறவியில் நம்பிக்கை கொண்டார். மறுபிறவியிலிருந்து விடுபடுதலை **நிர்வாணம்** என்று கூறினார். இவர் மகாவீரரைப்போல அகிம்சைக் கொள்கையைப் போதித்தார். கடுந்துறவறத்தைப் போதிக்கவில்லை. இவரின் சீடர்களும், அரசர்களும் இச்சமயத்தை மற்ற நாடுகளில் பரப்பினர். அசோகரது ஆட்சிக் காலத்தில் அது உலக சமயமாக மாறியது.

**புத்த சமயத்தில் மாறுதல்**

ஆறு நூற்றாண்டுகளுக்குப் பின், அதாவது கி. பி. முதல் நூற்றாண்டில் கனிஷ்கர் காலத்தில் புத்த சமயத்தில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டது. பழைய சமயமான **ஹீனயானம்** மாறி **மகாயானம்** என்ற புதிய முறை ஏற்பட்டது. ஹீனயான புத்த சமயத்தில் புத்தர் சமயத் தலைவராகவும் சமய போதகராகவும் கருதப்பட்டார். ஆனால், மகாயானத்தில் புத்தர் கடவுளாக்கப்பட்டார். புத்த சமய மகான்கள் **போதிசத்துவர்கள்** என அழைக்கப்பட்டனர். புத்தருக்குக் கோவில்கள் கட்டப்பட்டு சடங்குகள், விழாக்கள் நடத்தப்பட்டன.

**புதிய சமயங்களின் விளைவுகள்**

சமண, புத்த சமயங்கள் நம் நாட்டில் தோன்றியமையால் ஏற்பட்ட விளைவுகளைக் கவனிப்போம். இச்சமயங்களால் இந்து சமயத்தில் காணப்பட்ட குறைகளை மக்கள் நீக்கினர். இந்துசமயம் புனிதமடைந்தது. சாதிக் கொடுமைகள் கொஞ்சம் குறைந்தன. புத்த விகாரங்களும் மடாலயங்களும் கட்டப்பட்டதால் **சிற்பக்கலை** வளர்ச்சியுற்றது. கனிஷ்கர் காலத்தில் **இந்தியக் கலையும் கிரேக்கக் கலையும்** இணைந்து **காந்தாரக் கலை** தோன்றியது.

### புத்த சமயம் இந்தியாவில் மறையக் காரணங்கள்

புத்த சமயம் **அசோகர், கனிஷ்கர்** ஆகிய மன்னர்களின் முயற்சியால் பல நாடுகளுக்கும் பரவி உலக சமயங்களில் ஒன்றானது. ஆனால், இந்தியாவில் மறையத் தொடங்கியது. இதற்கான காரணங்களை ஆராய்வோம். இந்து சமயம் புனிதமடைந்து புத்துயிர் பெற்றது. அசோகர், கனிஷ்கர் போன்ற அரசர்களுக்குப் பின் புத்த சமயம் அரசர்களால் ஆதரிக்கப்படவில்லை. மடாலயங்களில் ஊழல்கள் மலிந்தன. மகாயானப் பிரிவில் புத்தர் கடவுளாகக் கருதப்பட்டு அவரது உருவங்களை வழிபடும் முறை தோன்றியது. கடவுள்களை உருவங்களில் வழிபடுதல் இந்து சமயத்தில் காணப்படும் பழக்கமாகும். எனவே, புத்த சமயத்திற்கும் இந்து சமயத்திற்கும் வேறுபாடு இல்லாமல் போயிற்று. இந்து சமயம் வளைந்து கொடுக்கும் தன்மையைக் கொண்டிருந்ததால் புத்த சமயக் கருத்துகளில் சிறந்தவைகளை இந்து சமயத்தவர் பின்பற்றத் தொடங்கினர். குப்தர்கள், இராஜ புத்திரர்கள் இந்து சமயத்தை ஆதரித்தனர். **சங்கரர், இராமானுஜர், மத்துவர்** போன்ற இந்து சமயாச்சாரியர்களும், **நாயன்மார்களும், ஆழ்வார்களும்** தோன்றி இந்து சமயத்திற்குப் புத்துயிர் அளித்தனர். அதன் காரணமாக இந்து சமயம் மக்களிடையே நன்கு பரவலாயிற்று. புத்த சமயம் நம் நாட்டில் மறைந்தது.

### கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய்க :**

1. புத்தரின் இயற்பெயர் ————, அவர் ———— என்னுமிடத்தில் பிறந்தார்.
2. மகாவீரரின் இயற்பெயர் ————.
3. புத்த சமயத்தில் ————, ———— என்ற இரு பிரிவுகள் காணப்பட்டன.
4. கனிஷ்கர் காலத்தில் ———— என்னும் புதிய கலை தோன்றியது.
5. காந்தாரக் கலை ————, ———— கலைகள் இணைந்தவையாகும்.

**II. குறுகிய விடையளிக்கவும் :**

1. மகாவீரரின் போதனைகள் யாவை ?
2. புத்தரின் போதனைகள் யாவை ?

3. ஹீனயானம், மகாயானம் என்றால் என்ன ?
4. சமண, புத்த சமயங்கள் ஏற்பட்டதன் விளைவுகள் யாவை ?
5. புத்த சமயம் இந்தியாவில் அழியக் காரணங்கள் யாவை ?

**III. விரிவான விடையளிக்கவும் :**

1. புத்தரின் வாழ்க்கை வரலாற்றையும், புத்த சமயக் கொள்கைகளையும் எழுதுக.
2. மகாவீரரின் வாழ்க்கை வரலாற்றையும், போதனை களையும் விவரிக்கவும்.

**பயிற்சி**

1. ஆசியாப் படத்தில் புத்த சமயம் பரவியுள்ள நாடு களைக் குறிக்கவும்.
2. மகாவீரர், புத்தர் இவர்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து நாடகமாக நடிக்கவும்.

# 5. மேற்கு ஆசியாவின் பண்டையப் பேரரசுகள்

**முன்னுரை**

தென்மேற்கு ஆசியா வரலாற்றுப் புகழ்பெற்ற பகுதியாகும். இப்பகுதியில் பழங்காலத்தில் அநேகப் பேரரசுகள் தோன்றின. இது ஸொராஸ்டிரியன், கிறிஸ்தவம், இஸ்லாம் ஆகிய சமயங்கள் தோன்றின பாகமாகும். **இடைக்காலத்தில்** இங்கு சிலுவைப் போர்கள் நடந்தன. நவீன காலத்தில் ஐரோப்பிய வல்லரசுகள் தங்கள் ஆதிக்கத்தை அங்கு நிறுவப் போட்டியிடுகின்றன. அண்மைக் காலத்தில் எண்ணெய் வயல்கள் கண்டுபிடிக்கப்பட்டு அது செல்வம் கொழிக்கும் பகுதியாக விளங்குகிறது. அத்துடன் அராபிய, இஸ்ரேல் தகராறின் காரணமாகவும், வல்லரசுகளின் மறைமுகத் தலையீடு காரணமாகவும் மேற்கு ஆசியா அமைதியற்ற பகுதியாக இருக்கிறது. ஆசியா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா ஆகிய மூன்று கண்டங்கள் கூடும் இந்தக் கேந்திர பூமியில் தோன்றிய பழங்காலப் பேரரசுகளைக் கவனிப்போம்.




படம் 6. அஸிரியப் பேரரசு

## அஸிரியப் பேரரசு

தென்மேற்கு ஆசியாவில் டைக்ரிஸ், யூப்ரடிஸ் நதிகள் பாயும் பகுதி 'மெசபடோமியா' என்று இன்று அழைக்கப்படுகிறது என நாம் அறிந்திருக்கின்றோம. 'மெஸ்பாட்' என்றால் இரண்டு நதிகளுக் கிடையேயுள்ள பகுதி என்று பெயர். இந்தப் பகுதியின் வடகிழக்குப் பாகம் மலைப்பாங்கான மேட்டு நிலமாகும். அம்மேட்டு நிலம் ஆரம்பத்தில் **அஸ்ஸூர்** எனவும், பின்னர் **அஸிரியா** என்றும் வழங்கப்பட்டது. முதன்முதலாக அப்பகுதியில் யார் குடியேறி னார்கள் என்று திட்டவட்டமாகக் குறிப்பிடுவதற்கில்லை. ஏறத்தாழ கி.மு. 3,000-ல் **செமிட்டிக்** இனத்தவர் அஸ்ஸூரில் குடியேறி நகர அரசுகளை அமைத்தனர். முக்கிய நகரங்கள் அஸ்ஸூர், நினிவே ஆகும். பல நூற்றாண்டுகளாக அவர்கள் பிறநாட்டினரால் ஆளப் பட்டுவந்தனர். பாபிலோனிய அரசர் **ஹமுராபி** ஆதிக்கத்தின்கீழும் பின்னர் **ஹிட்டைட்** கூட்டத்தினரின் ஆதிக்கத்தின்கீழும் அஸிரியா இருந்தது. இவர்கள் **அஷூர்** என்ற போர் இடி தெய்வத்தையும் **இஷ்டார்** என்ற போர் செழுமைக் கடவுளையும் வழிபட்டுவந்தனர்.

ஏறத்தாழ கி.மு. 1,250-ல் அஸிரியர் சுதந்திரமடைந்து ஒரு தனி அரசை நிறுவினர். அஸிரிய அரசர் முதலாம் **ஷால்மனேசர்** ஹிட்டைட்டுகளுக்கு எதிராகப் படையெடுத்து பாபிலோனைக் கைப்பற்றி, அவர்களை டைக்ரிஸ்-யூப்ரடிஸ் நதிக் கரையிலிருந்து விரட்டினார்.

### 1. முதலாம் திக்லத் பிலேசர்

ஏறக்குறைய கி.மு. 1,100-ல் அஸிரிய அரசரான **முதலாம் திக்லத் பிலேசர்** என்பவர் அஸிரிய இராச்சியத்தை விரிவடையச் செய்தார். இப்பேரரசின் தலைநகரம் **நினிவே** நகரமாகும். கடற் கரைப்பகுதியிலுள்ள சைடன், பிப்ளான் ஆகிய துறைமுகங்களி லிருந்து கப்பம் பெற்றார். அவர் தம் இராச்சியத்தில் பல அரண் மனைகளையும் ஆலயங்களையும் நிர்மாணித்தார். தோட்டங்களும் பூங்காக்களும் அமைத்து அவற்றில் தாம் வென்ற நாடுகளிலிருந்து கொண்டுவந்த அழகிய செடிகளை நட்டு அழகுபடுத்தினார். நீர் இறைக்கும் இயந்திரங்களைப் பழுதுபார்த்து அவர்தம் மக்களுக்கு நீர்ப்பாசன வசதியைப் பெருக்கினார். தானியங்களை மக்களுக்காகச் சேமித்து வைத்தார்.

திக்லத் பிலேசருக்குப் பின் வந்த அரசர்கள் திறமையற்றவர் களாக இருந்தனர். அதனால் அஸிரியாவின் மேற்குப் பகுதிகளை

அவர்கள் இழந்து அஸ்ஸூர், நினிவே ஆகிய இரண்டு நகரங்களைச் சுற்றி மட்டும் வாழ்ந்துவரும் சிறிய கூட்டத்தினராயினர்.

## II. இரண்டாம் சார்கான்

கி.மு. 725 - ல் அஸிரியர்கள் மறுபடியும் ஆதிக்கம் பெற்றனர். இரண்டாம் சார்கான் என்ற ஒரு தளகர்த்தர் புதிய அரச வமிசம் ஒன்றை நிறுவினார். அவர் கால்டியர்களையும் எலமைட்டுகளையும் வெற்றி கொண்டார். அவர் நினிவே நகருக்கு வடக்கில் சார்கன்பர்க் என்ற புதிய நகரை நிர்மாணித்தார்.

## III. சென்னா செரிப்

சார்கானுக்குப்பின் அவரது மகன் **சென்னா செரிப்** அரசரானார். அவர் பாபிலோனைத் தாக்கி பாழ்படுத்திவிட்டு, தமது பேரரசின் தெற்குப் பகுதிக்குத் தமது மகனை கவர்னராக்கினார். நினிவே நகரத்தில் அழகான கட்டடங்கள் பல கட்டப்பட்டன. அவர் புதிய தொரு தபால் முறையை ஏற்படுத்தினார். அவர் நினிவே நகரத்தில் சாலைகளைத் திருத்திப் பெரிதாகவே அமைத்தார். அந்நகருக்குப் போதிய அளவு நல்ல குடிநீர் வசதி அளித்தார். இந்தியாவிலிருந்து அவர் பருத்திச் செடிகளைத் தருவித்துத் தம் நாட்டில் சாகுபடி செய்ய ஏற்பாடு செய்தார்.

## IV. அஸூர்பானிபால்

அஸிரியப் பேரரசர்களுள் முக்கியமானவர் **அஸூர்பானிபால்.** அவர் சென்னாசெரிபின் பேரர். அவரது ஆட்சிக் காலம் அஸிரியப் பேரரசின் பொற்காலமாகும். பேரரசின் தலைநகரான நினிவே அக் காலத்தில் மிகவும் புகழ்பெற்று விளங்கியது. அந்நகரில் பல மொழி பேசும் மக்கள் இருந்தனர். நினிவே நகரில் சிறந்த நூல் நிலையம் அமைக்கப்பட்டு இலக்கியம், விஞ்ஞானம், சமயம் பற்றிய கருத்துகள் அடங்கிய 22,000 மண்ணேடுகள் வைக்கப்பட்டன. நாட்டில் வாணிகம் சுறுசுறுப்பாகச் சிறந்தோங்கியது. வங்கிகள் தோன்றின. நாணய முறை ஏற்பட்டது. அவரே அஸிரியாவின் கடைசிப் பேரரசர் ஆவார்.

அஸிரிய மன்னர்கள் வரம்பில்லா அதிகாரம் பெற்றிருந்தனர். அவர்கள் பிறப்பால் அஸிரியர்களாக இருந்தவர்களையே தங்கள் நாட்டின் மாநில கவர்னர்களாக நியமித்தார்கள். மாநில கவர்னர்கள் அரசரிடம் மிக்க விசுவாசத்துடன் நடந்து கொண்டனர். மத குருமார்களுக்கு மிகுந்த செல்வாக்கு இருந்தது.

மன்னர்களின் ஆட்சி இராணுவ ஆட்சியாக விளங்கியது. இராணுவத்தில் தேர்ப்படை, குதிரைப்படை, காலாட்படை, ஆகியவை அடங்கியிருந்தன. வில், அம்பு, ஈட்டி முதலியன அவர்களின் முக்கிய ஆயுதங்களாகும். போரில் எதிரிகளிடம் கைப்பற்றிய பொருள்களில் ஒரு பங்கு படை வீரர்களுக்கும் கிடைத்தது.

அஸிரியர்களின் சட்டம் மிகவும் கொடுமையானது. 'கண்ணுக்குக் கண்', பல்லுக்குப் பல்' என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்ட ஹமுராபி சட்டத்தையும்விட மிக்க கடுமையானது. சிறிய குற்றங்களுக்கும் கடுமையான தண்டனை வழங்கப்பட்டது. காதுகளையும் மூக்குகளையும் அறுத்தல், கசையடி கொடுத்தல் முதலியவைதான் குறைந்த தண்டனைகளாகும்.

அஸுர்பானியாலுக்குப் பின் அஸிரியப் பேரரசு வீழ்ச்சியுற்றது. நாட்டில் கலகங்கள் தோன்றின. வாரிசுரிமைபற்றிச் சச்சரவுகள் ஏற்பட்டன. மாநில கவர்னர்கள் சுயேச்சை பெற்றனர். அஸிரியப் பகுதிகளை கால்டியர்களும் மீடியர்களும் கைப்பற்றினர். அஸிரியப் பேரரசு அழிந்தது.

## பாபிலோனியப் பேரரசு

### I. முதல் பாபிலோனியப் பேரரசு. அமோரைட் பேரரசு—ஹமுராபி

மேற்கு ஆசியாவில் பாபிலோனைத் தலைநகராகக்கொண்ட பேரரசுகள் இரண்டு தோன்றின. ஒன்று அமோரைட் பேரரசு. மற்றொன்று கால்டியப் பேரரசு. டைக்ரிஸ், யூப்ரட்டிஸ் ஆறுகளின் சமவெளியில் சுமேரியர் என்ற இனத்தினர் ஒரு சிறந்த நாகரிகத்தை வளர்த்தனர் என்று இரண்டாவது பாடத்தில் படித்தோம். ஏறத்தாழ கி.மு. 2,750-ல் அக்காடிய இனத்தவர் சுமேரியாவைக் கைப்பற்றி, சுமேரிய நாகரிகத்தை ஏற்றுக்கொண்டனர். சுமார் கி. மு. 2,200-ல் **அமோரைட்** என்ற இனத்தவர் அக்காடிய சுமேரியர்களைத் தோற்கடித்துத் தங்களது ஆதிக்கத்தை நிறுவினர். அவர்களது தலைசிறந்த மன்னர் **ஹமுராபி** என்பவர் ஆவார். இந்த அமோரைட் பேரரசே முதல் பாபிலோனியப் பேரரசு ஆகும்.

ஹமுராபி மெசபொடோமியா முழுவதையும் வென்று, அஸிரியாவையும் வென்று தம் ஆட்சிக்குட்படுத்தினார். நாட்டில் தானியங்கள் மிகுந்திருந்தன. ஆடுகளும் பிற கால்நடைச் செல்வங்களும்

மிகுதியாக இருந்தன. கம்பள நெசவு மக்களின் முக்கியத் தொழிலாகும்.

ஹமுராபி சிறந்த நிர்வாகி. சட்டத் தொகுப்பு அவரது சிறந்த சாதனையாகும். அவர் சட்டங்கள் இயற்றி நன்முறையில் செயல் படுத்தினார். சட்டங்கள் சுமார் 2½ மீட்டர் உயரமுள்ள கல்லில் செதுக்கி வெளியிடப்பட்டன. அக்கல்லின் உச்சியில், ஹமுராபி, சூரியக் கடவுளிடமிருந்து சட்டத்தைப் பெறுவது போன்ற காட்சி பொறிக்கப்பட்டிருந்தது. அச்சட்டங்கள் செமிட்டிக் மொழியிலிருந்தன. குற்றங்களுக்குக் கடுமையான தண்டனைகள் விதிக்கப்பட்டன. 'கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல்' என்ற கொள்கை அதற்கு உதாரணமாகும். குற்றங்களை விசாரிப்பதற்கு நீதிமன்றங்கள் இருந்தன. அரசரே இறுதியாக நீதி வழங்குபவராவார்.

அவர் ஆட்சிக்காலத்தில், பாபிலோனியாவில் ஆலயங்கள் கல்வி நிலையங்களாக இருந்தன. கல்வி பயில்வோர் மிருதுவான களிமண் பலகையில் எழுதினர். மதகுருமார்கள் மிகுந்த செல்வாக்கும் அதிகாரமும் பெற்றிருந்தனர். பாபிலோனியர் **மார்டுக்** என்ற தெய்வத்தை வணங்கினர். வான சாஸ்திரம், கணித சாஸ்திரம் போன்ற கலைகளில் மக்கள் சிறந்து விளங்கினர். சமூகத்தில் உயர் வகுப்பினர், நடுத்தர வர்க்கத்தினர், அடிமைகள் ஆகிய மூன்று பிரிவினர் இருந்தனர். பெண்களுக்குத் தகுந்த மதிப்பு அளிக்கப் பட்டது. இவ்வாறு சிறப்புப் பெற்றிருந்த பாபிலோனியாவைச் சுமார் கி.மு. 1925-ல் ஹிட்டைட் என்ற இனத்தவர் கைப்பற்றினர். முதல் பாபிலோனியப் பேரரசு வீழ்ச்சியடைந்தது.

## II. இரண்டாவது பாபிலோனியப் பேரரசு—கால்டியப் பேரரசு

ஏறக்குறைய கி.மு. 825-ல் **நெபோப்பாலாஸர்** என்ற கால்டியர் பாபிலோனியாவைக் கைப்பற்றி, தமது அரசை நிறுவினார். இதுதான் இரண்டாவது பாபிலோனியப் பேரரசு. அவர் மார்டுக் தெய்வத்திற்குப் பெரிய கோயில் கட்டினார். அவருக்குப் பின் அவரது மகன் **நேபுகாத் நேஸர்** அரசரானார்.

### நேபுகாத் நேஸர் (கி மு. 604 — 561)

நேபுகாத்நேஸரின் ஆட்சிக் காலம் 'பாபிலோனின் பொற்காலம்' என அழைக்கப்படுகிறது. அவர் சிறந்த வெற்றி வீரர். அவர் மீடிய இளவரசியை மணந்து மீடியர்களின் உதவியுடன் நாட்டின் வடக்கு




படம் 7. பாபிலோனிய, மீடியப் பேரரசுகள்

எல்லைப் பிரதேசங்களைப் பாதுகாத்தார். அவர் எகிப்து, பினிஷியா ஆகிய நாடுகளை வென்றார். பின்னர் அவர் ஜெருசலத்தை முற்றுகை



படம் 8. பாபிலோன் நகர வாசல்

யிட்டு அதைப் பாழ்படுத்தி, அங்கிருந்து ஆயிரக்கணக்கான யூதர்களைக் கைதிகளாகப் பிடித்து பாபிலோனுக்குக் கொண்டு சென்றார். சிரியா, பாலஸ்தீனம் அவரது ஆதிக்கத்திற்குள் இருந்தன.

நேபுகாத் நேஸர் அடிக்கடி போரில் ஈடுபட்ட போதிலும் பாபிலோனை அழகுபடுத்துவதில் மிகுந்த கவனம் செலுத்தினார். அவரே திறமை வாய்ந்தக் கட்டடக் கலைஞர் ஆவார். பாபிலோனில் அழகிய கட்டடங்கள் கட்டினார். மன்னர், தமது மனைவியை மகிழ் வூட்டுவதற்காக அரண்மனை மாடியின் மேல்தளத்தில் அழகிய பூங்காக்களை அமைத்தார். பல வண்ண மலர்ச்செடிகளையும் மரங் களையும் அங்கு வளர்த்தார். இவை 'பாபிலோனின் தொங்கும் தோட்டங்கள்' என்றழைக்கப்பட்டன. இவற்றின் பெருமை

உலகெங்கும் பரவி கிரேக்கர்கள் அவற்றைப் பழங்கால ஏழு உலக அதிசயங்களில் ஒன்றாகக் கருதினர்.

நாட்டில் வாணிகம், கலை, விஞ்ஞானம் வளர்ச்சியுற்றன. வான நூல் அறிவும் மக்களிடம் வளர்ச்சி பெற்றிருந்தது. நேபுகாத்நேஸர் ஆட்சிக்காலத்தில் நாடு பல துறைகளிலும் சிறப்புற்றிருந்தது. அவருக்குப்பின் வந்தவர்கள் திறமையற்றவர்கள். அதனால் பாபிலோனியப் பேரரசு வீழ்ச்சியடைந்தது. கி. மு. 539-ல் சைரஸ் என்ற பாரசீக மன்னரால் பாபிலோன் கைப்பற்றப்பட்டது. இரண்டாம் பாபிலோனியப் பேரரசு மறைந்தது.

## மீடியப் பேரரசு

மீடியர்கள் ஈரான் பீடபூமியின் வடக்கு, மத்தியப் பகுதிகளில் வாழ்ந்தனர். தெற்குப் பகுதியில் பாரசீகர்கள் வாழ்ந்தனர். மீடியர்களும் பாரசீகர்களும் ஆரிய இனத்தைச் சேர்ந்தவர்கள்.

### I. டியோசஸ்

ஈரான் பீடபூமியில் டியோசஸ் என்ற மீடிய அரசர் கி. மு. எட்டாம் நூற்றாண்டில் தம் அரசை நிறுவினார். அவரது ஆட்சிக்காலம் கி.மு. 708 முதல் கி.மு. 655 வரை ஆகும். அரசின் தலைநகர் எக்படானா. மீடியர்கள் போர் புரிவதில் வல்லவராக விளங்கினர்.

### II. சையாக்ஸரஸ்

மீடிய அரசர்களுள் தலைசிறந்தவரான சையாக்ஸரஸ் கி.மு. 625 முதல் கி. மு. 593 வரை ஆட்சி புரிந்தார். அவர் மீடியர்களை ஒருங்கிணைத்து மீடியாவை வலிமை மிகுந்த நாடாகச் செய்தார். அவர் சிறிய ஆசியாவிலிருந்த லிடியர்களுடன் போரிட்டு, ஹாலிஸ் நதியைத் தம் பேரரசின் மேற்கு எல்லையாக ஆக்கினார். வடக்கில் அவரது பேரரசு எல்பர்ஸ் மலைத்தொடர் வரை பரவியிருந்தது. கிழக்கில் பார்த்தியர்கள் அவரது ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டனர். தெற்கில் பாரசீகம் அவரது ஆட்சியை ஏற்றுக்கொண்டிருந்தது.

### III. அஸ்டியாஜிஸ்

சையாக்ஸரஸ் இறந்தபின் அவரது மகன் அஸ்டியாஜிஸ் அரசரானார். அவர் கி. மு. 593 முதல் கி.மு. 550 வரை ஆட்சி செய்தார். அவர் திறமையற்ற அரசர். பாரசீக மன்னர் சைரஸ் மீடியாவைக் கைப்பற்றிப் பாரசீகத்தின் ஒரு பகுதியாகச் செய்தார்.

## பாரசீகப் பேரரசு

பாரசீகர்களும் ஆரிய இனத்தைச் சார்ந்தவர்களென்றும், அவர்கள் ஈரான் பீடபூமியின் தென்பகுதியில் வாழ்ந்து வந்தனர் என்றும் அறிந்தோம். மீடியர்கள் வலிமை பெற்றிருந்த காலத்தில், பாரசீகர் அவர்களது ஆட்சிக்குட்பட்டிருந்தனர்.




படம் 9. முதலாம் டேரியஸ் காலத்துப் பாரசீகப் பேரரசு

### I. மகா சைரஸ் (கி. மு. 550 — 528)

சைரஸ் பாரசீக மன்னர்களுள் தலைசிறந்தவர். இவர்தான் முதலில் பாரசீகத்தை விரிவுபடுத்தி ஒரு பேரரசு அமைப்பதில் வெற்றி கண்டார். இவர் முதலில் மீடியாவை வென்றார். பின்னர் இவர் மீடியா, பாபிலோனியா, சிரியா ஆசிய நாடுகளை வென்று பேரரசை நிறுவினார். ஆசிய மைனரின் மேற்குக் கடற்கரையோரத்தில்

இருந்த கிரேக்கக் குடியேற்றங்களைத் தமது ஆட்சிக்குட்படுத்தினார். கி.மு. 528-ல் சைரஸ் போரில் கொல்லப்பட்டார்.

## II. காம்பைசிஸ் (கி. மு. 528 — 521)

சைரஸுக்குப்பின் காம்பைசிஸ் கி. மு. 528 முதல் கி. மு. 521 வரை அரசு புரிந்தார். அவர் எகிப்தை வென்றார்.

## III. முதலாம் டேரியஸ் (கி. மு. 521 — 485)

காம்பைசிஸுக்குப்பின் முதலாம் டேரியஸ் பாரசீகப் பேரரசை ஆட்சி செய்தார். அவரது ஆட்சியில் அமைதி நிலவியது. அவர் ஐரோப்பாவிலுள்ள திரேஸ் பகுதியைக் கைப்பற்றினார். இந்தியாவின் மீது படையெடுத்துச் சிந்துவிலும் பஞ்சாப்பிலும் தமது ஆதிக்கத்தை நிலைநாட்டினார். ஆசிய மைனர் மேற்குக் கடற்கரையிலுள்ள கிரேக்கர்கள் கி. மு. 499-ல் அவரது ஆட்சியை எதிர்த்தனர். அவர்களுக்குக் கிரேக்க நகர அரசான ஏதென்ஸ் உதவி செய்தது. அதனால் டேரியஸ் அக்கிரேக்கர்களை அடக்கித் தண்டித்தபின், ஐரோப்பாவிலுள்ள கிரேக்க நாட்டின்மீது படையெடுத்தார். அப்பாரசீகப் படை கி. மு. 490-ல் **மாரதான்** என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் ஏதென்ஸ் நகரப் படையினால் முறியடிக்கப்பட்டது. மாரதான் வெற்றி உலக வரலாற்றில் முக்கியத்துவம் பெற்றுள்ளது. ஒரு சிறிய ஐரோப்பிய நகரப் படை ஓர் ஆசியப் பேரரசின் பெரிய படையை முறியடித்த நிகழ்ச்சி ஐரோப்பாவின் வளர்ச்சியின் முதற்படியாகும். ஏதென்ஸைப் பழி வாங்கும் வேலை அவரது மகன் ஸெர்ஸஸ் என்பவரிடம் விடப்பட்டது.

### டேரியஸ் காலப் பாரசீக ஆட்சி முறை

டேரியஸ் பாரசீகப் பேரரசின் சிறந்த ஆட்சி முறையை ஏற்படுத்தினார். பாரசீகம் நீங்கலாக மற்றப் பேரரசுப் பகுதிகளை இருபது சத்ரபிகள் என்ற மாநிலங்களாகப் பிரித்து ஒவ்வொன்றிலும் சத்ரபர் என்ற கவர்னரை நியமித்தார். இந்தியப் பகுதி (பஞ்சாப், சிந்து மாநிலங்கள்) 20 ஆவது சத்ரபியாகும். சத்ரபர்கள் தங்கள் சத்ரபிகளில் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டி வந்தனர். அவர்களே மக்களிடமிருந்து வரி வசூலித்து, மக்களுக்கு நீதியும் வழங்கி வந்தனர்.

பேரரசின் தலைநகர் சூஸா என்பதாகும். இதைத் தவிர பெர்ஸி பாலிஸ், பாபிலோன், பசார்கடே என்ற முக்கிய நகரங்களிலும் அரண் மனைகள் இருந்தன. பேரரசின் முக்கிய பகுதிகளைச் சாலைகள் இணைத்தன. செய்திகளைக் கொண்டுசெல்வதற்கு அஞ்சல் முறை



படம் 10. பெர்ஸிபாலிஸ் அரண்மனை

ஏற்படுத்தப்பட்டது. அரசு தூதுவர்கள் குதிரைமீதோ அல்லது ஒட்டகத்தின் மீதோ அல்லது நடந்தோ சென்று செய்திகளைப் பேரரசுப் பகுதிகளில் கொண்டு சேர்த்தனர்.

பேரரசர் சர்வாதிகாரியாக விளங்கினார். அவர் பாரசீக, மீடிய பிரபுக்களையும் கலந்து நிர்வாகத்தை நடத்தினார். இவர் இட்டதே சட்டம் ஆகும். பாரசீகம் பாபிலோனியச் சிற்பக்கலையைப் பின்பற்றியது.

பாரசீகர்களும் மீடியர்களும் ஸொராஸ்டிர சமயத்தைப் பின் பற்றினர். கி. மு. ஆறாவது நூற்றாண்டில் **ஸொராஸ்டிரர்** என்பவர் ஒரு சமயத்தைத் தோற்றுவித்தார். ஸொராஸ்டிரரின் போதனைகள் **செயின்ட் அவெஸ்டா** என்ற நூலில் விவரிக்கப்பட்டுள்ளன. 'இரண்டு கொள்கைகள் உலகை வெற்றி கொள்ள முயல்கின்றன. ஒன்று, நல்ல கொள்கைகள் மற்றொன்று கெட்ட கொள்கைகள். நல்லதிற்கு அறிகுறியாக **மஸ்தா** அல்லது **ஆர்மஸ்டு** என்ற கடவுள் விளங்குகிறது. கேட்டிற்கு அறிகுறியாக அரிமான் விளங்குகிறது. இவ்விரண்டில் ஒன்றைப் பின்பற்றுபவர்கள் அதற்குரியப் பலனை அடைவர்'

என்று ஸொராஸ்டிரர் குறிப்பிட்டுள்ளனர். இந்து மதம் இந்தியாவிலுள்ள பார்ஸி மக்களால் பின்பற்றப்பட்டு வருகிறது. அவர்களுள் பெரும்பாலோர் பம்பாயில் வசிக்கின்றனர்.

## IV. ஸெர்க்ஸிஸ்

டேரியஸ் இறந்தபின் பாரசீக அரசரான ஸெர்க்ஸிஸ் கிரேக்கர்களை முறியடிக்க உறுதி பூண்டார். கி. மு. 480-ல் அவர் மாபெரும் தரைப்படை, கப்பற்படையுடன் கிரேக்க நாட்டின்மீது படையெடுத்தார். பாரசீகப் படையை ஸ்பார்ட்டா நாட்டினரும் ஏதென்ஸ் நாட்டினரும் முக்கியமாக எதிர்க்க வேண்டியதாயிற்று. ஸ்பார்ட்டா கிரேக்கப் படைக்குத் தலைமை தாங்கியது. தெற்கு கிரீஸின் வாயிலான **தெர்மோபைலி** என்ற கணவாயில் ஸ்பார்ட்டா மன்னரான **லியோனிடாஸ்** என்பவர் ஒரு படையுடன் ஸெர்க்ஸிஸ் படையைக் கடுமையாக எதிர்த்தார். ஆனால், பாரசீகர்கள் முன்னேற்றத்தைத் தடுக்க முடியவில்லை. பாரசீகப் படை ஏதென்ஸ் நகரைத் தாக்கி அதைத் தீக்கிரையாக்கியது. ஏதென்ஸ் நகரை அழித்த மகிழ்ச்சியில் பாரசீகர்கள் இருந்தபோது ஏதென்ஸின் கடற்படைத் தளபதியான **டெமிஸ்டோ கிளிஸின்** முயற்சியால் கிரேக்கக் கப்பற்படை, பாரசீகக் கப்பற்படையை கி. மு. 480-ல் **சலாமிஸ்** வளைகுடாவில் தோற்கடித்தது. கி.மு. 479-ல் **பிளாட்டியா** போரில் கிரேக்கப் படை பாரசீகத் தரைப்படையை முறியடித்தது. தொடர்ந்து கிரேக்கப் படை ஆசியா மைனர் கடற்கரையிலுள்ள **மைக்கேல்** என்னும் இடத்தில் நடைபெற்ற கடற்போரிலும் பாரசீகக் கடற்படையைத் தோற்கடித்தது. எனவே, பாரசீகர்கள் கிரீஸிலிருந்து பின்வாங்கிச் சென்றனர்.

## V. பாரசீகப் பேரரசின் வீழ்ச்சி

ஸெர்க்ஸிஸுக்குப் பின் திறமையற்ற மன்னர்கள் பாரசீகப் பேரரசை ஆண்டுவந்தனர். **மூன்றாம் டேரியஸ்** பாரசீகப் பேரரசராக இருந்தபோது கிரேக்க மன்னர் **அலெக்சாண்டர்** பாரசீகத்தின்மீது படையெடுத்தார். அவர் **இஸ்ஸஸ், காகமீலா** அல்லது **ஆர்பிலா** முதலிய இடங்களில் பாரசீகப் படைகளை முறியடித்து, பாரசீகத் தலைநகரைக் கைப்பற்றினார். அப்பொழுது பாரசீக மன்னராக இருந்த மூன்றாம் டேரியஸ் கொல்லப்பட்டார். அவருடைய ஒரே மகளான **ஸ்டாட்டிராவை** அலெக்சாண்டர் மணம் புரிந்து தாம் 'பாரசீகப் பேரரசர்' என்று பிரகடனஞ் செய்தார். பாரசீகப் பேரரசு அலெக்சாண்டர் பேரரசின் ஒரு பெரும் பகுதியாக விளங்கியது.

## கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களை நிரப்புக :**

1. அஸ்ஸிரியர்கள் ————, ———— என்ற தெய்வங்களை வழிபட்டனர்.
2. பாபிலோனியரின் முக்கிய தெய்வம் ———— ஆகும்.
3. மீடியாவை ———— என்ற பாரசீக மன்னர் கைப்பற்றினார்.
4. ஸொராஸ்டிரரின் போதனைகள் ———— என்ற நூலில் அடங்கியுள்ளன.

**II. சுருக்கமான விடை தருக :**

1. அஸ்ஸிரியா என்பது எது ?
2. அஸ்ஸிரியாவை ஆண்ட மன்னர்கள் யாவர் ?
3. அஸ்ஸிரியர்களின் வீழ்ச்சிக்குக் காரணங்கள் யாவை ?
4. பாபிலோனின் தொங்கும் தோட்டங்கள், மாரதான் போர் இவைகளைப் பற்றி குறிப்பு எழுதுக.
5. ஸொராஸ்டிரரின் போதனைகள் யாவை ?

**III. விரிவான விடை தருக :**

1. சென்னாசெரீப் ஆட்சிக் காலத்தில் எவ்வாறு அஸ்ஸிரியப் பேரரசு சிறந்து விளங்கியது என்பதை விவரிக்கவும்.
2. ஹமுராபியின் ஆட்சியை விவரிக்கவும்.
3. டேரியஸின் ஆட்சி முறையை விவரிக்கவும்.
4. பாரசீகர்களுக்கும் கிரேக்கர்களுக்குமிடையே நிகழ்ந்த போர்களை எழுதுக.

### பயிற்சி

1. தென்மேற்கு ஆசியாப் படத்தில் மீடிய, அஸ்ஸிரிய, பாபிலோனிய, பாரசீகப் பேரரசுகளைத் தனித்தனியே குறித்து அவற்றின் தலைநகரங்களையும் குறிப்பிடுக.
2. பண்டைய பேரரசர்களின் படங்களைச் சேகரித்து வைக்கவும்.

# 6. மகா அலெக்சாண்டர் (கி.மு. 336—323)

## முன்னுரை

உலக வரலாற்றில் மாபெரும் வீரர்கள் பலர் தோன்றியுள்ளனர். அவர்களுள் முக்கியமானவர்கள் கி.மு. நான்காம் நூற்றாண்டில் கிரேக்க நாட்டில் தோன்றிய **மகா அலெக்சாண்டரும்**, கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் ஆப்பிரிக்காவின் வடபகுதியில் இருந்த கார்த்தேஜ் நகரத்தில் புகழ் பெற்று விளங்கிய **ஹானிபால்** தளகர்த்தரும் கி.மு. முதல் நூற்றாண்டில் ரோமப் பேரரசை விரிவுபடுத்திய **ஜூலியஸ் சீசரும்**, கி.பி. 13ஆம் நூற்றாண்டில் ஆசிய, ஐரோப்பிய மக்களைக் கதிகலங்கச் செய்வித்த மங்கோலிய தளகர்த்தரான **செங்கிஸ்கானும்** 18, 19ஆம் நூற்றாண்டுகளில் பிரான்சில் தோன்றிய பேரரசர் **நெப்போலியனும்** உலகப் புகழ்பெற்ற மாவீரர்கள் ஆவர். இப்பாடத்தில் மகா அலெக்சாண்டரைப்பற்றிப் படிப்போம்.

## இளமைப் பருவம்

பால்கன் தீபகற்பம் பழைய காலத்தில் கிரீஸ் என அழைக்கப் பட்டது. கிரீஸின் வடபகுதியில் அமைந்துள்ள மாசிடோனியா என்னும் இராச்சியத்தில் கி.மு. 359-ல் **இரண்டாம் பிலிப்** என்பவர் அரசரானார். அவர் அரசரான பொழுது கிரீஸில் உள்ள நகரங்கள் ஒன்றுக் கொன்று சண்டையிட்டுக்கொண்டிருந்தன. பிலிப் அரசர் கிரீஸ்மீது படையெடுத்து அதை வென்றார். அதோடு பாரசீகப் பேரரசையும் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவர விரும்பினார். ஆனால் பாரசீகத்தின்மீது படையெடுக்குமுன் கி.மு. 336-ல் அவர் கொல்லப்பட்டார்.



**படம் 11. மகா அலெக்சாண்டர்**

பிலிப் மன்னருக்குப்பின் அவரது மகன் அலெக்சாண்டர் தமது 20 ஆவது வயதில் அரச பதவி ஏற்றார். அலெக்சாண்டர் இளமையில் **அரிஸ்டாடில்** என்ற கிரேக்க தத்துவ ஞானியிடம் கல்வி பயின்று அறிவு வளர்ச்சி பெற்றிருந்தார். அவர் உலக நாடுகளை வென்று பேரரசு ஒன்றை நிறுவ விரும்பினார்.

### பாரசீகப் பேரரசின் படையெடுப்பு

ஏதென்ஸ், தீப்ஸ், கொரிந்து முதலிய நகர அரசுகள் அவருக்கு எதிராகக் கலகம் செய்தன. அலெக்சாண்டர் அக்கலகங்களை அடக்கி கிரீஸ் முழுவதையும் தமது ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவந்தார். கிரீஸில் அமைதி நிலவியது. அலெக்சாண்டர் தமது தந்தை உருவாக்கிய படையுடன் பாரசீகப் பேரரசின்மீது படையெடுத்தார். முதலாவது, ஆசியா மைனர் பகுதியைத் தாக்கினார். கி.மு. 333-ல் அவர் பாரசீகப் படையை இஸ்ஸஸ் என்ற இடத்தில் நிகழ்ந்த போரில் தோற்கடித்தார். அதனால் ஆசியா மைனர் முழுவதும் அவர் வசமானது. பின்னர் அவர் தெற்கே சென்று பினிஷியா, சிரியா, எகிப்து நாடுகளை வென்றார்.

நைல் நதி முகத்துவாரத்தில் அலெக்சாண்டிரியா நகரை நிர்மாணித்தார். எகிப்திலிருந்து புறப்பட்டு, பாபிலோனியாவின்மீது படையெடுத்தார். பாபிலோன் நகருக்கருகிலுள்ள **ஆர்பிலா** அல்லது **காகமீலா** என்ற இடத்தில் மூன்றாம் டேரியஸை முற்றிலும் தோற்கடித்தார். பாரசீக மன்னர் மூன்றாம் டேரியஸ் போர்க்களத்திலிருந்து தப்பி ஓடியபொழுது அவர், அவரைச் சார்ந்தவர்களாலேயே கொல்லப்பட்டார். அலெக்சாண்டர் பாபிலோன், சூசா, பெர்ஸிபாலிஸ் ஆகிய நகரங்களைக் கைப்பற்றினார். மீடியாவை வென்றார். பாரசீகப் பேரரசு முழுவதும் அவரது ஆதிக்கத்திற்குட்பட்டது. கொல்லப்பட்ட மூன்றாம் டேரியஸுக்கு **ஸ்டாட்டிரா** என்ற ஒரே மகள் இருந்தாள். அவளை அலெக்சாண்டர் திருமணம் செய்துகொண்டு தாம் பாரசீகப் பேரரசர் என்று பிரகடனஞ் செய்தார்.

### மத்திய ஆசியப் படையெடுப்பு

மிகவும் குறுகிய காலத்தில் ஒரு பேரரசை வென்றவுடன் அலெக்சாண்டருக்குத் தாம் உலகத்தை வென்றுவிடலாம் என்ற எண்ணம் ஏற்பட்டது. அதனால் அவர் மத்திய ஆசியாமீது படையெடுத்து பாக்டிரியா, ஸாக்டியேனா, ஏரியா, டிராங்கியேனா, கெட்ரோஷியா, அரக்கோஷியா ஆகிய நாடுகளை வென்றார். ஸாக்டியன் இளவரசி **ராக்ஸானாவை**த் திருமணம் செய்து கொண்டார்.

### இந்தியப் படையெடுப்பு

மத்திய ஆசியாவை வென்றபின் அலெக்சாண்டர் இந்துகுஷ் மலையைக் கடந்து கைபர் கணவாய் வழியாக இந்தியா

வந்தடைந்தார். தட்சசீலத்தை ஆண்டுவந்த **அம்பி** என்ற இந்திய மன்னர் அவருக்கு அடிபணிந்தார். ஆனால் பஞ்சாபின் ஒரு பகுதியை ஆண்ட **போரஸ்** என்ற **புருஷோத்தமன்** அலெக்சாண்டரை கி.மு. 326-ல் ஜீலம் நதிக்கரையில் எதிர்த்தார். அலெக்சாண்டர் பேரரசின் போர்த்திறமையைப் பாராட்டினார். அலெக்சாண்டர் கங்கைச் சம

**படம் 12. அலெக்சாண்டர் பேரரசு**

வெளியையும் வெற்றி கொள்ள விரும்பினார். ஆனால் அவரது போர் வீரர்கள் பீயாஸ் நதிக்குக் கிழக்கே போக மறுத்தனர். அவர்கள் தங்கள் தாய் நாட்டை விட்டு வந்து நீண்ட காலம் கழிந்துவிட்டதால் அவர்கள் தாய் நாட்டிற்குத் திரும்ப வற்புறுத்தினர். எனவே, அலெக்சாண்டர் தமது போர்த் திட்டங்களைக் கைவிட்டுத் தாய்நாடு திரும்ப வேண்டியதாயிற்று. செல்லும் வழியில் அவர் கி.மு. 323-ல் தமது 32ஆவது வயதில் பாபிலோனில் காய்ச்சலால் இறந்தார்.

**அலெக்சாண்டரின் பேரரசு — பரப்பு**

அலெக்சாண்டரின் பேரரசு மேற்கில் ஏட்ரியாடிக் கடல் முதல் கிழக்கில் சிந்து வெளி வரையிலும் ஐரோப்பா, ஆப்பிரிக்கா, ஆசியா ஆகிய மூன்று கண்டங்களிலும் பரவியிருந்தது. அவர் அரசராயிருந்த 13 ஆண்டுகளுக்குள் உலகின் பெரும்பகுதியை வென்று தம் ஆதிக்கத் திற்குட்படுத்தினார். அலெக்சாண்டர் இறந்தபின் அவரது பேரரசு மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு மூன்று தளகர்த்தர்களால் நிர்வகிக்கப்பட்டது. ஆசியப் பகுதியை **செலுக்கஸ் நிகேடாரும்,** மாசிடோனியாவும் கிரீஸும் அடங்கிய ஐரோப்பியப் பகுதியை **ஆன்டிகோனஸும்,** ஆப்பிரிக்கப் பகுதியான எகிப்தை **டாலமியும்** ஆட்சி செய்தனர்.

**அலெக்சாண்டரின் யூரேஷியக் கொள்கை**

பண்டைய உலகத்தின் தலைசிறந்த வீரராக அலெக்சாண்டர் திகழ்ந்தார். அவரிடம் போர் வீரர்களைக் கட்டுப்பாட்டுடன் நடத்தி போர்த்தந்திரங்களை வெற்றிகரமாகப் பயன்படுத்தும் திறமை நிறைந்திருந்தது. அவர் சிறந்த ஆட்சியாளராகவும் விளங்கினார். இவை யாவற்றையும்விட அவரிடம் காணப்பட்ட பரந்த நோக்கம் குறிப்பிடத்தக்கது.

அவர், நகர அரசு என்ற குறுகிய நோக்கம் இல்லாது உலக அரசு என்ற ஒரு புதுக் கருத்தை மேற்கொண்டார். ஐரோப்பிய நாகரிகத்தையும் ஆசிய நாகரிகத்தையும் இணைத்து ஒரே நாகரிகம், ஒரே பண்பாடு, ஒரே மொழி என்றவாறு மாற்றி அமைக்க விரும்பினார். ஐரோப்பா, ஆப்பிரிக்கா, ஆசியப் பகுதிகளைத் தம் ஆதிக்கத்தில் இணைத்து ஒரே மண்டலமாக்கி ஒரே அரசை நிறுவ விரும்பினார். நாடு, இனம், மொழி, பழக்கவழக்கம் முதலிய வேறுபாடில்லாமல் யாவரும் ஒரே உலகத்தின் மக்கள் என வாழவேண்டும் என அவர் கனவு கண்டார். உலக சகோதரத்துவத்தை ஏற்படுத்துவதே அவரது குறிக்கோளாக இருந்தது. அவர் கிரேக்க நாகரிகத்தைப் பரப்பி அதை உலகிலுள்ள யாவருக்கும் சொந்தமாக்க முயன்றார்.

அலெக்சாண்டர் தமது குறிக்கோளை அடைய மூன்று முறைகளைக் கையாண்டார். முதலாவதாக அவர் பாரசீக மன்னர் மூன்றாம் டேரியஸின் மகளான ஸ்டாட்டிராவையும், ஸாக்டியன் இளவரசி ராக்ஸானாவையும் மணந்தார். அவரது தளகர்த்தர்களும் அவரைச்சார்ந்தவர்களும் ஆசியப் பெண்களைத் திருமணம் புரியச்

செய்தார். இரண்டாவதாக அவரும் அவருடைய படைத்தலைவர்களும் ஆசிய மக்களின் பழக்கவழக்கங்களைப் பின்பற்றினர். மூன்றாவதாக அவர் நகரங்களைப் பேரரசின் பல பாகங்களில் நிர்மாணித்து அவை கிரேக்க வாணிகமும், கலாச்சாரமும் பரவுவதற்கு உதவும்படி செய்தார்.

அலெக்சாண்டர் தமது குறுகிய ஆட்சிக் காலத்தில் ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா ஆகிய மூன்று கண்டங்களிலும் பேரரசை நிறுவினார். போரில் தோல்வியே கண்டறியாத மாபெரும் வீரராக விளங்கினார். மக்களை ஒன்றுபடுத்தி ஒரே உலகத்தை ஏற்படுத்த விரும்பினார். எனவே, வரலாற்றில் அவர் 'மகா அலெக்சாண்டர்' என வர்ணிக்கப்படுகிறார்.

## கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களை நிரப்புக :**

1. அலெக்சாண்டரின் ஆசிரியர் ———— ஆவார்.
2. அலெக்சாண்டர் ———— நதி முகத்துவாரத்தில் ஒரு நகரை நிர்மாணித்தார்.
3. மூன்றாம் டேரியஸ் ———— , ———— போர்களில் அலெக்சாண்டரால் தோற்கடிக்கப்பட்டார்.
4. அலெக்சாண்டர் ———— நகரில் மாண்டார்.

**II. சுருக்கமான விடை தருக :**

1. ஜீலம் நதிக்கரைப் போர்பற்றிக் குறிப்பு எழுதுக.
2. அலெக்சாண்டர் கங்கைச் சமவெளிமீது ஏன் படையெடுக்கவில்லை ?
3. அலெக்சாண்டருக்குப்பின் அவரது பேரரசு எவ்வாறு நிர்வகிக்கப்பட்டது ?
4. அலெக்சாண்டர் 'மகா அலெக்சாண்டர்' என அழைக்கப் படக் காரணங்கள் யாவை ?

**III. விரிவான விடை தருக :**

1. அலெக்சாண்டரின் வெற்றிகளை விவரிக்கவும்.
2. அலெக்சாண்டரின் யூரேஷியக் கொள்கையை விவரிக்கவும்.

### பயிற்சி

1. அலெக்சாண்டர் பேரரசைப் படத்தில் குறிக்கவும்.
2. அலெக்சாண்டர், போரஸ் சந்திப்பை நாடகமாக நடிக்கவும்.

# 7. கி. மு. ஆறாம் நூற்றாண்டில் சீனா

**முன்னுரை**

பண்டைக் காலத்தில், ஆற்றங்கரைகளில் புகழ் பெற்ற நாகரிகங்கள் தோன்றி வளர்ந்திருந்தன என்றும், அவற்றுள் சீனாவில், ஹோயாங்ஹோ நதிதீரத்தில் தோன்றிய மஞ்சள் நதி நாகரிகம் எனப் பெயர் பெற்ற சீன நாகரிகமும் ஒன்று எனவும் நாம் இரண்டாவது பாடத்தில் அறிந்திருக்கின்றோம். கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே சீனர்கள் நாகரிகத்தில் சிறந்து விளங்கினர். அவர்கள் மங்கோலிய இனத்தைச் சார்ந்தவர்கள். சீனா, இந்தியாவைப் போன்று சமயத்துறையிலும் தத்துவத் துறையிலும் பண்டைக் காலத்திலிருந்தே பெருமை பெற்று விளங்கியது. கி.மு. ஆறாவது நூற்றாண்டில் இந்தியாவில் மகாவீரர், கௌதம புத்தர் ஆகிய பெரிய சமயத் தலைவர்கள் தோன்றியது போல் சீனாவிலும், அதே நூற்றாண்டில் **லயோட்சு, கன்பூஷியஸ்** தோன்றி, இந்திய ஞானிகளைப் போலவே மக்களுக்கு நன்னெறியைப் போதித்தனர்.

## (அ) லயோட்சு

லயோட்சு, கி. மு. 570-ல், 'கு' மாநிலத்திலுள்ள 'குஷ்ரென்' என்ற கிராமத்தில் பிறந்தார். அவர் பிறக்கும்பொழுது அவருடைய தலைமுடி வெண்மையாக இருந்ததால் அவர் குழந்தைப் பருவத்திலேயே தத்துவஞானியாகக் கருதப்பட்டார். அவர் அரசருடைய இரகசியப் பதிவேடுகளின் காவலராகச் சில காலம் பணிபுரிந்துவந்தார். அவர் அரசாங்கத்தின் வரலாற்று ஆசிரியராகவும் விளங்கினார். லயோட்சு தம் கொள்கைகள் அடங்கிய 'டாவோ-டே-கிங்' என்ற நூலை எழுதினார். அவர் நீண்ட காலம் சீனாவில் வாழ்ந்து, சீனர்களிடையே தம் சமயக் கருத்துகளைப் பரப்பி, 87ஆவது வயதில் காலமானார்.

லயோட்சுவின் தத்துவத்திற்கு **டோயிசம்** (Taoism) என்று பெயர். 'டாவோ' (Tao) என்றால் 'வழி' அல்லது 'செய்முறை' என்று பொருள்படும். அவருடைய கோட்பாடுகள் வெறும் ஒழுக்க நெறிகளேயாகும். தெய்வீகக் கோட்பாடுகளோ அறிவுக்கெட்டாத கருத்துகளோ அவருடைய நூலில் (டாவோட்சிங்) இல்லை. அவர் கூறியதாவது : "என்னிடம் நல்லவர்களாக நடப்பவர்களிடம் நானும் நல்லவனாக நடப்பேன். பொல்லாங்கு புரிந்தவர்களுக்கும் நன்மையே புரிவேன்—இவ்விதமாக எல்லோரிடமும் நல்லவனாகவே நான்

இருப்பேன். மற்றவர்களுக்காக அதிகம் செலவழிப்பவன் தனக்கு அதிகம் பெறுகிறான். இயற்கையோடு அமைந்த வாழ்வு நடத்த வேண்டும். இயல்பாக அமையும் வாழ்க்கையோடு திருப்தியடைய வேண்டும். சுயநலமும் ஆசையுமே வாழ்க்கைத் தொல்லைகளுக் கெல்லாம் மூல காரணம்.''

''இயற்கையில் படைக்கப்பட்ட அனைத்தும், தத்தம் அலுவலை அமைதியாக மேற்கொள்கின்றன; தமக்கென எதனையும் சேர்த்து வைத்துக்கொள்வதில்லை; கடமையைச் செய்கின்றனவே தவிர உரிமைக்குரல் எழுப்புவதில்லை''

லயோட்சு இயற்கை நெறிகளில் தலையீடு கூடாது எனக் கருதுபவராவார். நாட்டில் அமைதியின்மை நிலவினால் அதனைத் தவிர்ப்பதற்குச் சீர்திருத்தம் சரியான வழியல்ல எனவும், ஒவ்வொரு வரும் தத்தம் கடமையை ஒழுங்காக மேற்கொள்ளுமாறு செய்தலே சரியான வழி எனவும் கூறுகிறார். எதிர்ப்புத் தோன்றும்பொழுது சண்டையோ சச்சரவோ மேற்கொள்ளுவது அறிவுடைமையாகாது எனவும், அமைதியாக ஒதுங்கிப் பொறுமையாலும் விட்டுக்கொடுப்ப தன் மூலமும் வெற்றிகொள்வதே சிறந்தது எனவும் அவர் குறிப்பிடு கின்றார். தீவிரமான செயலைக்காட்டிலும் அமைதியே வெற்றி தரும் என்பது அவர் கருத்தாகும்.

லயோட்சுவும் பிரான்ஸ் நாட்டு **ரூஸோ**வைப் போன்றே இயற்கைக்கும் நாகரிகத்திற்கும் இடையில் உள்ள வேறுபாட்டை வரையறுத்துக் குறிப்பிட்டுள்ளார். பண்டைக்காலத்தில் இயற்கை, மனிதனையும் வாழ்க்கையையும் எளிதாக அமைத்தது. மக்கள் அமைதியாக வாழ, உலகம் மகிழ்ச்சியுடையதாக விளங்கியது. மனிதனின் அறிவு பெருகி, புதிய கண்டுபிடிப்புகளால் வாழ்க்கையில் சிக்கல் தோன்றியது. வயல்களில் வாழ்ந்த மக்கள் நகரங்களில் குடியேறலாயினர். நூல்கள் எழுதப்பட்டன. வாழ்வில் துன்பங்கள் பெருகின. புத்திசாலியானவன் இத்தகைய வாழ்க்கையை விட்டு இயற்கையின் மடியில் வாழ்க்கையைத் தொடங்குவான். அவன் நகரங்களிலிருந்தும், அதிகாரிகளிடமிருந்தும், நூல்களிடமிருந்தும், சீர்திருத்தவாதிகளிடமிருந்தும் பிரிந்து தனித்து அமைதியான வாழ்வு வாழ்வான்.

## (ஆ) கன்பூஷியஸ் (கி.மு. 551 — 480)

கன்பூஷியஸ், **லூ** என்ற மாநிலத்தில் (தற்காலத்திய ஹாங்டங்) பிறந்தார். அவரது இயற்பெயர் குங்பூஷே என்பதாகும். அவர் மூன்று வயதுக் குழந்தையாக இருந்தபொழுது தம் தந்தையை இழந்தார்; தாயார் பராமரிப்பில் வளர்ந்து வந்தார். இளமையில் அவர் வறுமையில் வாழ்ந்தார். அவருக்குப் பத்தொன்பதாம் வயதில் திருமணம் நடைபெற்றது. அவர் பண்டகக் காப்பாளர் வேலையில்



படம் 13. கன்பூஷியஸ்

அமர்ந்தார். அவர் தம் 22ஆவது வயதில் அவ்வேலையை விட்டுவிட்டு மக்களுக்கு நன்னெறி காட்டும் பணியில் ஈடுபட்டார். அதற்காக ஒரு பள்ளியை நிறுவினார். அதில் பலர் மாணவர்களாகச் சேர்ந்தனர். சில காலம் அவர் மாஜிஸ்டிரேட்டாகவும் பணி புரிந்தார். மக்களிடம் நேர்மையும், நீதியும், பெருந்தன்மையும் வளர்ச்சியடைந்தன.

கன்பூஷியஸ் பொதுப்பணித்துறை மேற்பார்வையாளராகவும் பணி புரிந்தார். அப்பொழுது அவர் நாட்டில் விவசாய வளர்ச்சிக்குப் பாடுபட்டார். பின்னர் அவர் குற்றப்பிரிவின் அமைச்சராக நியமிக்கப் பட்டார். நாட்டில் குற்றங்கள் குறைந்தன. ஆண்களும் பெண்களும் நன்னெறி வழுவாது வாழ்ந்தனர். பின்னர் அவர் பதவியிலிருந்து

விலகி அநேக ஆண்டுகள் பல்வேறு மாநிலங்களில் சுற்றி வந்தார். அவர் இறுதியாகத் தமது 72ஆவது வயதில் காலமானார்.

கன்பூஷியஸ் கடவுளைப்பற்றியும் மேல் உலகம் பற்றியும் ஒரு பொழுதும் பேசவில்லை. அவர் மனிதனின் உண்மையான வாழ்க்கையிலேயே கவனம் செலுத்தினார். அவரது மாணவர் ஒருவர் ஒரு சமயம் அவரிடம் ''கடவுளுக்கு நான் எவ்வாறு பணி புரியலாம்?'' எனக் கேட்டார். அதற்குக் கன்பூஷியஸ், ''உனக்கு மனிதனுக்குப் பணி புரியவே தெரியவில்லையே! அந்நிலையில் நீ எவ்வாறு கடவுளுக்குப் பணி புரிவதைப்பற்றிக் கேட்கலாம்?'' எனப் பதிலளித்தார். ''மரணத்தைப்பற்றி எனக்குத் தயைகூர்ந்து கூறுக'' என அம் மாணவர் கேட்டபொழுது ''உனக்கு வாழ்க்கையைப்பற்றியே அதிகமாகத் தெரியாது; எனவே, எவ்வாறு நீ மரணத்தைப்பற்றி அறியமுடியும்?'' எனப் பதிலுரைத்தார். அதே சமயம் அவர் கடவுள் இருப்பதையும், சுவர்க்கம் இருப்பதையும் மறுக்கவில்லை. சமூகத்தில் ஒவ்வொருவரும் தத்தம் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றி வந்தால் நல்லாட்சி அமையப்பெறும். ஆட்சியாளர் நேர்மை மிக்கவராகவும் அறநெறி உடையவர்களாகவும் இருக்கவேண்டும். நல்ல அரசாங்கத்திற்குத் தேவையானவை மூன்று. அவை : போதிய உணவு, போதிய இராணுவ பலம், அரசரிடம் மக்களுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை. நல்லாட்சி நிலவினால் நற்குடி மகன் தோன்றுவான் என்பனவெல்லாம் கன்பூஷியஸின் அரசியல் கருத்துகளாகும். அவர் விதவைகள், அநாதைகள், குழந்தைகளற்றவர், முதியோர் முதலியோர்க்கும் பாதுகாப்பு அளிக்கவேண்டும்; இளைஞர்களுக்கு வேலை வாய்ப்புகளும் பல துறைகளிலும் வளர்ச்சிபெற வாய்ப்புகளும் இருக்கவேண்டும் என்பது போன்ற சமதர்மக் கருத்துக் கொண்டிருந்தார்.

கன்பூஷியஸ் கல்விக்கும் அறிவிற்கும் மிகுந்த முக்கியத்துவம் அளித்தார். சமூகத்தில் மக்கள் கடுமையாக உழைத்து வாழவேண்டுமெனக் கூறினார். ''நீ உனக்கு ஒருவர் செய்த செயலை விரும்பாவிட்டால் அதே செயலை நீ மற்றவர்களுக்குச் செய்யாதே'', என்பது கன்பூஷியஸின் பொன் விதியாகும்.

கன்பூஷியஸ் உலகிற்குப் புதிய சமயத்தைத் தோற்றுவிக்கவில்லை. அவர் இயல்பாகவுள்ள நன்னெறிகளையே போதித்தார். சீனாவில் அவரது செல்வாக்கு நிலையானதாகும். அவருடைய பழமொழிகள் ஆயிரக்கணக்கான இலக்கியங்களில் இடம் பெற்

றுள்ளன. அவர் உலகத்தவர்க்குச் சிறந்த இலக்கியங்களை விட்டுச் சென்றுள்ளார். அவர் எழுதிய 'வூகிங்' அல்லது ஐந்து இலக்கியங்கள் **(Wuking or Five Canons)** என அழைக்கப்படுகின்றன. கன்பூஷியஸ் போன்று சீனாவில் வேறு தத்துவஞானிகள் தோன்றியபொழுதிலும் அவரே 'சீனத் தத்துவஞானிகளின் சிகரம்' எனக் கருதப்படுகிறார்.

### கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களை நிரப்புக :**

1. லயோட்சு——— என்ற கிராமத்தில் பிறந்தார்.
2. லயோட்சு உருவாக்கிய தத்துவம் ——— ஆகும்.
3. கன்பூஷியஸ் பிறந்த மாநிலம் ——— .

**II. சுருக்கமான விடை தருக :**

1. 'டாவோ' என்றால் பொருள் என்ன ?
2. கன்பூஷியஸ் வகித்த பதவிகள் யாவை ?
3. கன்பூஷியஸின் சமதர்மக் கருத்துகள் யாவை ?

**III. விரிவான விடை தருக :**

1. டோயிசத்தை விவரிக்கவும்.
2. கன்பூஷியஸ் போதித்த கருத்துகளைக் கூறுக.

## 8. கி.மு. நான்காம் நூற்றாண்டு முதல் கி.பி. ஏழாம் நூற்றாண்டு வரை இந்தியா

**முன்னுரை**

பழங்காலத்தில் மேற்கு ஆசியாவில் புகழ்மிக்க பேரரசுகள் தோன்றி வளர்ச்சியடைந்ததைப்போல, இந்தியாவிலும் பெருமை மிக்க பேரரசுகள் உருவாகி சிறப்புற்றிருந்தன. மேற்கு ஆசியப் பேரரசுகளில் வீரத்திலும் நிர்வாக முறையிலும் சிறப்புப் பெற்றிருந்த மன்னர்களைப்பற்றி நாம் அறிந்திருக்கின்றோம். அவர்களைப் போன்று இந்தியப் பேரரசுகளிலும் வீரமிக்க ஆட்சித் திறமை மிகுந்த மன்னர்கள் இருந்தனர். அவர்களைப்பற்றி இப்பாடத்தில் நாம் படிப்போம்.

## (அ) மௌரியப் பேரரசு (கி.மு. 325 — 188)

இந்தியாவில் முதன்முதலாகப் பேரரசை உருவாக்கிய பெருமை படைத்தவர்கள் **நந்த வமிச** அரசர்கள் ஆவர். அவர்கள் பாடலி புத்திரத்தைத் தலைநகராகக்கொண்டு மகத இராச்சியத்தை விரிவு படுத்தினர். நந்தப் பேரரசு கங்கை, மகா நதி சமவெளிகளில் பரவியிருந்தது. இந்தப் பேரரசு இருந்த காலத்தில்தான் அலெக் சாண்டரின் இந்தியப் படையெடுப்பு நடந்தது. இந்தப் பேரரசு குறுகிய காலம்தான் இருந்தது. ஆனால் இதற்குப்பின் தோன்றிய மௌரியப் பேரரசு இரண்டு நூற்றாண்டுகள் நிர்வாகத்திலும், கலையிலும், சமயத்திலும் சிறப்புற்று விளங்கியது.

### சந்திரகுப்தர் (கி.மு. 325 — 301)

மௌரிய வமிசத்தைத் தோற்றுவித்தவர் **சந்திரகுப்தர்**. இவர் மகத நாட்டை ஆண்டுவந்த நந்த வமிசத்துக் கடைசி அரசரான **தனநந்தர்** என்பவரை அரச பதவியிலிருந்து நீக்கி மகதத்தைக் கைப் பற்றினார்.

சந்திரகுப்த மௌரியரின் ஆட்சிக் காலத்தில் மகத இராச்சியம் வளர்ச்சியடைந்து செல்வாக்குப் பெற்றுப் பேரரசாயிற்று. கங்கைச் சமவெளி இராச்சியங்கள் அனைத்தும் அவரது பேரரசுடன் இணைக்கப்பட்டன. பின்னர் பஞ்சாபிலும் சிந்துவெளியிலும் அலெக்சாண்டர் நிறுத்திச் சென்ற கிரேக்கப் படைகளை விரட்டி அப் பகுதிகளைத் தமது பேரரசுடன் இணைத்தார். அதனால் அலெக் சாண்டருடைய படைத்தலைவர்களில் ஒருவரான **செலுக்கஸ் நிகேடார்** வடமேற்கு இந்தியப் பகுதிகளை மீண்டும் கைப்பற்ற எண்ணினார். எனவே, அவர் கி.மு. 305-ல் பெரும்படையுடன் சிந்துவைக் கடந்துவந்தபொழுது சந்திரகுப்த மௌரியர் அவரைத் தோற்கடித்தார். தோல்வியுற்ற செலுக்கஸ் சந்திரகுப்த மௌரியருக்குத் தற்காலத்தில் காபூல், ஹிரட், காண்டஹார், பலுசிஸ்தானம் எனப்படும் பகுதிகளை வழங்கினார். அவர் சந்திரகுப்த மௌரியரின் அரசவைக்கு **மெகஸ்தனிஸ்** என்ற கிரேக்க தூதுவரை அனுப்பி வைத்தார். மெகஸ்தனிஸ் இந்தியாவைப்பற்றி எழுதிய நூல் **இண்டிகா** ஆகும்.

சந்திரகுப்த மௌரியருடைய பேரரசு அஸ்ஸாம் நீங்கலாக வட இந்தியா முழுவதும் பரவியிருந்தது. மேலும் பலுசிஸ்தானம் ஆப்கானிஸ்தானம் ஆகிய பகுதிகளும் சேர்ந்திருந்தன. சந்திரகுப்த

மௌரியர் தமது இறுதிக்காலத்தில் சமண சமயகுரு **பத்திரபாகுவுடன்** தென்னிந்தியாவிற்குச் சென்று அங்கு மைசூருக்கருகிலுள்ள **சிரவண பெல்கோலாவில்** உண்ணாவிரதமிருந்து உயிர் நீத்தார் என்று சமண சமய வரலாறு கூறுகின்றது.

**அசோகர்** (கி.மு. 273 – 232)

சந்திரகுப்த மௌரியருக்குப் பின் அவரது மகன் **பிந்துசாரர்** கி.மு. 301 முதல் கி.மு. 273 வரை ஆட்சி புரிந்தார். அவர் தக்காணத்தின்மீது படையெடுத்துக் கலிங்கம் நீங்கலாக மற்றெல்லாப் பகுதிகளையும் கைப்பற்றினார். அவருக்குப்பின் அவரது மகன் **அசோகர்** அரசரானார்.

கி. மு. 261-ல் அசோகர் தமது பேரரசைப் பெருக்கக் கலிங்கத்துடன் போர் புரிந்தார். கடுமையாகப்போரிட்டு இறுதியில் அவர் வெற்றி அடைந்தார். போரில் பல்லாயிரக்கணக்கான வீரர்கள் உயிரிழந்தனர். நேரில் இவற்றைக் கண்ட அசோகர் வேதனையுற்றார். மக்கள் அடைந்த துயரம் மன்னரின் மனத்தை வாட்டியது. அவர் மனத்தில் ஒரு பெரும் மாறுதல் ஏற்பட்டது. அப்போருக்குப் பின் எக்காலத்திலும் போர் புரிவதில்லை என அவர் உறுதிபூண்டார். அது ஒரு திருப்புமுனையாக அமைந்து, அசோகர் புத்த சமயத்தில் சேர்ந்து அறவழியில் மக்களின் நன்மைக்காக ஆட்சி புரியலானார்.

கலிங்கப் போருக்குப்பின் அசோகர் புத்த சமயத்தை ஏற்றுக் கொண்டார். அவர் புத்த சமயத்தைப் பல வழிகளிலும் பரப்பினார். அயல் நாடுகளுக்குப் புத்தத் துறவிகளை அனுப்பினார். அவர் நாட்டில் சாலைகள், மரங்கள், விடுதிகள், மருத்துவச் சாலைகள் முதலியவைகளை மக்களுக்காக அமைத்தார். அவர் இந்திய வரலாற்றில் தலைசிறந்த மன்னராகக் கருதப்படுகின்றார். அவருக்குப் பின் மௌரியப் பேரரசு சிதைவுற்றது.

## ஆ. குஷாணப் பேரரசு (கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகள்)

மௌரியப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின் இந்தியாவின் வடமேற்கு எல்லையைப் பல அந்நியர்கள் தாக்கித் தங்கள் அதிகாரத்தை நிலை நாட்டினர். அவர்களில் இறுதியாகக் குஷாணர் என்பவர்கள் ஆப்கானிஸ்தானத்திலும், வடமேற்கு இந்தியாவிலும் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்தி ஓர் அரசைத் தோற்றுவித்தனர்.

**கனிஷ்கர்** (கி.பி. 78 — 120)

குஷாண மன்னர்களில் தலைசிறந்தவர் **கனிஷ்கர்** ஆவார். அவர் ஆற்றல் மிக்க வீரர். அவரது தலைநகரம் புருஷபுரம். அவர் காஷ்மீரத்தின்மீது படையெடுத்துச் சென்று அதனை வென்றார்; சீனாவைப் போரில் வென்று காஷ்கர், யார்கண்ட், கோட்டான் ஆகிய பகுதிகளைத் தம் நாட்டுடன் இணைத்துக்கொண்டார். கனிஷ்கரது பேரரசு ஆப்கானிஸ்தானத்திலும், வடமேற்கு இந்தியா முழுவதிலும் பரவியிருந்தது.

கனிஷ்கர், அசோகரைப் போன்று புத்த சமயத்தைத் தழுவினார். கனிஷ்கர் காலத்தில் புத்த சமயத்தில் சில மாறுதல்கள் ஏற்பட்டு புத்த சமயம் **மகாயானம்** என்று வழங்கப்பட்டது. அவர் காலத்திற்கு முன்பிருந்த புத்த சமயம் **ஹீனயானம்** எனப்படலாயிற்று. மகா யானத்தில் புத்தர் கடவுளாக வணங்கப்பட்டார். அவருக்குக் கோவில்கள் கட்டப்பட்டன. கனிஷ்கர் காலத்தில் புத்தர் உருவச் சிலைகள் செய்யப்பெற்று **காந்தாரக்கலை** என்ற புதிய சிற்பக்கலை தோன்றியது. இலக்கியமும் பிறகலைகளும் வளர்ச்சி அடைந்தன.

கனிஷ்கருக்குப்பின் குஷாணர்களின் வலிமை குன்றி நாளடைவில் குஷாணப் பேரரசு இந்தியாவில் மறைந்தது.

## (இ) குப்தப் பேரரசு (கி.பி. 300 — 500)

குஷாணப் பேரரசு மறைந்த பின்னர் வட இந்தியாவில் குழப்பம் மேலிட்டது. பின்னர் கி.பி. நான்காம் நூற்றாண்டின் முற்பகுதியில் குப்தர்கள் என்பவர்கள் பேரரசை உருவாக்கினர். குப்த வமிசத்தை நிறுவிய அரசர் **ஸ்ரீகுப்தர்** ஆவார்.

**முதலாம் சந்திரகுப்தர்** (கி.பி. 320 — 330)

ஸ்ரீகுப்தரின் பேரரான முதலாம் **சந்திரகுப்தர்** தான் உண்மையில் குப்தப் பேரரசை உருவாக்கியவர் ஆவார். அவரது தலைநகரம் பாடலிபுத்திரம். அவர் லிச்சாவி வமிசத்தைச் சார்ந்த இளவரசி **குமார தேவியை** மணந்துகொண்டு அவ்வமிசத்தாரின் உதவியைப் பெற்று தற்போதுள்ள பீகார், உத்தரப் பிரதேசம், வங்காளம் ஆகிய பகுதிகளை வென்று தமது அரசைப் பேரரசாக்கினார். அவர் முடிசூடிய வருடமாகிய கி.பி. 320-லிருந்து குப்த சகாப்தம் தொடங்கியது.

**சமுத்திர குப்தர் (கி.பி. 330 — 380)**

முதலாம் சந்திரகுப்தருக்குப் பின் அரசரான அவரது மகன் **சமுத்திர குப்தர்** வீரமும் போர்த் திறமையும் மிக்கவர். அவர் வட இந்தியாவில் பெரும்பகுதியை வென்றார். தென்னிந்தியாவின் மீதும் படையெடுத்து வெற்றிகள் பல பெற்றார். கிழக்குக் கடற்கரையோரமாகப் படைகளுடன் சென்று பித்தாபுரத்தை ஆண்ட **மகேந்திரனையும்,** வெங்கியை ஆண்ட **ஹஸ்திவர்மனையும்,** காஞ்சியை ஆண்ட பல்லவ மன்னர் **விஷ்ணு கோபரையும்** முறையே வென்று மேற்குக் கடற்கரையோரமாகத் திரும்பிச் சென்று தம் தலைநகரை அடைந்தார். அவரது சிறந்த வெற்றிகளினால் அவரை ஐரோப்பிய வரலாற்று நூல் ஆசிரியர்கள் 'இந்திய நெப்போலியன்' எனக் குறிப்பிடுகின்றனர். அவர் இசைக்கலையிலும் ஆர்வம் கொண்டிருந்தார்.

**இரண்டாம் சந்திரகுப்தர் (கி.பி. 380 — 415)**

சமுத்திரகுப்தருக்குப் பின் அவரது மகன் **இரண்டாம் சந்திரகுப்தர்** அரச பதவியேற்றார். அவர் **விக்கிரமாதித்தியர்** என்ற சிறப்புப் பெயர் பெற்றிருந்தார். சாகர்களை வென்று மாளவம், குஜராத் ஆகிய பகுதிகளைத் தம் பேரரசுடன் இணைத்துக் கொண்டார். சாகர்களை வென்றமையினால் அவருக்கு **சாகாரி** என்ற பட்டப் பெயர் ஏற்பட்டது.

அவரது காலத்தில் குப்தப் பேரரசு கிழக்குக் கடற்கரையிலிருந்து மேற்குக் கடற்கரை வரை பரவியிருந்தது. உஜ்ஜயினி இரண்டாவது தலைநகராக விளங்கியது. அவரது அவையில் **நவரத்தினங்கள்** என்ற ஒன்பது ஒப்பற்ற அறிஞர்கள் இருந்தனர். அவர் காலத்தில் **பாகியான்** என்ற சீனப் பயணி இந்தியாவிற்கு வந்திருந்தார். பாகியானின் குறிப்புகள் குப்தர் கால வரலாற்றை அறிய உதவுகின்றன.

குப்தப் பேரரசுக் காலம் 'பழங்கால இந்திய வரலாற்றின் பொற்காலம்' எனப்படுகிறது. ஏனெனில் இலக்கியம், கலை, அறிவியல் முதலிய பலதுறைகளில் குப்தப் பேரரசு தலைசிறந்து விளங்கியது.

இரண்டாம் சந்திரகுப்தருக்குப்பின் ஹூணர்களின் தாக்குதல்களால் குப்தப் பேரரசு அழிந்தது.

## (ஈ) ஹர்ஷ வர்த்தனர் (கி.பி. 606— 647)

குபதப பேரரசு வீழசசியுறற பின வட இநதியாவில மீணடும குழபபம ஏறபடடது. பல சிறு இராசசியஙகள தோனறின. அவறறுள தானேசுவரததைத தலைநகராகக கொணட இராசசியமும ஒனறாகும அது வரததன வமிசததினரகளால ஆளபபடடது அவரகளில **ஹர்ஷ வர்த்தனர்** புகழ பெறற அரசராவார

ஹரஷவரததனர தமது 16ஆவது வயதில துயரமான சூழநிலையில அரசராக வேணடியதாயிறறு அவரது தமையனார வஞசகமாகக கொலலபபடடிருநதார அவரது சகோதரி விதவையாகிச சிறைபபிடிககபபடடு, சிறையிலிருநது தபபி விநதியமலைச சாரலுககுச சென றிருநதார

ஹரஷர முதன முதலாக விநதிய மலைககுச சென று தம தஙகையைக கணடுபிடிதது மீடடார அதனபின தம குடும்பததிறகு அவலநிலை ஏறபடுததிய பகைவரகளை வெனறார அவர கனனோசியின ஆடசிப பொறுபபையும ஏறறார பினனர கூரஜரம, சௌராஷடிரம, காமரூபம, சிநதி ஆகிய பகுதிகளை வெனறார கி பி 620-ல ஹரஷர தககாணததின மீது படையெடுததபொழுது மேலைச சாளுககிய மனனர **இரண்டாம் புலிகேசியிடம** நரமதை நதிககரையில நிகழநத போரில தோலவியுறறார அதன விளைவாக நரமதை நதி ஹரஷப பேரரசின தெறகு எலலை ஆயிறறு அதுவே அவரது ஒரே தோலவியாகும அதனபின அவர நாடடு நிரவாகததில முழுக கவனம செலுததலானார

ஹரஷர தமது நாடடின பல பகுதிகளுககுச சென று மககளின குறைகளை நேரில தெரிநது அவறறை நீககக முறபடடார நாடடில வாணிகமும கைததொழிலும சிறபபுறறிருநதன ஹரஷர மகாயான புதத சமயததைப பினபறறினார பிற மதததினரிடமும சமய சகிபபுத தனமையுளளவராக இருநதார சமய வேறுபாடினறி எலலா மதததினரையும போறறி பரிசுகளும வழஙகி கௌரவிததார கலவி நனகு வளரசசியுறறிருநதது அவர வடமொழியில **நாகானநதம், இரத்தினாவளி, பிரியதாசிகா** என்ற நூலகளை எழுதினார அவரது அவைப புலவர பாணர எனபவரால **ஹர்ஷ சரிதம, காதமபரி** என்ற நூலகள எழுதபபடடன குபதரகள காலததில நிறுவபபடட **நாலநதாவில்** பலகலைககழகம நனகு

வளரச்சியுற்றது. அதில் 1,500 ஆசிரியர்கள் இருந்தனர். 10,000 மாணவர்கள் கல்வி பயின்றனர். ஹர்ஷர் ஆட்சிக் காலத்தில் **யுவான் சுவாங்** என்ற சீனப் பயணி இந்தியா வந்து அப் பல்கலைக் கழகத்தில் கல்வி பயின்றார்.

ஹர்ஷர் கி பி 647-ல் காலமானார். அவருக்குப்பின் அவரது பேரரசு வீழ்ச்சியடைந்தது.

## பல்லவப் பேரரசு

வட இந்தியாவில் ஹர்ஷப் பேரரசு இருந்தபொழுது தென்னிந்தியாவில் பல்லவப் பேரரசு இருந்தது. கி பி 3ஆம் நூற்றாண்டிலிருந்து கி பி 9ஆம் நூற்றாண்டு வரை கிருஷ்ணா நதிக்கும் காவிரி நதிக்கும் இடையேயுள்ள பகுதியில் பல்லவர்கள் ஆட்சி செலுத்தினர். அவர்களின் தலைநகரம் **காஞ்சிபுரம்** ஆனால், கி பி 6ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து கி பி 8ஆம் நூற்றாண்டு வரை காஞ்சியில் ஆண்டு வந்த பல்லவர்கள் பெருமை மிக்கவராய் விளங்கினதால் அவர்கள் வரலாற்றில் ‘மகா பல்லவர்கள்’ எனப்படு கின்றனர்

**சிம்மவிஷ்ணு** (கி பி 575 — 600)

பல்லவர்களின் அரசியல் பண்பாட்டுச் சாதனைகளைத் தொடங்கியவர் **சிம்மவிஷ்ணு** ஆவார். அவர் சிறந்த வெற்றி வீரர். அவர் சோழர்கள், பாண்டியர்கள், களப்பிரர் ஆகியோரை வென்றார். அதனால் அவருக்கு **அவனி சிம்மன்** என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது

**முதலாம் மகேந்திரவர்மர்** (கி பி 600 — 630)

சிம்மவிஷ்ணுவிற்குப் பின்பு அவரது மகன் **முதலாம் மகேந்திரவர்மர்** அரசரானார். மேலைச்சாளுக்கிய மன்னர் **இரண்டாம் புலிகேசி** முதலாம் மகேந்திரவர்மருடன் போர்தொடுத்து அவரைத் தோற்கடித்தார். முதலாம் மகேந்திரவர்மர் ஆரம்பத்தில் சமண சமயத்தினராக இருந்தார். பின்னர் சைவ சமயப் பெரியார்களில் ஒருவரான **அப்பர்** என்ற **திருநாவுக்கரசு** நாயனாரின் முயற்சியால் அவர் சமண சமயத்தை விடுத்து சைவ சமயத்தினரானார். முதலாம் மகேந்திரவர்மர், பல குகைக் கோயில்கள் கட்டியுள்ளார். சித்தன்ன வாசல் என்னுமிடத்திலுள்ள ஓவியங்கள் அவரது காலத்தைச்

சார்ந்தவை. மகேந்திரவாடியிலுள்ள நீர்த்தேக்கம் அவரது முக்கிய நீர்பாசனத் திட்டமாகும். அவருக்குப் பல சிறப்புப் பெயர்கள் ஏற்பட்டன. அவற்றுள் **சித்திரக்காரப்புலி, விசித்திரசித்தன்** என்பவை குறிப்பிடத்தக்கவை.

**நரசிம்மவர்மர்** *(கி.பி. 630 — 655)*

முதலாம் மகேந்திரவர்மருக்குப் பின் அவரது மைந்தர் **நரசிம்மவர்மர்** அரச பதவியேற்றார். அவர் பல்லவ திலகமாக விளங்கினார். அவர் தம் தந்தைக்கு ஏற்பட்ட அவமானத்தைப் போக்க மேலைச் சாளுக்கிய அரசர் இரண்டாம் புலிகேசியைத் தோற்கடித்துச் சாளுக்கியர்களின் தலைநகராகிய வாதாபியைக் கைப்பற்றித் தீக்கிரையாக்கினார். அதனால் அவருக்கு **வாதாபிகொண்டான்** என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது. அவருக்கு **மாமல்லர்** என்ற சிறப்புப் பெயரும் ஏற்பட்டது. அவர் மாமல்லபுரம் என்ற துறைமுகப் பட்டினத்தை நிறுவினார். அங்கு அவர் கற்கோயில்களையும், கல் ரதங்களையும் அமைத்தார். அவர் காலத்தில் பல்லவ நாட்டைப் பார்வையிட்ட சீனப் பயணி யுவான் சுவாங் அவரது ஆட்சியைப் பெரிதும் புகழ்ந்து கூறியுள்ளார்.

பிற்காலப் பல்லவ அரசர்களில் ராஜசிம்மர் (கி. பி. 680 — 700) என்று அழைக்கப்பட்ட **இரண்டாம் நரசிம்மவர்மரும்,** கடைசி அரசரான **அபராஜிதவர்மரும்** குறிப்பிடத்தக்கவர்கள். இராஜ சிம்மர் மாமல்லபுரத்தில் கடற்கரைக் கோயிலைக் கட்டுவித்தார். காஞ்சியிலுள்ள வைகுண்டப்பெருமாள் கோயிலும் ஒருவேளை அவர்காலத்தில் கட்டப்பட்டிருக்கலாம் எனக் கருதப்படுகிறது. அபராஜிதவர்மர் திருத்தணிகையில் கோயில் கட்டினார். இவர் கி. பி. ஒன்பதாவது நூற்றாண்டின் இறுதியில் ஆதித்திய சோழனால் முறியடிக்கப்பட்டார். சோழர்கள் ஆதிக்கம் தென்னிந்தியாவில் தொடங்கியது.

**கேள்விகள்**

**I. கோடிட்ட இடத்தை நிரப்புக :**

1. சந்திரகுப்த மௌரியருடன் போரிட்ட கிரேக்க தளபதி ———— ஆவார்.
2 மெகஸ்தனிஸ் ———— என்ற நூலை எழுதினார்.
3. அசோகரின் வாழ்க்கையில் ———— ஒரு திருப்பு முனையாக அமைந்தது.

4. கனிஷ்கர் காலத்தில் ———— என்ற புத்த சமயமும் ———— என்ற கலையும் தோன்றின.
5. வரலாற்றில் சமுத்திரகுப்தர் ———— என அழைக்கப் படுகின்றார்.
6. குப்தப் பேரரசு ———— என்பவர்களின் தாக்குதல் களால் அழிந்தது.
7. முதலாம் மகேந்திரவர்மனை சைவ சமயத்தினராக மாற்றியவர் ———— ஆவார்.
8. நரசிம்மவர்மருக்கு ————, ———— என்ற சிறப்புப் பெயர்கள் இருந்தன.

## II. சுருக்கமான விடை தருக :

1. சந்திரகுப்த மௌரியரின் வெற்றிகள் யாவை ?
2. அசோகரின் நற்பணிகளைக் குறிப்பிடுக.
3. கனிஷ்கர் சீனாவிடமிருந்து பெற்ற பகுதிகள் யாவை ?
4. சமுத்திர குப்தரின் வெற்றிகள் யாவை ?
5. ஹர்ஷ கால இலக்கியங்கள் எவை ?
6. நாலந்தா பல்கலைக் கழகம்பற்றிக் குறிப்பு எழுதுக.
7. அவனி சிம்மரின் வெற்றிகள் யாவை ?
8. முதலாம் மகேந்திரவர்மரின் மதமாற்றத்தைக் குறிப் பிடுக.

## III. விரிவான விடை அளிக்கவும் :

1. அசோகரின் ஆட்சியை விவரிக்கவும்.
2. ஹர்ஷரின் ஆட்சிக் காலத்தை விவரித்தெழுதுக.
3. முக்கிய பல்லவ மன்னர்களின் சாதனைகளை விவரிக் கவும்.

## பயிற்சி

1. அசோகர், ஹர்ஷர் வரலாறுகளை நாடகமாக நடிக்கவும்.
2. மாமல்லபுரம் சென்று பல்லவர் காலச் சிற்பங்களைக் கண்டுகளிக்கவும்.

# 9. பாலஸ்தீன நாடு

**முன்னுரை**

உலகில் தற்போது பெருமளவில் மக்களால் பின்பற்றப்படும் சமயம் கிறிஸ்தவ சமயமாகும். இச் சமயம் பாலஸ்தீன நாட்டில் தோன்றியது. அந்நாட்டில் யூதர்கள் வசித்து வந்தனர். யூதர்கள் இனத்தில் தோன்றிய **இயேசு கிறிஸ்து** ஒரு புதிய




படம் 14. பாலஸ்தீனம்

சமயத்தைப் போதித்தார். இப் பாடத்தில் இயேசு கிறிஸ்து தோன்றியதையும், அவருடைய போதனைகளையும், அச் சமயம் எவ்வாறு பல்வேறு நாடுகளில் பரவியது என்பது பற்றியும் படிப்போம். கிறிஸ்தவ சமயம் மேற்கு ஆசியாவில் தோன்றி, ஐரோப்பாவில் வளர்ந்து, இன்று ஓர் உலக சமயமாகத் திகழ்ந்திருக்கின்றது.

## I. யூதர்கள்

பாலஸ்தீன நாடு தென்மேற்கு ஆசியாவில் உள்ளது. எகிப்து, சிரியா ஆகிய இரு நாடுகளிடையே பாலஸ்தீனம் உள்ளது. பாலஸ்தீன மக்கள் செமிட்டிக் இனத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் **யூதர்கள்** என அழைக்கப்பட்டனர். எபிரேயம் **(Hebrew)** என்னும் மொழியைப் பேசி வந்தனர். ஜேஹோவா என்ற ஒரே கடவுளை வணங்கி வந்தனர். தங்கள் சமயத்தின் மீது மிகுந்த பற்றுக் கொண்டிருந்தனர். பிற்காலத்தில் எகிப்திய மன்னர்களால் தங்கள் நாட்டிற்கு அடிமைகளாகக் கொண்டு செல்லப் பட்டனர். எகிப்திய நாட்டில் மிகுந்த துன்பத்தை அடைந்தனர். எகிப்திய நாட்டில் யூதர்கள் அடிமைகளாக அடையும் துன்பத்தை அறிந்து **மோசஸ்** என்பவர் இவர்களை விடுதலை செய்து பாலஸ்தீனத்திற்கு மீண்டும் அழைத்துச் சென்றார். ஆனால் வழியில் மோசஸ் இறந்துவிட்டார். இவரே யூதர்களுக்குப் **பத்துக் கட்டளைகளை** வகுத்துக் கொடுத்தார். யூதர்கள் மன்னர்களால் ஆளப்பட்டு வந்தனர். அம்மன்னர்களுள் **டேவிடும் சாலமனும்** மிகச் சிறந்தவர்களாவர். டேவிட் செருசலத்தை யூதர்களின் தலைநகராக்கினார். அறிவாற்றல் மிக்க சாலமன் மன்னர் சிறந்த ஆட்சியை மேற்கொண்டார். தங்களுடைய கடவுளுக்காக செருசலத்தில் சாலமன் மன்னர் ஒரு கோயிலைக் கட்டினார்.



படம் 15. சாலமன் மன்னர்

பாலஸ்தீனம் சாலமன் ஆட்சிக்குப் பிறகு பாபிலோனிய அரசின் ஒரு பகுதியாக இருந்து வந்தது. பின்னர் பாரசீகப் பேரரசுடன் சேர்க்கப்பட்டது. கடைசியாக அலெக்சாண்டர் இதைக் கைப்பற்றி

னார். கி.பி. முதலாம் நூற்றாண்டில் ரோமானியரின் ஆட்சியின்கீழ் இது வந்தது. ரோமானியர் யூதர்களை மிகவும் துன்புறுத்திப் பாலஸ்தீனத்திலிருந்து விரட்டினர். இச் சம்பவம் வரலாற்றில் **டயஸ் போரா** (Diaspora) எனப்படும். இதன் காரணமாக உலகின் பல்வேறு பாகங்களில் யூதர்கள் வாழும் நிலை ஏற்பட்டுள்ளது. தற்போது யூதர்கள் இஸ்ரேல் நாட்டில் வாழ்ந்து வருகின்றனர்.

## II. இயேசு கிறிஸ்துவும், கிறிஸ்தவ சமயமும்

### 1. இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாறு

கிறிஸ்தவ சமயத்தைத் தோற்றுவித்த இயேசு கிறிஸ்து பாலஸ் தீனத்திலுள்ள ஜூதேயாவில் **பெத்லஹேம்** என்ற சிற்றூரில் ஒரு மாட்டுத் தொழுவத்தில் யூதகுலத்தில் பிறந்தார். அப்பொழுது பாலஸ்தீனத்தின் ஒரு பகுதியான ஜூதேயாவில் **ஹெரோட்** என்ற சிற்றரசர் இருந்தார். ஆனால், பாலஸ்தீனம் முழுவதும் ரோமப் பேரரசின் ஒரு பகுதியாக விளங்கியது. அப்பொழுது ரோமப் பேரரசை ஆட்சி செய்து வந்த **அகஸ்டஸ் சீசரின்** பிரதிநிதியாக **பாண்டியஸ் பிலாத்** பாலஸ்தீனத்தில் ஆளுநராக விளங்கினார். கடவுளது அருளால் **மரியாள்** என்னும் கன்னிக்கு இயேசு கிறிஸ்து பிறந்தார். அவர் கடவுளின் மைந்தர் என்று கிறிஸ்தவர்களால் கருதப்படுகிறார். இத் தெய்வக் குழந்தையை **ஜோசப்** என்பவர் வளர்த்து வந்தார். இயேசு அநேக மக்களின் நோய்களைக் குணப் படுத்தினார். அற்புதங்கள் பல செய்தார். தமது முப்பதாவது வயதில் தமது சமயத்தைப் போதிக்கலானார். தாமே யூதர்கள் எதிர்பார்த்திருந்த இரட்சகர் என்றும், தாம் நிறுவும் அரசு இவ்வுல கத்திற்கு உரியதல்ல எனவும் கூறினார். அவர் யூத குருமார்களின் குறுகிய மனப்பான்மையையும் சுயநலத்தையும் கண்டித்தபடியால் யூதர்கள் அவரை வெறுத்தனர். அவர் யூதர்களின் தலைவராகத் தம்மைச் செய்துகொள்ள முயற்சிக்கிறார் எனக் குற்றம் சாட்டப்பட்டு ரோமாபுரி ஆளுநரான **பாண்டியஸ் பிலாத்** என்பவரால் மரண தண்டனை இவருக்கு வழங்கப்பட்டது. செருசலத்தில் உள்ள குன்றின்மீது ஒரு வெள்ளிக்கிழமையன்று இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப் பட்டார். இறக்கும் தருவாயிலும் அவர் மக்களின் அறியாமையைக் கண்டு மனம் வருந்தி, அவர்களை மன்னிக்கும்படி கடவுளை வேண்டினார். மூன்று நாள்களுக்குப் பின் மீண்டும் இவ்வுலகில் தோன்றி 40 நாள்கள் பல இடங்களில் காட்சியளித்து மறைந்தார்.

## 2. இயேசு கிறிஸ்துவின் போதனைகள்

"கடவுள் ஒருவரே, அவரே இவ்வுலகின் தந்தை, உருவ வழிபாடு கூடாது. கடவுள் அன்பு, கருணை, உண்மை ஆகியவற்றின் வடிவினர். மக்கள் யாவரும் பரமபிதாவின் பிள்ளைகள். கடவுள் அனைவரிடத்திலும் ஒரே மாதிரியான அன்பு செலுத்தக்கூடியவர். நாம் ஒருவரையொருவர் உடன்பிறந்தவர்களைப்போல நேசிக்க வேண்டும். நாம் செய்த பாவச் செயல்களை எண்ணி உண்மையாக வருந்துவோமேயானால் நமது பாவங்களை மன்னித்துக் கடவுள் நம்மைக் காப்பாற்றுவார். பகைவனிடத்திலும் அன்பு செலுத்துதல் வேண்டும். தீமை செய்தவர்களுக்கும் நன்மையே செய்ய வேண்டும். நாம் பிறரது தவறுகளை மன்னித்தால் கடவுள் நமது தவறுகளை மன்னிப்பார். ஒவ்வொருவரும் தூய்மை, பணிவுடைமை, தன்னடக்கம், பொறுமை, ஈகை, உண்மை ஆகிய சிரிய பண்புகளை மேற்கொண்டு இறைவனை முழு மனதுடன் நேசித்து ஒழுகுவதன்மூலம் பேரின்பம் நிறைந்த பரலோக இராச்சியத்தில் இடம் பெறலாம்" என்பனவாகும்.

## 3. கிறிஸ்துவத்தின் வளர்ச்சி

இயேசு கிறிஸ்து கிறிஸ்தவ சமயத்தை மக்களிடையே பரப்பி வளரச் செய்வதற்கு 12 சீடர்களைத் தேர்ந்தெடுத்தார். இவரது போதனைகள் அடங்கிய நூல் **பைபிள் (Bible)** எனப்படும். இதுவே கிறிஸ்துவர்களின் புனித நூலாகும். இவரது சீடர்களால் கிறிஸ்தவ சமயத்தின் போதனைகள் தொகுக்கப்பட்டுப் **புதிய ஏற்பாடு** என்ற பெயருடன் பைபிளில் சேர்க்கப்பட்டுள்ளன. இவரது சீடர்களுள் **செயின்ட் தாமஸ்** முக்கியமானவர் ஆவார். இவர் கிறிஸ்தவ சமயம் கிழக்கு நாடுகளில் பரவுவதற்குக் காரணமாயிருந்தவர். இந்தியாவில் தங்கி இச்சமயத்தைப் பரப்பினார். சென்னைக்கு அருகிலுள்ள பரங்கி மலையில் கொல்லப்பட்டார்.

யூதர்களுள் ஒருவரான **சால் (Soul)** என்பவர் கிறிஸ்தவ சமயத்தை வெறுத்தார். கிறிஸ்தவர்களைத் துன்புறுத்தினார். ஆனால், திடீரென மனம் மாறி, **செயின்ட் பால்** என்ற பெயரில் கிறிஸ்துவின் போதனைகளைப் பல நாடுகளில் பரப்பிக் கிறிஸ்துவ சமயத்தின் ஒப்பற்ற தொண்டரானார். இயேசுவின் கொள்கைகளை ரோமானியத் தலைநகரிலும், சிரியா, ஆசியா மைனர், மத்தியதரைக் கடல் நாடுகளிலும் பரப்பினார். இவர் கி.பி. 64-ல் ரோமாபுரி

பேரரசர் **நீரோ (Nero)** வால் கொல்லப்பட்டார் என்று சொல்லப் படுகிறது. இவர் பல இடங்களில் திருச்சபைகளை நிறுவி அவைகளை இயேசு கிறிஸ்துவின் வழிபாட்டுக்குரிய புனிதத் திருக் கோயிலாக்கினார்.

ரோமப் பேரரசர்கள் கிறிஸ்தவர்களுக்குப் பல துன்பங்களை விளைவித்தனர். அநேகக் கிறிஸ்தவர்களைக் கொன்றனர். மக்கள் இந்தத் தண்டனையைத் தங்கள் சமயத்தின்பால் உள்ள பற்றின் காரணமாக விரும்பியேற்று உயிரைத் தியாகம் செய்தனர். 'தியாகி களின் இரத்தம் திருச்சபையின் வித்து' என்ற முதுமொழிக்கேற்ப இத்தியாகிகள் உயிர்த் தியாகமே கிறிஸ்துவ சமயம் நன்கு தழைத் தோங்கக் காரணமாயிற்று.

**கான்ஸ்டன்டைன்** என்ற ரோமப் பேரரசர் கிறிஸ்தவ சமயத்தை ஏற்றுக் கொண்டது அச்சமயம் வளர்ச்சியடையப் பெரிதும் உதவியது. கி.பி. 313-ல் கிறிஸ்தவர்களுக்கு கான்ஸ்டன்டைன் **மிலான் சாசனத்தின்** மூலம் சமய உரிமை அளித்தார். அவருக்குப் பின் வந்த **தியோடோசியஸ்** என்னும் பேரரசர் கிறிஸ்தவ சமயத்தைத் தமது அரசாங்க சமயமாக ஏற்றுக்கொண்டார். அதனால் ரோமப் பேரரசு முழுவதும் கிறிஸ்தவ சமயம் பரவியது.

புத்த சமயம் இந்தியாவில் தோன்றி இந்தியாவில் பரவாது உலகெங்கும் பரவியது. அதுபோலவே யூதரால் தோற்றுவிக்கப்பட்ட கிறிஸ்தவ சமயம் யூத நாட்டில் பரவாமல் அயல்நாடுகளில் பரவி இன்று உலக சமயமாக விளங்குகிறது. பிறந்த பாலஸ்தீன நாட்டில் மறைந்தது.

### கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களை நிரப்புக :**

1. பத்துக் கட்டளைகளை யூதர்களுக்கு வழங்கியவர் ———— .
2. இயேசு கிறிஸ்துவின் பிறப்பிடம் ———— .
3. கிறிஸ்தவ சமயத்தைப் பரப்ப இந்தியாவிற்கு வந்த இயேசுவின் முக்கிய சீடர் ———— .
4. கி.பி. 64-ல் ———— நீரோ பேரரசரால் கொல்லப்பட்டார்.
5. கிறிஸ்தவர்களின் வேதநூல் ———— ஆகும்.

**II. குறுகிய விடையளிக்கவும் :**

1. டயஸ்போரா என்றால் என்ன ?
2. கிறிஸ்தவ சமயம் பரவுவதற்கு செயின்ட் பால் ஆற்றிய தொண்டு யாது ?
3. கிறிஸ்தவ சமயத்திற்குக் கான்ஸ்டன்டைன் ஆற்றிய முக்கிய பணி யாது ?

**III. விரிவான விடையளிக்கவும் :**

1. இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றையும் போதனைகளையும் விவரிக்கவும்.
2. கிறிஸ்தவ சமயம் பரவிய வரலாற்றை விவரிக்கவும்.
3. பாலஸ்தீன நாட்டின் யூதர்களைப்பற்றி எழுதுக.

**பயிற்சி**

1. உலக வரைபடத்தில் பாலஸ்தீனம், செருசலம், எகிப்து, சிரியா, மத்தியதரைக் கடல் ஆகிய பகுதிகளைக் குறிக்கவும்.
2. உன் ஊரிலுள்ள கிறிஸ்தவ ஆலயத்திற்குச் சென்று வருக.
3. கிறிஸ்தவர்களின் வழிபாட்டு முறைகளை அறிந்திடுக.

# 10. அலைகடலுக்கப்பால் இந்தியப் பண்பாடு

**முன்னுரை**

ஒரு நாட்டின் நாகரிகம் பிற நாடுகளுக்குப் பரவ வேண்டுமானால், அந்நாகரிகம் தலைசிறந்த நாகரிகமாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் பிறநாட்டு மக்கள் அதை ஏற்றுக் கொள்ளுவார்கள். அந்நாகரிகம் வியாபாரம், குடியேற்றம், படையெடுப்பு ஆகியவற்றின் மூலம் பரவும். உதாரணமாக, சிறந்த கிரேக்க நாகரிகம், வாணிகம், குடியேற்றம் மூலம் மத்தியதரைக்கடல் நாடுகளில் பரவியது. அலெக்சாண்டர் படையெடுப்பால் ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளிலும் பரவியது. ரோம நாகரிகமும், ரோமப் படை

யெடுப்புகளாலும் ரோமப் பேரரசாலும் ஐரோப்பா, ஆப்பிரிக்கா, ஆசியா நாடுகளில் பரவியது. நமது நாட்டு நாகரிகமும் கடல் கடந்த அண்டை நாடுகளுக்குப் பரவியதற்குக் காரணங்கள்: 1. வாணிகம், 2. குடியேற்றம், 3. படையெடுப்பு, 4. நமது நாட்டு நாகரிகத்தின் சிறப்பு, 5. நாடுகள் அண்மையில் அமைந்து உள்ளமை. இம் மாதிரி அலை கடலுக்கப்பால் பரவிய நமது இந்தியப் பண்பாட்டை இங்குக் காண்போம்.

இந்தியர்கள் வாணிகம் செய்து பொருள் ஈட்டும்பொருட்டு அயல்நாடுகளுக்குச் சென்று வந்தனர். நாளடைவில் அங்கு தங்கிப் பின் அவர்கள் கடல் மார்க்கமாகவும், தரை மார்க்கமாகவும், கடல்-தரை மார்க்கமாகவும் அயல்நாடுகளுக்குச் செல்லலாயினர். அக் காலத்தில் சிறந்து விளங்கிய, உன்னத நிலையிலிருந்த உலகப் பண்டக சாலை நிஜ்னி நவகாடில் (Nigni Navegad) இந்தியர்கள் வாணிகம் செய்தனர். அங்கு அவர்கள் குடியேறியதன் காரணமாகத் தங்களது சீரிய பண்பாட்டைச் சென்ற இடங்களிளெல்லாம் பரப்பலாயினர். உலகின் எல்லாப் பாகங்களிலும் இந்தியப் பண்பாடு வளரலாயிற்று.

பிற்காலச் சோழர்கள் ஆட்சியில் அரசர்கள் கடல் கடந்தும் தங்கள் அரசை நிறுவ முயன்றார்கள். குறிப்பாக இராஜேந்திர சோழர் கடாரம் பகுதியைக் கைப்பற்றி அங்கு குடியிருப்புகளை அமைத்தார் எனவும், தன் கொடிக்கீழ்க் கொணர்ந்தார் எனவும் தமிழ் நூல்களில் குறிப்புகள் காணப்படுகின்றன. இவர்களது முயற்சியால் தென்கிழக்கு ஆசியா நாடுகளான சுமத்ரா, ஜாவா, போர்னியோ போன்ற நாடுகளில் இந்தியப் பண்பாடு, கலாச்சாரங்கள் சிறப்புடன் பரவியுள்ளதைக் காணலாம். இந்தியத் திருக்கோவில்களும், புத்தவிகாரங்களும் மக்கள் வழிபடுவதற்குரிய இடங்களாக உள்ளதையும் பார்க்கலாம்.

### I. இலங்கை

இலங்கையின் வரலாறு கூறும் நூல் **மகாவம்சம்** என்னும் நூலாகும். இலங்கையில் இந்தியப் பண்பாடு சிங்கள நாட்டுக் கலாசாரத்துடன் கலந்ததைப்பற்றி ஆதாரத்துடன் இந்நூல் விளக்குகிறது. அசோகர் புத்த சமயத்தை இலங்கையில் பரப்புவதற்காகத் தமது மகனையும் மகளையும் அனுப்பினார். அதனால் பல புத்த மடங்கள் நிறுவப்பட்டன. இலங்கைக்கும் இந்தியாவிற்கும் நெருங்கிய தொடர்பு இருந்ததனைச் சங்கத்தமிழ் இலக்கியங்




படம் 16. தென்கிழக்கு ஆசியா

கள் மூலமாகத் தெள்ளத் தெளிய அறியலாம். இலங்கை மன்னன் **கயவாகு**, சேரன் செங்குட்டுவனைச் சந்தித்த நிகழ்ச்சி சிலப்பதிகாரத்தில் காணப்படுகிறது. இரு நாடுகளுக்குமிடையே வாணிகம் நடைபெற்றதால் தமிழர்கள் இலங்கையின் ஒரு பகுதியில் குடியேறி வாழத் தலைப்பட்டனர்.

குப்தர்கள் ஆட்சியிலிருந்தபோது சமுத்திர குப்தரின் முன் அனுமதி பெற்று இலங்கை மன்னனான **மேகவர்மன்** என்பவர் கயாவில் ஒரு புத்த மடத்தை நிறுவினார். கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் அஜந்தா ஓவியங்களின் மாதிரிச் சிற்பங்கள் சிகிரியா மலையில் வண்ண ஓவியங்களாகத் தீட்டப்பட்டன. சீன யாத்திரிகரான **பாகியான்** என்பவர் தம்முடைய குறிப்பில் இலங்கைக்கும் இந்தியாவிற்கும் இடையே நடைபெற்ற வாணிகத்தைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். பல்லவர்களும் இலங்கை மன்னர்களுக்கு உதவி புரிந்தனர். **மானவர்மன்** என்னும் இலங்கை மன்னன் நரசிம்மவர்மனிடம் உதவி பெற்றான் என நூல் குறிப்பு கூறுகிறது. இலங்கை மக்கள் இந்தியப் பண்பாட்டின் சிறப்புகளைத் தமதாக்கிக் கொண்டனர். இலங்கையில் சிவன் கோயில் சோழர்களால் கட்டப்பட்டுள்ளது. இக்கோயிலில் சிறந்த ஓவியங்கள், சிற்பங்கள் இந்திய முறையில் காணப்படுகின்றன.

கி.பி. 10, 11ஆவது நூற்றாண்டுகளில் சோழப் பேரரசர்கள் தஞ்சையிலிருந்து ஆண்டபோது இலங்கையின் ஒரு பகுதி சோழப் பேரரசில் அடங்கி இருந்தது. இராசஇராச சோழனும், இராசேந்திர சோழனும் இலங்கைமீது படையெடுத்து, இலங்கையில் **ஈழ நாடு** என்று சொல்லப்பட்ட வடகிழக்குப் பகுதியைத் தங்களது ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்தனர். அப்பொழுது அப்பகுதியில் தமிழ் மக்கள் குடியேறி தமிழ் நாகரிகத்தைப் பரப்பினர். அன்று முதல் இன்று வரை ஈழநாடு தமிழ்மக்கள் வாழும் பகுதியாக இருந்து வருகிறது. தமிழ் மக்கள் பெரும்பாலோர் வழிபடும் முருகக் கடவுள் அங்கு வணங்கப்படும் ஒரு முக்கிய தெய்வமாகும்.

## II. தென்கிழக்கு ஆசியா

தென்கிழக்கு ஆசியாவில் **பர்மா, இந்தோ-சீனா, தாய்லாந்து, (சயாம்), பிலிப்பைன்ஸ், மலேசியா** போன்ற நாடுகள் அடங்கும்.

**பர்மா :** கனிஷ்கர் மகாயான புத்த சமயத்தைப் பர்மாவில் பரப்ப முயன்றபோது இந்தியப் பண்பாடும் முதன்முதலில் பரவத் தொடங்கியது. இந்தியாவிற்கு மணிப்பூர் வழியாக பர்மாவிற்குத் தொடர்பு ஏற்பட்டதெனலாம். இத் தொடர்பினால்தான் பர்மாவில் புராண காவியங்கள் ஏற்பட்டன. அக்காலத்தில் நூல்கள் பாலி மொழியிலும் வடமொழியிலும் எழுதப்பட்டன. சமயத்துறை, சிற்பம், கட்டடம், ஓவியம், இசை, நடனம், நாடகம் ஆகிய கலைகள் அனைத்தையும் இந்தியரிடமிருந்து பெற்று இந்திய மக்களைப் போலவே பர்மிய மக்கள் இன்றும் வாழ்கின்றனர்.

**இந்தோ-சீனா :** இந்தோசீனாவில் கம்போடியா அல்லது **கம்பூச்சியா, லாவோஸ், வியட்நாம்** ஆகிய நாடுகள் அடங்கி உள்ளன. இந்தோ சீனா பர்மாவுக்குக் கிழக்கே உள்ளது. முதல் நூற்றாண்டில் இந்தோ சீனாவில் இந்துக்கள் தங்களது குடியிருப்புகளை அமைத்தனர். இஸ்லாமிய சமயம் இங்கு பரவும் வரை, அதாவது 16ஆம் நூற்றாண்டு வரை, இந்தோ சீனாவில் இந்தியப் பண்பாடு பின்பற்றப் பட்டது. 'இந்தோ' என்ற அடைமொழியிலிருந்து நாம் இதனை அறியலாம்.

கி. பி. ஆறாம் நூற்றாண்டு வரை இந்தோ சீனாவிலுள்ள **பியூனான்** நாட்டை இந்து அரசர்கள் ஆண்டு வந்தனர். இவர்களுள் **ஜெயவர்மன்** (கி.பி. 484—514) சிறந்தவராவார். இவர் காலத்தில் இந்து சமயம், புத்த சமயம் இரண்டும் சிறந்து விளங்கின. புத்தருக்குக் கோயில் கட்டி வழிபடும் முறை தோன்றியதாக அங்கு காணப்படும் கல்வெட்டுகளிலிருந்து நாம் அறிகிறோம்.

இந்தோ சீனாவின் அடுத்த பகுதி **கம்போஜா** அல்லது **கம்போடியா** ஆகும். **காம்பு' சுயம்புவா** என்பவரால் இந்த அரசு ஏற்பட்டது. ஆகவே, இது கம்போஜா என அழைக்கப்பட்டது. இன்று அது **காம்பூச்சியா** என்று அழைக்கப்படுகிறது. சிவாலயங்களும் விஷ்ணு ஆலயங்களும் தோன்றின. இவைகள் தென்னிந்திய முறையில் கட்டப்பட்டன. தென்னிந்திய முறையில் வழிபாடுகள் நடத்தப் பட்டன. வங்காளத்தைப் பால அரசர்கள் ஆட்சி செய்தபொழுது கம்போஜாவில் மகாயான புத்த சமயம் பரவியது. அப்பொழுது புத்தவிகாரங்கள் தோன்றின. கம்போஜாவை ஆண்ட அரசர்களுள் **சூரியவர்மன்** (கி.பி. 1,112) சிறந்தவராவார். இவர் இந்து மதத்தில் பற்றுடையவர். கலைகளிலும் ஆர்வம் கொண்டவர். **அங்கோர் தம்**

என்னும் தலைநகரில் உலகின் மிகச்சிறந்த விஷ்ணு கோயிலான **அங்கோர்வாட்** இவரால் கட்டப்பட்டது. இக்கோயில் திராவிட கட்டட முறையில் அமைக்கப்பட்டது. மற்றும் இராமாயணம், மகாபாரதம், ஹரிவம்சம் போன்ற காப்பியங்களுள் காணப்படும் நிகழ்ச்சிகள் இக் கோயில்களில் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. தவிர தங்கத்தி னாலான கவசங்கள் செய்யப்பட்டுக் கோயிலின் கோபுரங்களில் வேயப் பட்டுள்ளன.

## தாய்லாந்து

**தாய்லாந்து (சயாம்)** சயாம் நாட்டில் இந்தியப் பண்பாடு பரவியுள் ளது. சயாம் நாட்டு மன்னர்கள் இந்தியப் பண்பாட்டின் அடிப்படையில் சட்டங்களை ஏற்படுத்தி அவைகளைப் பின்பற்றினர். வடமொழி அரசு அலுவலகங்களில் பயன்படுத்தப்பட்டது. இதன் தலைநகர் **பாங்காக்** ஆகும். இங்குள்ள கோயில்களில்'இராமாயண நிகழ்ச்சிகள்'செதுக்கப் பட்டுள்ளன. சயாம் நாடு தற்போது **தாய்லாந்து** என அழைக்கப்படு கிறது.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் **ஸ்ரீவிஜயன்** என்பவர் சுமத்திராத் தீவினை ஆண்டுவந்தார். அப்போது புத்த சமயம் நன்கு தழைத் தோங்கியிருந்தது. கி. பி. 675-ல் **இட்சிங்** என்ற சீன யாத்திரிகர் இங்கு வருகை தந்துள்ளார். சுமத்திராத் தீவு மூலமாகத்தான் இந்தியாவிற்கும் சீனாவிற்கும் வாணிகம் நடந்துவந்தது. கி.பி. 8ஆம் நூற்றாண்டின் முடிவில் **ஸ்ரீவிஜயம் சைலேந்திரப்** பேரரசாக விளங்கியது. இவ்வரசர்கள் ஜாவா, சுமத்திரா, மலேயா, கம்போஜா ஆகிய பகுதிகளை ஆண்டு வந்தனர். மகாயான புத்த சமயத்தை சைலேந்திரர்கள் பின்பற்றினர். இவர்கள் தமிழ்நாட்டை ஆண்டு வந்த சோழமன்னர்களுடனும், வங்காளத்தை ஆண்ட பால அரசர் களுடனும் தொடர்பு கொண்டிருந்தனர். ஜாவாவில் சிறந்த புத்த விகாரங்களை இவர்கள் அமைத்தனர். **போராபுதூர்** என்னும் இடத் திலுள்ள (ஜாவாத் தீவு) ஸ்தூபி புகழ் பெற்றது. இவர்களுக்குப் பின் ஆட்சி செய்த வமிசத்தினர் இந்து சமயத்தினை ஆதரித்தனர். கி.பி. 15 ஆம் நூற்றாண்டில் முஸ்லிம்களால் சுமத்திரா, ஜாவா பகுதிகள் கைப்பற்றப்பட்டன. இருப்பினும் அருகிலுள்ள **பாலித்** தீவில் இந்து சமயம் தொடர்ந்து பின்பற்றப்பட்டது. பாலித் தீவினர் கடவுள் வழிபாட்டிற்கு வடமொழியைப் பயன்படுத்தினர்.

மலேயாவும், சைலேந்திரப் பேரரசின் கீழிருந்து வந்தது. கி. பி. 1,025-ல் இராசேந்திரச் சோழன் கடற்படையை அனுப்பி, கடாரத்தை

வென்று, **கடாரம் கொண்டான்** என்னும் சிறப்புப் பெயரையும் பெற்றான் என்று குறிப்புகள் கூறுகின்றன. இக் கடாரம் மலேயாவில் உள்ள ஒரு பகுதி எனக் கருதப்படுகிறது.

தென்கிழக்குப் பகுதியில் இந்தியக் கலாச்சாரம் பரவியுள்ளது என்பதை இதிலிருந்து அறிகிறோம். அவர்களது அரசியல் நிர்வாகம், கோயில் கட்டும் முறை, சிற்ப வேலைப்பாடுகள் இந்தியப் பண்பாட்டைப் பின்பற்றியுள்ளன. தவிர, உடன்கட்டையேறும் பழக்கம், அரிசி உணவு, இறந்தவர்களை எரிக்கும் முறை, புகையிலையைப் பயன்படுத்துதல், பொழுதுபோக்குக் கேளிக்கையான கோழிச் சண்டை முதலியன இந்தியப் பண்பாடு தென்கிழக்குப் பகுதியில் வேரூன்றி நிலைபெற்றதன் விளைவுகளாகும்.

## III. சீனா

அசோகர் காலத்தில் புத்த சமயம் தென்கிழக்காசியாவிலும், தென்மேற்கு ஆசியாவிலும் பரவியது. பின்னர் ஆட்சி செய்த கனிஷ்கர் காலத்தில் மத்திய ஆசியாவிலும் பரவியது. அங்கிருந்துதான் சீனாவிற்கும் புத்த சமயம் பரவிற்று. சீன மக்களும் புத்த சமயத்தை விரும்பி ஏற்றனர். மேலும் புத்த சமயத்தைப் பற்றிய கருத்துகளை அறிய சீன அறிஞர்களுள் சிலர் புத்த சமயம் தோன்றிய இந்தியாவிற்கு வருகை தர ஆவல் கொண்டனர். இதன் விளைவாக இந்தியாவிற்கும், சீனாவிற்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. புத்த சமயம் தோன்றுவதற்கு முன்னரே சீனர்கள் இந்தியாவுடன் வியாபாரம் மூலமாகத் தொடர்பு கொண்டிருந்தனர். இந்தியாவிற்கு சீனர்கள் கோபி பாலைவனம், திபெத்தின் மூலமாக வந்தனர். புத்த சமயமும், இந்தியப் பண்பாடும் மத்திய ஆசியாவிலும், தென்கிழக்காசியாவிலும் பரவியிருந்ததால் சீனாவிலிருந்தும், இந்தியா



படம் 17. யுவான் சுவாங்

விலிருந்தும் செல்லும் யாத்ரிகர்களுக்கு மக்களிடையே நல்ல மதிப்பும், தேவையான உதவிகளும் கிடைத்தன.

கி. பி. 67-ல் இந்தியாவிலிருந்து சீனாவிற்குச் சென்ற அறிஞர் **காஸ்யப மாதங்கர்** என்பவராவர். இவருக்குப் பின் **குணராஜிவா** என்பவர் சென்றார். இவர்கள் வடமொழி நூல்களைச் சீன மொழியில் மொழிபெயர்த்தனர். தவிர சீன மொழியிலும் பல நூல்களை எழுதியுள்ளனர். இதன் காரணமாகப் பல சீன அறிஞர்கள் இந்தியாவிற்கு வந்தனர். அவர்களுள் **பாஹியான், யுவான்சுவாங், இட்சிங்** ஆகியோர் முக்கியமானவர்களாவர்.

புத்த சமயம் முதன் முதலில் தோன்றிய இடமான இந்தியாவில் நலிந்ததனால் சீனாவிலிருந்து வருகை புரிந்த அறிஞர்களின் வரவும் தடைப்பட்டது. இருப்பினும் இரு நாடுகளுக்கிடையே இருந்த வியாபாரத் தொடர்பு பல ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்று வந்தது. இன்றும் வியாபாரத் தொடர்பு நீங்கலாக அறிஞர்களையும் கலைஞர்களையும் பரிமாறிக் கொள்வதன் மூலம் இது தொடர்ந்து வருகிறது.

## கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களை நிரப்புக :**

1. ஸ்ரீ விஜயப் பேரரசு ———— தீவில் அமைந்துள்ளது.
2. சூரியவர்மன் தன் தலை நகரில் ———— என்ற விஷ்ணு கோயிலைக் கட்டினார்.
3. தற்காலத்தில் சயாம் நாடு ———— என அழைக்கப் படுகிறது.

**II. குறுகிய விடையளிக்கவும் :**

1. தென்கிழக்காசியாவில் அடங்கியுள்ள நாடுகள் யாவை?
2. அங்கோர வாட் ஆலயத்தின் சிறப்புகள் யாவை ?
3. இராசேந்திரச் சோழன் தென்கிழக்காசியப் பகுதியில், தென்னிந்தியப் பண்பாட்டை எவ்விதம் பரப்பினார் ?
4. சைலேந்திரர்களைப் பற்றிக் குறிப்பெழுது.
5. இந்தியாவிற்கும், சீனாவிற்குமுள்ள தொடர்பு தடைப் பட்டதற்குக் காரணம் யாது ?

**III. விரிவான விடையளிக்கவும் :**

1. அலை கடலுக்கப்பால் இந்தியக் கலாச்சாரம் பரவிய விதத்தினைத் தெளிவாக எழுதுக.
2. இந்தியாவிற்கும், இலங்கைக்கும் இருந்து வந்த தொடர்பினை எழுதுக.

**பயிற்சி**

தென்கிழக்காசியப் படத்தில் பண்டைக் கால நாடுகளையும், நகரங்களையும் குறிக்கவும்.

# 11. முஸ்லிம்கள் ஆதிக்கம்

## (கி.பி. 7 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 16 ஆம் நூற்றாண்டு வரை)

**முன்னுரை**

உலக சமயங்களுள் இஸ்லாமின் தனிச்சிறப்பு என்னவென்றால், அது அரேபியாவில் தோன்றிய சில வருடங்களுக்கெல்லாம் அயல் நாடுகளுக்குப் பரவி ஓர் இஸ்லாமியப் பேரரசு அமைப்பதற்கும் உதவியது. அந்தச் சமயத்தின் தோற்றத்தையும், வளர்ச்சியையும், ஆதிக்கத்தையும், அது உலக நாகரிக வளர்ச்சிக்கு ஆற்றியுள்ள நற்பணிகளையும் இங்கு காண்போம்.

## முகம்மது நபியும், இஸ்லாம் சமயமும்

**முகம்மது நபி**

தென்மேற்கு ஆசியாவிலுள்ள அரேபியா ஒரு பாலைவன நாடு. அந்நாட்டில் மெக்கா என்னும் ஊரில் கி. பி. 571-ல் முகம்மது பிறந்தார். அவரது தந்தை **அப்துல்லா**, தாயார் **ஆமீனா** என்பவர்களாவர். முகம்மது பிறக்குமுன்பே அவரது தாயார் கர்ப்பமாக இருந்தபொழுது அவரது தந்தையார் காலமானார். தாயாரும் அவர் பிறந்த பின் சில ஆண்டுகளில் உயிர் நீத்தார். எனவே அவர் அவரது உறவினர்களின் பராமரிப்பில் வளர்ந்து வந்தார். அவர் சிறுவயதில் ஆடு மேய்த்து வந்தாரெனினும், அவர் தம் பெரிய தந்தையிடம் வாணிகத்தொழில் முறை பயின்று சிரியா போன்ற வெளிநாடுகளுக்கு அவருடன் சென்று வாணிகம் புரிந்து வந்தார். அவரது வணிகத் திறமையையும் பொறுப்புணர்ச்சியையும் கண்ட விதவையான **கதீஜா** என்ற செல்வச் சீமாட்டி தம் வெளிநாட்டு வாணிகத்தைக் கவனிக்க



படம் 18. புனித மெக்கா

அவரைத் தம்மிடம் வேலைக்கமர்த்தினார். முகம்மதுவின் நேர்மையும், நல்லொழுக்கமும் கதீஜாவைக் கவர்ந்தன. அவர்கள் இருவரும் திருமணம் செய்துகொண்டனர். அவர் காலத்தில் அரேபியர்கள் மூடப் பழக்கவழக்கங்கள் உடையவர்களாக இருந்தனர். அவர்கள் பல தெய்வங்களை வழிபட்டு வந்தனர். அத்தகைய 'அரேபிய மக்க ளினத்தைத் திருத்தி உய்விக்க அவர் பதினைந்து ஆண்டுகளாகச் சிந்தனை புரிந்தார். அவரது நாற்பதாவது வயதில் ரம்ஸான் மாதத்தில் அவர் **ஹீரா** என்னும் மலைக்குகையினுள் இறைவனைத் தியானம் செய்து கொண்டிருந்தபொழுது **ஜிப்ரீல்** என்ற வானவர் அவர்முன் தோன்றி அவரிடம் ஐந்து திரு வாக்கியங்கள் உச்சரித்து அவரைத் தழுவி மறைந்ததாகக் கூறப்படுகிறது. இவ்வாறு இறை வனின் அருளைப் பெற்றதால் அவர் **நபி** என அழைக்கப்படலானார். அடிக்கடி அவருக்கு இறைவனிடமிருந்து கட்டளைகள் கிடைத்தன. அவைகளை முகம்மது நபி வெளியே கூறிய பொழுது அவற்றை அவரது நண்பர்கள் எழுதிவைத்தனர். அவற்றின் தொகுப்பே திருக்குர் ஆன் ஆகும். அதுவே முஸ்லிம்களின் புனித நூலாகும் நபிகள் நாயகம் போதித்த உண்மைகள் இஸ்லாம் சமயமாகும். அச்சமயத்தைப் பின் பற்றுபவர்கள் முஸ்லிம்கள் ஆவர்.

## இஸ்லாம் சமயத்தின் முக்கிய கோட்பாடுகள்

இஸ்லாம் சமயத்தின் முக்கிய கோட்பாடு, 'கடவுள் ஒருவரே அவரே அல்லா. முகம்மது நபி அவருடைய தீர்க்கதரிசி' என்பதாகும். மக்கள் அனைவரும் சகோதரர்கள், செல்வத்தால் உயர்வு தாழ்வு பாராட்டக்கூடாது. ஒவ்வொரு முஸ்லிமும் தினமும் ஐந்து முறை ஆண்டவனைத் தொழ வேண்டும். ஒவ்வொரு வருடமும் ரம்ஸான் மாதத்தில் விடிவதற்கு முன்பிருந்து சூரியன் மறையும் வரை இஸ்லாம் முறைப்படி நோன்பு இருத்தல் வேண்டும். ஒவ்வொரு முஸ்லிமும் வசதியிருந்தால் தம் வாழ்நாளில் ஒரு முறையேனும் மெக்காவிற்குப் புனிதப் பயணம் செய்ய வேண்டும். மது அருந்துதல் கூடாது. ஒருவர் தாம் பிறருக்குக் கடனாகக் கொடுத்த பணத்திற்கு வட்டி வாங்கக் கூடாது. தமது வருமானத்தில் ஒரு பகுதியை தருமம் செய்ய வேண்டும். இவையாவும் இஸ்லாம் சமயக் கோட் பாடுகளாகும்.

ஆரம்பத்தில் முகம்மது நபி தமது கொள்கைகளைத் தம் மனைவி, உறவினர், நண்பர்களிடையே மட்டும் கூறினார். அவர் அரேபிய

மக்களிடையே தம் போதனைகளைப் பரப்ப முயன்றபொழுது, அரேபியர்கள் அவரது போதனைகளை ஏற்காது வெறுத்து அவருக்கு பலவாறும் துன்பம் இழைத்ததோடன்றி அவரைக் கொல்லவும் சதி செய்தனர். அதனால் அவர் கி.பி. 622-ல் செப்டம்பரில் மெக்காவிலிருந்து ஏறத்தாழ 520 கிலோ மீட்டருக்கு அப்பால் வடக்கில் அமைந்திருந்த மெதினாவிற்குச் சென்றார். அந் நிகழ்ச்சிக்கு **ஹிஜிரா** அல்லது **ஹிஜ்ரத்** என்று பெயர். அந்த முக்கிய ஆண்டிலிருந்து முஸ்லிம்களின் ஹிஜிரி சகாப்தம் தொடங்குகிறது. மெதினா மக்கள் முகம்மது நபியின் கொள்கையை ஏற்றுக் கொண்டனர். கி.பி. 630-ல் மெதினாவிலிருந்து அவர் பெரும் படையுடன் மெக்காவிற்கு வந்து அதனை வென்றார். அதன்பின் இஸ்லாம் சமயம் அரேபியா முழுவதிலும் பரவத் தொடங்கியது. முகம்மது நபி சமயத் தலைவராகவும் அரசியல் தலைவராகவும் விளங்கினார். அவர் கி.பி. 632-ல் தனது 62வது வயதில் காலமானார்.

## இஸ்லாம் சமயத்தின் வளர்ச்சி—கலிப்பாக்கள்

நபி நாயகத்தின் மறைவுக்குப் பின் அவர் வகுத்திருந்த திட்டத்தை நிறைவேற்ற கலிபா என்ற பதவியை அவரது சீடர்கள் ஏற்படுத்தினார்கள். கலிபா, இஸ்லாம் சமயத்தின் தலைவராகவும் அரேபியா இராச்சியத்தின் அரசியல் தலைவராகவும் விளங்கினார். அவர் முகம்மது நபியின் பிரதிநிதியாகக் கருதப்பட்டார். கலிபாக்களின் ஆட்சிமுறை, சமயச்சார்பு ஆட்சிமுறை (Theocracy) எனப்படும். அதாவது அரசியலும் சமயமும் இணைந்த ஓர் ஆட்சி. அதில் சமயத்திற்கே முக்கியத்துவம் அளிக்கப்பட்டது.

**முதல் கலிபாக்கள்** (மெதினா-அரேபியா) (கி.பி. 635—கி.பி. 661)

முதல் கலிபாக்கள் மெதினாவிலேயே தங்கியிருந்தனர். முகம்மது நபி காலமானபின் அவரது உறவினரான **அபுபெக்கர்** (கி.பி. 632—கி.பி. 634) கலிபா ஆனார். இரண்டாவது கலிபா **உமர்** (கி.பி. 634—644) காலத்தில் அரேபிய முஸ்லிம்கள் பலவெற்றிகளைப் பெற்றனர். சிரியா முழுவதையும் அரேபியர் வென்றனர். பின்னர் யூப்ரடிஸ்-டைக்ரீஸ் ஆறுகளின் பள்ளத்தாக்கு முழுவதும் அவர்கள் வசமாயிற்று. பாரசீகத்தில் ஆட்சி புரிந்து வந்த சாசானித் வமிசத்து அரசர்களை நீக்கிவிட்டு அவர்கள் பாரசீகத்தைத் 'தங்கள் ஆட்சிக்குட்படுத்தினர். பின்பு ஆர்மீனியாவையும், எகிப்தையும் வென்றனர்.

## II. ஓமையாத் கலிபாக்கள் (டமாஸ்கஸ்-சிரியா) (கி.பி. 661—750)

**ஓமையாத்** கலிபா வமிசத்தை, ஐந்தாவது கலிபாவான **முவாவியா** ஏற்படுத்தினார். அவர் வட ஆப்பிரிக்காவை வென்றார். அங்குள்ள மூர்களும், பெர்பர்களும் இஸ்லாமைத் தழுவினர். அவர் சிரியாவி லுள்ள டமாஸ்கஸ் நகரைத் தமது பேரரசின் தலைநகராக்கிக் கொண்டார். அவருக்குப்பின் வந்த **எஸ்ஸிட்** கலிபா காலத்தில் முஸ்லிம்களுள் **ஷியா, சுன்னி** என்ற இரு பிரிவுகள் தோன்றின. எஸ் ஸிட்டுக்குப் பின் வந்த **அப்துல்மாலிக்** கலிபாவின் தளகர்த்தர் **டரிக்** என்பவர் ஜிப்ரால்டரைக் கைப்பற்றி ஸ்பெயின் நாட்டை முஸ்லிம் ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்தார். அவருக்குப்பின் வந்த **வாலித்** என்ற கலிபா மத்திய தரைக்கடலில் இருந்த முக்கியமான தீவுகளை வென்றார். அரேபியரின் ஆதிக்கம் மத்தியதரைக் கடல் பிரதேசம் முழுவதிலும் ஏற்பட்டது. அவரது ஒரு தளகர்த்தரான **முகம்மதுபின் காசிம்** இந்தியாவிலுள்ள சிந்து நாட்டைக் கைப்பற்றினார். இதுவே இந்தியாவின்மீது ஏற்பட்ட முதல் முஸ்லிம் படையெடுப்பாகும்.

## III. அபாஸித் கலிபாக்கள்— பாக்தாத் — ஈராக்
*(கி.பி. 750-11-வது நூற்றாண்டு)*

ஓமாயாத் கலிபா வமிசம் நீக்கப்பட்டு **அபாஸித் வமிசம்** பதவிக்கு வந்தது. அபாஸித் கலிபாக்கள் தலைநகரை டமாஸ்கஸிலிருந்து ஈராக்கிலுள்ள பாக்தாத் நகருக்கு மாற்றினர்.

அபாஸித் கலிபாக்களில் **ஹாரூன் அல் ரஷீத்** (கி.பி. 786—809) தலைசிறந்தவர். அவர் காலத்தில் பாக்தாத் முஸ்லிம் உலகத்தின் மிகச் சிறந்த நகரமாக விளங்கியது. அது செல்வமிக்க அழகான நகரமாகத் திகழ்ந்தது. அங்கு பள்ளிகளும், கல்லூரிகளும் பெரு மளவில் இருந்தன. அங்கு கவிஞர்கள், தத்துவஞானிகள், சமய சித்தாந்திகள், மருத்துவர்கள், மாணவர்கள் முதலியோர் உலகின் நாகரிகமிக்க பல பகுதிகளிலிருந்தும் வந்து கூடினர். அது ஒரு பெரிய வாணிகத்தலமாக விளங்கியது. சீனாவின் பட்டு வணிகர்களும் ரஷ்யா, எகிப்து, ஸ்பெயின் வாணிகர்களும் அங்கு கூடினர். ஹாரூன் கல்வியறிவு பெற்றவர். வரலாற்று நூல்களை முறையாகக் கற்றவர். கவி இயற்றும் திறன் படைத்தவர். அக்கால ஐரோப்பிய மன்னர்களுள் சிறந்தவரான **சார்லிமன்** பேரரசருடன் நல்லுறவு கொண்டிருந்தார். **அரேபிய இரவுகள்** என்ற நூலில் உள்ள பல கதைகளின் கதாநாயகர் இவரேயாவார்.




படம் 19. கி. பி. 750-ல் முஸ்லிம் பேரரசு

ஹாரூன் காலத்திற்குப் பின் அபாஸித் கலிபாக்களின் வலிமை குன்றியது. **அமீர்கள்** எனப்பட்ட மாநில ஆளுநர்கள் கலிபாவின் ஆட்சியிலிருந்து விலகிச் சிற்றரசர்கள் போன்று ஆட்சி புரியலாயினர். இவ்வாறு பாரசீகம், மெசபொடேமியா, சிரியா முதலிய நாடுகள் பேரரசிலிருந்து பிரிந்துவிட்டன. **செல்ஜுக் துருக்கியர்கள்** கிழக்கு மாநிலங்களில் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்திக்கொண்டனர். முஸ்லிம் பேரரசு பல பாகங்களாகப் பிரிந்தது.

## இந்தியாவின்மீது துருக்கிய ஆப்கானியர் படையெடுப்பு

இந்தியாவின்மீது முதன்முதலாகப் படையெடுத்த முஸ்லிம்கள் அரேபியர்கள் ஆவர் என்று முன்பே கூறப்பட்டிருக்கிறது. முகம்மது பின் காசிமின் படையெடுப்பால் சிந்துவில் முஸ்லிம் ஆட்சி ஏற்பட்டது. ஆனால் சிந்துவில் முஸ்லிம் ஆட்சி சில ஆண்டுகள் தான் நீடித்தது.

### I. முகம்மது கஜினி :

கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் துருக்கியர்கள் தென்மேற்கு ஆசியாவிலும், ஆப்கானிஸ்தானத்திலும் பல இராச்சியங்களை நிறுவினர். அவைகளுள் கஜினியைத் தலைநகராகக்கொண்ட முஸ்லிம் இராச்சியமும் ஒன்றாகும். அதனை ஆண்ட முகம்மது கஜினி இந்தியாவின்மீது பல தடவைகள் படையெடுத்தார். அவர் தம் படையெடுப்புகளின் மூலம் இந்தியாவிலிருந்து அளப்பரிய செல்வத்தை தம் நாட்டிற்குக் கொண்டு சென்றார்.

### II. முகம்மது கோரி :

ஆப்கானிஸ்தானத்தில் கஜினி வமிசத்தினர்களின் செல்வாக்கு குறையவே, **கோர்** என்ற பகுதியில் ஆண்டுவந்த மற்றொரு துருக்கிய வமிசத்தினர் வலிமை பெற்றனர். கோர் அரசர்களில் மிகவும் புகழ் பெற்றவர் **முகம்மது கோரி**யாவார். அவர் முகம்மது கஜினியைப் போலன்றி இந்தியாவை வென்று இந்தியாவில் ஒரு முஸ்லிம் இராச்சியத்தை நிறுவ வேண்டும் என்ற நோக்கம் கொண்டிருந்தார். அவர் இந்தியாமீது படையெடுத்து டில்லி, ஆஜ்மீர், இராச்சியங்களை ஆட்சி புரிந்து வந்த **பிரிதிவிராஜரையும்** கன்னோசி அரசர் **ஜெயச்சந்திரரையும்** தோற்கடித்தார். டில்லி, ஆஜ்மீர், கன்னோசி பகுதிகள் கோரி வசமாயின. வட இந்தியாவில் பெரும்பகுதியை வென்ற பின் முகம்மது கோரி தம்முடைய

நம்பிக்கைக்குரிய அடிமைகளுள் ஒருவரான **குத்புதீன்ஐபக்** என்பவரைத் தாம் இந்தியாவில் வென்ற பகுதிகளுக்கு அரசப்பிரதிநிதியாக நியமித்துவிட்டு நாடு திரும்பினார். அவர் இறந்தபின் குத்புதீன்ஐபக் சுயேச்சை பெற்று டில்லி சுல்தான் ஆனார். இவ்வாறு இந்தியாவில் டில்லியில் முஸ்லிம் ஆட்சி தொடங்கியது.

## இந்தியாவில் டில்லி சுல்தான்கள் ஆட்சி
## *(கி. பி. 1206 – 1526)*

### I. முக்கிய சுல்தான்கள்

1,206-லிருந்து 1,526 வரை ஐந்து வமிசங்கள் டில்லியிருந்து ஆட்சி புரிந்தன. அவை முறையே **அடிமை, கில்ஜி, துக்ளக், சையத், லோடி** வமிசங்களாகும். அடிமை வமிசத்து முக்கிய சுல்தான்கள் **குத்புத்தீன், அல்டமிஷ், பால்பன்** ஆகியோர் ஆவர். டில்லியிலுள்ள **குதுப்மினார்** குத்புத்தீன், அல்டாமிஷ் ஆகியோரால் கட்டப்பட்டது. கில்ஜி வமிசத்துதலை சிறந்த சுல்தான் **அலாவுதீன்** ஆவார். அவர் முஸ்லிம் பேரரசை தென்னிந்தியாவில பரவச் செய்தார். அவருக்குப் பின் வந்த **முகம்மது பின் துக்ளக்** தமது சிந்தனையற்ற செயல்களால் மக்களின் ஆதரவை இழந்தார். தலைநகரத்தை டில்லியிலிருந்து தேவகிரிக்கு மாற்றுதல், நாணய சீர்திருத்தம் முதலிய மாறுதல்களை மக்களைக் கலக்காமல் செய்தபடியால் அவை தோல்வியுற்றன. அதனால் அவர் மதிப்பை இழந்தார். துக்ளக் வமிச ஆட்சி இறுதியில் **தைமூர்** என்ற தார்த்தாரிய வீரர் இந்தியாவின் மீது படையெடுத்து டில்லியை சூறையாடினார். லோடி வமிசத்து கடைசி சுல்தானான **இப்ரஹீம் லோடி** கொடுங்கோல் மன்னர். மக்கள் அவரை வெறுத்தனர். அதைப் பயன்படுத்தி **பாபர்** இந்தியாவின் மீது படையெடுத்து, 1,526-ல் **முதல் பானிபட் போரில்** இப்ரஹீம் லோடியை தோற்கடித்தார். டில்லி சுல்தான்களின் ஆட்சி முடிவடைந்து, மொகலாயர் ஆட்சி தொடங்கியது.

### II. டில்லி சுல்தான்களின் ஆட்சி வீழ்ச்சியுறக் காரணங்கள்

முகம்மது துக்ளக்கின் விவேகமற்ற செயல்கள் நாட்டைப் பல வழிகளிலும் பலவீனப்படுத்தின. மாநில ஆளுநர்கள் சரிவரக் கண்காணிப்புக்குள்ளாகாமல் சுதந்திரம் அடையத் தலைப்பட்டனர் பிரபுக்கள் வலிமையடைந்து குழப்பங்களை விளைவித்தனர்.

படையின் வலிமை குன்றியது. சுல்தான்கள் ஆட்சிக்கு இந்துக்களிட மிருந்து எதிர்ப்புகள் தோன்றின. முஸ்லிம்களின் சுகபோக வாழ்க்கையும், இந்தியாவின் தட்ப வெப்ப நிலையும் அவர்களது உடல் உறுதியைக் குலைத்து விட்டன. தைமூரின் படையெடுப்பால் நாடு சிதறுண்டது.

## சிலுவைப்போர்கள்

ஐரோப்பாவிலுள்ள கிறிஸ்தவர்கள் தங்கள் புனித பூமியான பாலஸ்தீனத்தை முஸ்லிம் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்க அவர்களுடன் நடத்திய சமயப் போர்கள் சிலுவைப் போர்கள் எனப்படும். அவைகள் இருநூறு ஆண்டுகளாக இடைக்காலத்தில் விட்டு விட்டு நிகழ்ந்தன. அப்போர்களில் ஈடுபட்ட கிறிஸ்துவ வீரர்கள் சிலுவைச் சின்னம் அணிந்து போரிட்டமையால் அவை சிலுவைப் போர்கள் எனப் பெயர் பெற்றன.

### I. காரணங்கள்

நெடுங்காலமாகக் கிறிஸ்தவர்கள், கிறிஸ்து வாழ்ந்த புனித பூமிக்குச் சென்று அவர் பிறந்து வளர்ந்த இடங்களான பெத்லேகம், நாசரேத், ஜெருசலம் ஆகியவற்றைக்கண்டு வணங்கி வந்தனர். புனித பூமியான பாலஸ்தீனம் அரேபியர் வசம் இருந்தபொழுதும் அப்புனித யாத்ரிகர்கள் அங்கு தடையின்றி சென்று வந்தனர். ஆனால், கி. பி. 1,076-ல் செல்ஜுக் துருக்கியர்கள் ஜெருசலத்தை வென்று பாலஸ்தீனத்தில் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டிய பின் அங்கு சென்ற கிறிஸ்தவ யாத்திரிகர்கள் துன்புறுத்தப்பட்டனர். ஐரோப்பாவிலுள்ள கிறிஸ்தவ மன்னர்களும் மக்களும் புனித பூமியை மீட்பதற்காக போர் தொடுத்தனர்.

### II. போரின் போக்கு

**முதல் சிலுவைப் போர்** (கி.பி. 1096 — 1099) : **பீட்டர்** என்னும் துறவி பாலஸ்தீனம் சென்றபொழுது அங்குக் கிறிஸ்தவ யாத்திரிகர்கள் துன்புறுத்தப்படுவதை நேரில் கண்டு அதை போப்பாண்டவர் **இரண்டாம் அர்பனிடம்** முறையிட்டார். போப்பாண்டவரின் வேண்டுகோளின்படி ஐரோப்பாவிலுள்ள சிற்றரசர்களும், பிரபுக்களும் முதல் சிலுவைப் போரில் ஈடுபட்டனர். **காட்பிரேயின்**

தலைமையில் சிலுவைப் படையினர் ஜெருசலத்தைக் கைப்பற்றி காட்பிரேயை அதற்கு அரசராக்கிவிட்டு நாடு திரும்பினர். முதல் சிலுவைப் போரில் கிறிஸ்தவர்கள் வெற்றி பெற்றனர்.

**இரண்டாம் சிலுவைப்போர்** (கி. பி. 1147 —1149) : துருக்கியர் முயற்சி எடுத்து ஜெருசலத்தைக் கைப்பற்றினர். எனவே இரண்டாம் சிலுவைப்போர் நடந்தது. அதில் துருக்கியர் வெற்றி பெற்றனர்.

**மூன்றாம் சிலுவைப்போர்** (கி. பி. 1189 — 1192) : கி.பி. 1,187-ல் எகிப்து சுல்தானான **சாலடின்** ஜெருசலத்தைக் கைப்பற்றினார். இதை மீட்க மூன்றாம் சிலுவைப் போர் தொடங்கியது. ஆஸ்திரியப் பேரரசரான **பிரெடெரிக் பார்பரோஸா,** பிரான்சின் மன்னரான **பிலிப் அகஸ்டஸ்,** இங்கிலாந்தின் மன்னரான **முதலாம் ரிச்சர்டு** ஆகியோர் சிலுவைப் படையினரை நடத்திச் சென்றனர். செல்லும் வழியில் பிரெடெரிக் ஒரு சிற்றாற்றில் மூழ்கி இறந்தார். பிலிப்பும், ரிச்சர்டும் கடல்வழியாகச் சென்று **ஏக்கர்** என்ற நகரை அடைந்து அதைக் கைப்பற்றினார். பின்பு இருவருக்குமிடையே கருத்து வேற்றுமை தோன்றியதால் பிலிப் நாடு திரும்பினர். ரிச்சர்டு மட்டும் சாலடினுடன் இரண்டு ஆண்டுகள் போரிட்டார். **ஆர் சோப்** போரில் அவர் சாலடினைத் தோற்கடித்த போதிலும், ஜெருசலத்தைக் கைப்பற்ற முடியவில்லை. முடிவில் சாலடினுடன் உடன்படிக்கை செய்து கொண்டார். அதன்படி கிறிஸ்தவர்கள் புனித இடங்களுக்குச் செல்ல அனுமதிக்கப்பட்டனர்.

**நான்காம் சிலுவைப்போர்** (கி.பி. 1202 — 1204) : **மூன்றாம் இன்னாசென்ட்** என்ற போப்பாண்டவர் நான்காம் சிலுவைப்போர் தொடங்கப் பிரசாரம் செய்தார். சிலுவைப் படையினர் புனித பூமிக்குக் கப்பலில் செல்வதற்காக வெனிஸ் நகர் வந்து சேர்ந்தனர். வெனிஸ் நகரிலிருந்த வாணிகர்கள் கருங்கடல் பகுதியில் தங்கள் வாணிகத்தை வளர்ப்பதற்காக சிலுவைப் படையினரைக் கான்ஸ்டான்டிநோபிலைத் தாக்கும்படித் தூண்டினர். புனித பூமிக்குச் செல்வதற்கிருந்த சிலுவைப்படை, வெனிஸினால் கான்ஸ்டான்டிநோபிலுக்குத் திருப்பப்பட்டது. இவ்வாறு சிலுவைப்படை தவறான முறையில் பயன்படுத்தப்பட்டது.

**மற்ற சிலுவைப் போர்கள் :** கி. பி. 1,212-ல் சிறுவர்கள் மேற்கொண்ட சிலுவைப் போர்களும், ஐந்தாவது, ஆறுவது, ஏழாவது,

எட்டாவது சிலுவைப் போர்களும் தோல்வியில் முடிவடைந்தன. ஜெரூசலம் முஸ்லிம் வசமே இருந்தது.

### III. தோல்விக்குக் காரணங்கள்

கிறிஸ்தவ வீரர்களிடையே ஒற்றுமையின்மையும், தலைமை வகித்தவர்களிடையே போதிய ஆற்றலின்றிப் போட்டி மனப்பான்மை மட்டுமே இருந்தமையும் சிலுவைப் படையினர் தோல்விக்கு முக்கிய காரணங்களாகும். மேலும் முஸ்லிம்கள் சிலுவைப் படையினரைவிட வலிமைபெற்று விளங்கியதும் தோல்விக்குக் காரணமாகும்.

### IV. போரின் விளைவுகள்

சிலுவைப் போர்களின் விளைவாக ஐரோப்பாவில் படைமானிய முறை ஒழிந்தது. கப்பல் கட்டும் தொழில் வளர்ச்சியடைந்தது. ஐரோப்பியர் கிழக்குப் பிரதேசங்களைப்பற்றிஅறியவும் அவற்றுடன் வாணிகம் புரியவும் முடிந்தது. ஐரோப்பிய நாகரிகம் வளர்ந்தது. கலைகள் மறுமலர்ச்சி அடைந்தன. மக்கள் பலபகுதிகளுக்குச் சென்று வந்தமையால் அவர்களின் கருத்துக்கள் விரிவடைந்தன. அவர்கள் புதிய நாடுகளைக் காணும் முயற்சிகளில் ஈடுபடலாயினர்.

## உலக நாகரிக வளர்ச்சிக்கு இஸ்லாம் ஆற்றியுள்ள நற்பணிகள்

முஸ்லிம்கள் ரோமானியப் பேரரசைக் காட்டிலும் பரந்த பேரரசு ஒன்றைக் குறுகிய காலத்தில் நிறுவினர். அவர்கள் சிறந்ததொரு பண்பாட்டை உருவாக்கினர். அப்பண்பாடு பண்டைக்கால கிரேக்க, ரோமானிய, பாரசீக, இந்திய, அரேபிய பண்பாடுகளிலிருந்து தோன்றியதாகும்.

கலிப்பாக்கள், ஆட்சிமுறைகளை ஒழுங்குபடுத்தினர். வரி வசூல் முறைகளையும் சீர்படுத்தினர்.; ரோமானியர் அமைத்திருந்த சாலைகளைப் பழுதுபார்த்தனர் ; புதிய சாலைகள் பலவற்றை ஏற்படுத்தி அவற்றினால் முக்கிய நகரங்களை இணைத்தனர். அவர்கள் கால்வாய்கள் வெட்டி நீர்ப்பாசன வசதிகளைச் செய்தனர். சிறந்ததொரு அஞ்சல் முறையை முதன் முதலாக அமைத்த பெருமை முஸ்லிம்களையேச் சாரும். அவர்கள் சிறந்த வேலைப்பாடுகளுடைய அழகானக் கட்டடக்கலையை ஆதரித்து வளர்த்தனர் ; வளைவு, வில்மண்டபம், ஊசிக்கோபுரம் முதலிய கலை அம்சங்கள் பெற்ற

கட்டடங்களைக் கட்டினர். ஜெருசலம் நகரில் கட்டப்பட்ட **ஓமார், மசூதியும்,** டமாஸ்கஸ் நகரில் கட்டப்பட்ட **ஓமாயதி மசூதியும்,** கிரனடாவில் உள்ள **அல்ஹாம்பரா அரண்மனையும்,** பாக்தாத் நகரின் **பெரிய மசூதியும்,** டில்லியிலுள்ள **குதுப்மினாரும்** முஸ்லிம்களின் கட்டடங்களுள் முக்கியமானவையாகும்.

கல்வி வளர்ச்சிக்காக முஸ்லிம்கள் சிறந்த பல்கலைக்கழகங்களை பாக்தாத், கெய்ரோ, கார்டோவா ஆகிய நகரங்களில் நிறுவினர். எல்லா சமயத்தினரையும் பல்கலைக்கழகங்களில் சேர்த்துக் கொண்டனர். கார்டோவாப் பல்கலைக் கழகத்தில் கல்வி கற்ற மாணவர்கள் தாங்கள் கற்ற கல்வியை ஐரோப்பிய நாடுகளில் பரவச் செய்தனர். அப்பல்கலைக் கழகத்தின் சிறந்த மாணவர்களுள் ஒருவரான **ஜெர்பர்ட்** என்பவர் பிற்காலத்தில் இரண்டாம் சில்வெஸ்டர் என்ற பெயரில் போப்பாண்டவராக விளங்கினார்.

இந்தியாவில் முஸ்லிம்கள் ஆட்சியினால் பல புதிய மாற்றங்கள் ஏற்படலாயின. இஸ்லாம் சமயம் இந்து சமய சீர்திருத்தத்திற்கு வழி வகுத்தது. சாதிகளும், சடங்குகளும் கண்டிக்கப்பட்டன. **இராமானந்தர், கபீர்தாசர், குருநானக், சைதன்யர்** போன்றோர் பக்தி இயக்கத்தில் ஈடுபட்டனர் ; இந்து, முஸ்லிம் ஒற்றுமைக்குப் பாடுபட்டனர். இந்து-முஸ்லிம் கலாச்சாரங்கள் கலந்தன. இந்தி மொழி வளர்ச்சியடைந்தது. உருது மொழி தோன்றியது. கட்டடக்கலையில் மாறுதல்கள் ஏற்பட்டன. இலக்கியத் துறையில் பாரசீகக்கவி **அமீர் குஸ்ரு** பல இனிய கவிதைகள் புனைந்தார். முஸ்லிம்கள் இந்திய எண்களைக் கற்று அரேபிய எண்களாக உலகம் முழுவதும் பரப்பினர்.

விஞ்ஞானத்துறையிலும் முஸ்லிம்கள் அரும்பணியாற்றியுள்ளனர். வானவியலில் அவர்கள் சிறந்த முன்னேற்றம் அடைந்திருந்தனர். குறிக்கணக்கியல் (Algebra) என்பது அவர்களாலேயே கண்டு பிடிக்கப்பட்டதாகும். திரிகோணமிதி (Trigonometry)யிலும் அவர்கள் தேர்ச்சி அடைந்திருந்தனர். இரசாயனத்துறையிலும் அவர்கள் முன்னேற்றம் அடைந்திருந்தனர். மருத்துவத்துறையில் தேர்ச்சி பெற்றிருந்தனர். கி.பி. 980 முதல் 1,037 வரை வாழ்ந்த **அவிசென்னா** என்பவர் மிகச்சிறந்த மருத்துவர். அவர் பல மருத்துவ நூல்கள் எழுதியுள்ளார்.

இலக்கியத்துறையில் அரேபியர்களின் பணி குறிப்பிடத்தக்கது. கவிதைகள் இயற்றுவதில் அவர்கள் திறமை பெற்றிருந்தார்கள். அக்காலத்திய இலக்கியங்களுள் தலைசிறந்தது. **ஆயிரத்து ஓர் இரவுகள்** அல்லது **அரேபிய இரவுகள்** என்ற நூலாகும், அதில் **அலிபாபாவும் நாற்பது திருடர்களும், அலாவுதீனும் அற்புத விளக்கும், சிந்துபாத் மாலுமி** முதலிய சுவைமிக்க கதைகள் உள்ளன. கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் கார்டோவாவில் வாழ்ந்த **அவெரோஸ்** என்பார் கிரேக்கத் தத்துவஞானியாகிய அரிஸ்டாட்டிலின் கொள்கைகளைப் பற்றித் திறனாய்வு செய்து நூல்கள் எழுதியுள்ளார். சீனர்களிடமிருந்து காகிதம் செய்யும் முறையைக் கற்றுக்கொண்டு, முஸ்லிம்கள் அதனை ஐரோப்பியருக்கு அறிமுகப் படுத்தினர்.

கைத்தொழிலிலும், பொருள்களை உற்பத்தி செய்வதிலும் முஸ்லிம்கள் சிறந்த முறைகளைக் கையாண்டனர். தங்கம், வெள்ளி, செம்பு, வெண்கலம், இரும்பு, எஃகு ஆகிய உலோகங்களினால் அணிகலன்கள், கருவிகள், பாத்திரங்கள் முதலியவற்றை அழகாகச் செய்தனர். நேர்த்தியான ஆடைகள் உற்பத்தி செய்தனர். கண்ணாடிப் பொருள்கள், மட்பாண்டங்கள் செய்வதில் அவர்கள் தேர்ந்திருந்தனர். உலக நாடுகள் பலவற்றுடன், அவர்கள் வாணிகம் செய்தனர். பாக்தாத், பொக்காரா, சாமர்கந்த் ஆகிய இடங்களில் நடைபெற்ற பெரும் சந்தைகளுக்கு ஆசிய ஐரோப்பிய வணிகர் பலரும் சென்றனர்,

அலெக்சாண்டரது குறிக்கோளை நிறைவேற்றிய பெருமை முஸ்லிம்களைச் சாரும். அவர்களது ஆட்சிக்காலத்தில் கிழக்கு, மேற்கு நாடுகளின் நாகரிகங்கள் இணைக்கப்பட்டன. இது முஸ்லிம்களின் சிறந்த சாதனையாகும். இவ்வாறு முஸ்லிம்கள் உலக நாகரிகம் வளரப் பல துறைகளிலும் அரும்பணியாற்றினர்.

## கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களை நிரப்பவும்:**

1. முகம்மது நபி ———— என்ற ஊரில் பிறந்தார்.
2. இஸ்லாம் சமய புனித நூல் ———— ஆகும்.
3. அபாஸித் கலிபாக்களில் தலைசிறந்தவர் ———— ஆவார்.

4. குதுப்மினார் ———— என்பவரால் கட்டத் தொடங்கப் பெற்று ———— என்பவரால் கட்டி முடிக்கப்பட்டது.
5. இந்தியாவில் ———— போரின் விளைவாக மொகலாயர் ஆட்சி தொடங்கியது.
6. கிறிஸ்தவர்களுக்கும், முஸ்லிம்களுக்கு மிடையே ———— பற்றி ———— போர்கள் நடைபெற்றன.
7. முஸ்லிம்கள் சிறந்த பல்கலைக்கழகங்களை————, ————, ———— என்ற நகரங்களில் நிறுவினர்.

**II. பின்வரும் உட்பிரிவுகளுள் மிகவும் பொருத்தமான விடையைக் கொண்டு வாக்கியத்தைப் பூர்த்தி செய்க :**

சிலுவைப் போர்களில் கிறிஸ்தவர்கள் தோல்வியடைந்ததற்கு முக்கிய காரணம்.

(அ) கிறிஸ்தவவீரர்கள் சமய உணர்வுடன் போரிடவில்லை.

(ஆ) கிறிஸ்தவர்களிடையே ஒற்றுமை இல்லை.

(இ) கிறிஸ்தவர்கள் வெகுதொலைவிலிருந்து வந்து போரிட்டனர்.

(ஈ) கிறிஸ்தவர்களைவிட முஸ்லிம்கள் நல்ல போர் கருவிகளைப் பயன்படுத்தினர்.

**III. சுருக்கமான விடை தருக:**

1. கலிபாக்கள் என்பவர்கள் யாவர்? முக்கிய கலிபாக்களின் பெயர்களைக் குறிப்பிடுக.
2. சிலுவைப்போர்கள் என்பன யாவை?
3. சிலுவைப்போர்களின் முக்கிய விளைவுகள் எவை?

**IV. விரிவான விடைகள் அளிக்கவும்:**

1. முகம்மது நபியின் வாழ்க்கை வரலாற்றைக்கூறி அவரது போதனைகளையும் குறிப்பிடுக.
2. உலக நாகரிக வளர்ச்சிக்கு இஸ்லாம் ஆற்றிய நற்பணிகளைத் தொகுத்து எழுதுக.

## செய்முறைப் பயிற்சி

1. 'அரேபிய இரவுகள்' நூலில் உறாரூன் அல்ரஷித் பற்றிய கதைகளைப் படிக்கவும்.
2. முஸ்லிம் பேரரசையும் மெக்கா, மெதினா, பாக்தாத், கெய்ரோ, டமாஸ்கஸ் ஆகிய நகரங்களையும் குறிக்கும் படம் ஒன்றை வரைக.

# 12. கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் மத்திய ஆசியா

**முன்னுரை**

உலகிலுள்ள கண்டங்கள் அனைத்திலும் பல இன மக்கள் வாழ்ந்து வருகின்றனர். ஆனால் ஆசியாக் கண்டத்தில்தான் பல மக்கள், இனங்கள் முதன் முதலாகத் தோன்றின. முதன்முதலாக மக்கள் தோன்றிய பகுதி மத்திய ஆசியா எனக் கருதப்படுகின்றது. மத்திய ஆசியாவின் ஸ்டெப்பி புல்வெளி - பல இனத்தவர்களின் தாயகமாக விளங்கியது. அவர்கள் ஆரம்பத்தில் நாடோடிகளாக வாழ்ந்தனர். அம்மக்களில் மங்கோலியர், தார்த்தாரியர், ஹூணர்கள் ஆகியவர்கள் முக்கியமானவர்கள். அவர்களிடையே வீரம், மன உறுதி மிக்க தலைவர்கள் தோன்றி அவர்களை ஒருங்கிணைத்துப் பேரரசை உருவாக்கினர். மங்கோலியரையும், தார்த்தாரியர்களையும் ஒன்று சேர்த்துப் பேரரசை உருவாக்கியவர் **செங்கிஸ் கான்** என்ற தலைவராவார். ஹூணர்களின் தலைவராக **அட்டில்லா** என்பவர் விளங்கினார்.

## மங்கோலியப் பேரரசு

### I. மங்கோலியர்

மங்கோலியர், வரலாற்றில் 12-ஆம் நூற்றாண்டின் இறுதியில் இடம் பெறத் தொடங்கினர். அவர்கள் நாடோடிக் கூட்டத்தினர். ஆரம்பத்தில் அவர்கள் மத்திய ஆசியாவில் காணப்பட்டனர். மங்கோலியர்கள் மஞ்சள் இனத்தவர் என்றும் அழைக்கப்படுகின்றனர். அவர்கள் குதிரைகள், ஆடுகள், எருதுகள் மேய்ப்பதையும், வேட்டையாடுவதையும் முக்கியத் தொழிலாகக் கொண்டனர். அவர்கள் கூடாரங்களிலும், பாரவண்டி, குடிசைகளிலும் வாழ்ந்தனர். அவர்களுடைய சொத்துகள் கால்நடை மந்தைகளும், ஆடைகளும், ஆயுதங்களுமேயாகும். மிக எளிய வாழ்க்கை வாழ்ந்தனர். அவர்கள் குதிரைச்சவாரி செய்தும், உடற்பயிற்சி செய்தும் தங்களைச் சிரமமான வாழ்க்கைக்குப் பயிற்றுவித்து கொண்டனர். நாள்தோறும் அவர்கள் ஆயுதங்களைக் கையாண்டு வந்ததால் சிறந்த வீரர்களாகத் திகழ்ந்தனர். அவர்கள் எப்பொழுதும் தங்கள் கால்நடைகளுடன் மேய்ச்சல் நிலங்களை நாடிச் சென்றனர். கோடையில் பனி உருகியபின் மேய்ச்சல் தரைகளைத் தேடி வடபகுதிக்கும், குளிர்காலத்தில் தென்பகுதிக்கும் மாறி மாறிச்

சென்று வந்தனர். அவர்களது மக்கள் தொகை அதிகரித்தபொழுது அவர்களில் ஒரு பகுதியினர் சீனாவிலுள்ள செழிப்பான பள்ளத் தாக்குகளில் குடியேறினர். மற்றப் பகுதியினர் மேற்கு நோக்கிச் சென்று ஐரோப்பாவிலுள்ள காஸ்பியன் கடலுக்கும், யூரல் மலை களுக்குமிடையிலுள்ள பகுதியில் குடியேறினர்.

மங்கோலியர்களைப் போன்று வாழ்ந்த மற்றொரு நாடோடிக் கூட்டத்தினர் தார்த்தாரியர்கள் ஆவர். அவ்விரு நாடோடிக் கூட்டத் தவர்களும் ஒரே வகையான பழக்கவழக்கங்களைக் கொண்டிருந் தனர். மங்கோலியரையும் தார்த்தாரியரையும் ஒன்றுசேர்த்து ஒரு பேரரசை **செங்கிஸ்கான்** உருவாக்கினார்.

கி. பி. 13 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அரசியல் நிலை மங்கோலியர்களுக்குச் சாதகமாக இருந்தது. முஸ்லிம் பேரரசு பல சிறிய தனித்தனி இராச்சியங்களாகச் சிதறுண்டு போரிட்டுக் கொண்டிருந்தன. சீனப் பேரரசும் இரண்டாகப் பிளவுபட்டு வலிமை குன்றியிருந்தது.

## II. செங்கிஸ்கான் (கி.பி. 1154—1227)

செங்கிஸ்கானின் இயற்பெயர் டெமுஜின் (**Temujine**). 13ஆவது வயதில் அவரது தந்தை கொலை செய்யப்பட்டார். அதனால் தானே நாடோடிக் கூட்டத்தினரின் தலைவரானார். தார்த் தாரியரையும் மங்கோலியரையும் ஒன்றுசேர்த்து அவர்களுக்குப் போர்ப் பயிற்சி அளித்தார். அவர் காரகோரம் என்ற நகரைக் கைப்பற்றினார். கி. பி. 1203-ல் அவர் நாடோடி இனத்தவர்களின் மகாசபையைக் கூட்டினார். அந்த வருடத்திலிருந்து மங்கோலியப் பேரரசு தொடங்கியதாகக் கருதப்படுகின்றது.

செங்கிஸ்கான் கி. பி. 1214-ல் வட சீனாவில் ஆண்டுவந்த **சின்** வமிசத்து அரசரை வென்று, வடசீனாவைத் தம் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவந்தார். பின்னர்த் தென்மேற்கிலுள்ள முஸ்லிம் பேரரசுக்குத் தமது தூதுவர்களை அனுப்பினார். ஆனால் அவர்கள் அம்முஸ்லிம் அரசினால் கொல்லப்பட்டனர், அதனால் செங்கிஸ்கான் உள்ளம் கொதித்து கி.பி. 1,218-ல் குதிரைப் படையுடன் பாமீர் பீடபூமியைக் கடந்து முஸ்லிம் பேரரசின் எல்லைக்குள் நுழைந்தார். குறுகிய காலத்தில் அவர் காஷ்கர், பொகாரோ முதலிய பகுதிகளைக் கைப் பற்றினார். இறுதியில் முஸ்லிம் பேரரசின் தலைநகரான **சாமர்கந்த்**

வெல்லபபட்டது. டில்லியில் சுல்தான் அல்டாமிஷ் ஆட்சி செய்த போது செங்கிஸ்கான் படையெடுத்தார். ஆனால் தெய்வாதீனமாக அவருடைய கவனம் ஐரோப்பாவின் மீது ஈர்க்கப்பட்டதால், அவர் இந்தியாவைத் தாக்காமல் மேற்குமுகமாகத் திரும்பினார். பின்னர்



படம் 20. செங்கிஸ்கான்

காஸ்பியன் கடலின் வட பகுதிக்குச் சென்ற மங்கோலியப் படை ரஷ்யப் படைகளை வென்றது. செங்கிஸ்கான் 1227-ல் உயிர் துறந்தார். அவரது பேரரசு பசிபிக்கடல் பகுதியிலிருந்து ரஷ்யா விலுள்ள நீர்ப்பர் நதி வரை பரவியிருந்தது.

செங்கிஸ்கான் பேரரசு மிகப் பெரியதாக இருந்தது. பேரரசின் தலைநகரம் காரகோரம். அவர் சிறந்ததொரு இராணுவத்தை அமைத்திருந்தார். சீனர்களிடமிருந்து வெடிமருந்து செய்யவும், துப்பாக்கி செய்யவும் மங்கோலியர் கற்றிருந்தனர். வெடிமருந்தும்,

துப்பாக்கிகளும் போரில் பயன்படுத்தப்பட்டன. அவர் உள்நாட்டில் ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்டி கலைகளை வளர்க்கவும் பாடுபட்டார். அஞ்சல் முறையை ஏற்படுத்தினார். அவர் தமது குடிமக்களை எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தினார்; அறிஞர்களை மரியாதையுடன் நடத்தினார். சட்டங்களைத் தொகுத்




படம் 21. செங்கிஸ்கானின் பேரரசு

தார். சமயத்துறையில் சகிப்புத்தன்மை இருந்தது; மங்கோலியர் செங்கிஸ்கான் காலத்தில் 'ஷாமாயிசம்' (நீலவானத்தை வணங்குதல்) என்ற சமயத்தைப் பின்பற்றினர். அவருடைய காலத்திற்குப் பின்னர்தான் அவர்களுள் ஒரு பகுதியினர் இஸ்லாம் சமயத்தையும், மற்றொரு பகுதியினர் புத்த சமயத்தையும் பின்பற்றினர்.

## III. ஆக்டாய்கான் *(கி. பி. 1227—1242)*

*செங்கிஸ்கான் மறைவிற்குப் பின் மன்னராகத் தேர்ந்தெடுக்கப் பட்ட அவரது மகன் ஆக்டாய்கான் கி.பி. 1215-ல் ருஷ்யாவின்மீது படையெடுத்துச் சென்று அதனை அடிபணியச்செய்தார். கி. பி. 1242-ல் ஆக்டாய்கான் இறந்துவிடவே வாரிசுரிமைப் போட்டி ஏற்பட்டது. அதனால் ஐரோப்பியர்களுக்கு மங்கோலியப் படை யெடுப்புகளிலிருந்து விடுதலை கிடைத்தது.*

## IV. குப்ளாய்கான் *(கி.பி. 1259—1294)*

*செங்கிஸ்கானின் பேரரான குப்ளாய்கான் கி. பி. 1259-ல் பேரரசராக முடிசூட்டிக்கொண்டார். சீன அறிஞர் ஒருவரின் ஆலோசனைப்படி குப்ளாய்கான்* **யுவான்** *என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டு யுவான் வமிசத்தை நிறுவினார். அவர் மங்கோலியத் தலைவராகக் 'கான்' என்ற பட்டத்துடனும், சீனப்பேரரசராக 'யுவான்' என்ற பட்டத்துடனும் ஆட்சி புரிந்தார்; தலைநகரை காரகோரத்திலிருந்து பீகிங்கிற்கு மாற்றினார்.*

*குப்ளாய்கான் சீனா முழுவதையும் வென்றார். ஜப்பான்மீதும் இரண்டு முறை படையெடுத்துத் தோல்வியுற்றார். ஏனெனில், அவரிடம் சிறந்த கப்பற்படை இல்லை. அவர் தென்கிழக்கு ஆசியாவிலும் ஆதிக்கம் செலுத்தினார். குப்ளாய்கான் காலத்தில் இத்தாலியிலுள்ள வெனிஸ் நகரத்திலிருந்து* **மார்க்கோ போலோ** *என்ற பயணி சீனாவிற்கு வந்தார். கி.பி. 1294-ல் அவர் இறந்த பின் மங்கோலியப் பேரரசு வீழ்ச்சி அடைந்தது.*

## V. மார்க்கோ போலோ

*மார்க்கோ போலோ கி.பி. 1254-ல் வெனிஸ் நகரில்* **நிகோலோ போலோ** *என்ற வணிகரின் மகனாகப் பிறந்தார். அவர் இளைஞராக இருந்தபோது அவரும், அவரது தந்தை* **நிகோலோ போலோவும்,** **மாபியா போலோ** *என்பவரும் சீனாவிற்கு குப்ளாய்கான் ஆட்சிக் காலத்தில் சென்று வந்தனர். சீன மன்னர் குப்ளாய்கான் தம்மை வரவேற்றதாகவும், கிறிஸ்தவ சமயத்தைப் பரப்ப நூறு பாதிரியார் களை அழைத்து வருமாறு கூறியதாகவும், போப்பாண்டவருக்குக் கடிதம் ஒன்று தங்களிடம் கொடுத்ததாகவும் போலோக்கள் கூறினா அச்சமயம் போப்பாண்டவர் இறந்துவிட்டதால் புதிய போப் தேர்ந்*

தெடுக்கப்பட்டபின் அவரிடமிருந்து கடிதமும் பரிசுகளும் பெற்றுக் கொண்டு இரு பாதிரியார்களுடன் நிகோலோ போலோவும், மாபியா போலோவும், மார்க்கோ போலோவும் சீனாவிற்கு பயணம் மேற் கொண்டனர். நடுவில் பாதிரியார்கள் இத்தாலிக்குத் திரும்பிவிட்டனர். போலோக்கள் மட்டும் கோபி பாலைவனத்தைக் கடந்து சீனா சென்றனர்.

போலோக்கள், போப்பாண்டவரின் கடிதத்தையும் பரிசுகளையும் குப்ளாய்கானிடம் அளித்தபோது அவர் பெருமகிழ்ச்சி அடைந்தார். மார்க்கோ போலோ தமது திறமையால் குப்ளாய்கானின் நண்பரானார். மார்க்கோ போலோ ஒரு மாநில ஆளுநராக நியமிக்கப்பட்டார். அவர் மேற்குச் சீன மாநிலங்களுக்குச் தூதராகச் சென்றார். அங்கிருந்து தெற்காசிய நாடுகளுக்கும் சென்றார். அப்போது சுமத்திரா, இலங்கை, இந்தியாவின் தென்கிழக்குக் கடற்கரை ஆகிய பகுதி களுக்கும் சென்று அவற்றைப்பற்றிய குறிப்புகளைத் தயாரித்தார். பாண்டி நாட்டில் குலசேகர பாண்டியன் அரசு புரிந்தபோது மார்க்கோ போலோ அந்நாட்டுக்கு வந்து, அதைப் பற்றிய சில குறிப்புகளைத் தயாரித்தார். பாண்டிய நாட்டின் வாணிகத்தைப் புகழ்ந்து எழுதியுள்ளார். போலோக்கள் ஏறத்தாழ 17 ஆண்டுகள் சீனாவில் தங்கியிருந்தபின் தாய்நாட்டுக்குக் கடல்வழியாக 1295-ல் திரும்பினர்.

**மார்க்கோபோலோவின் பிரயாணங்கள்** என்ற நூல் அவர் கூறி எழுதப்பட்டது. அதில் அவர் கீழை நாடுகளின் செல்வ வளம், மக்களின் வாழ்க்கை, பழக்கவழக்கங்கள் ஆகியவை பற்றி விரிவாகக் குறிப்பிட்டுள்ளார். அந்நூல் ஐரோப்பியரைக் கீழை நாடுகளுக்குப் புதிய கடல் வழி காணத் தூண்டியது. குப்ளாய்கானின் ஆட்சியைப்பற்றி நன்கு அறிந்துகொள்ள அவரது பயணக் குறிப்புகள் பயன்படுகின்றன.

## ஜப்பானில் சீன நாகரிகத்தின் செல்வாக்கு

பண்டைக்காலத்தில் ஜப்பானில், ஆசியாவிலிருந்து வந்த பல இனத்தைச் சார்ந்த நாடோடிக் கூட்டத்தினர் வாழ்ந்து வந்தனர். அவர்களின் வழி வந்தவர்களே தற்கால ஜப்பானியர்களாவர். அந் நாட்டில் நாகரிகம் பரவக் காரணமாக இருந்தவர்கள் சீனர்களே ஆவர். கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு முதல் சீனருக்கும் ஜப்பானியருக்கும்

தொடர்பிருந்தது. கொரியா வழியாக ஜப்பானியர் சீனப் பகுதிகளுக்கு வந்து கல்வியறிவு பெற்றனர். ஜப்பானியர் தாம் சீனரிடமிருந்து கற்றவற்றை அவ்வாறே எடுத்துக்கொள்ளவில்லை. அவற்றில் பல சீர்திருத்தங்களைச் செய்து மேலும் முன்னேற்றத்தைக் கண்டனர்.

சீனர்களின் சமயக் கொள்கைகளையும் தத்துவத்தையும் ஜப்பானியர் பின்பற்றினர். ஜப்பானில் புத்தசமயமும், கன்பூஷியஸ் சமயமும் செல்வாக்குப் பெற்றன. சீன எழுத்து முறையை அடிப் படையாகக் கொண்டு ஜப்பானிய எழுத்து முறை உருவாக்கப்பட்டது. ஜப்பானியக் கல்வியில் சீனத் தத்துவ இலக்கியங்கள் முக்கிய இடத்தைப் பெற்றன. சீனர்களின் கருத்துகளும் எண்ணங்களுமே ஜப்பானியர்களுக்குப் போதுமானவையாய் இருந்தன. ஜப்பானிய சிற்பக்கலையும் ஓவியக்கலையும் சீனக்கலைகளைப் பின்பற்றி உருவாக்கப்பட்டன. சீனர்களிமிடருந்து ஜப்பானியர் நெசவுத் தொழிலையும், காகிதம் செய்தலையும், மரச்சாமான்கள் செய்தலை யும், அச்சுக்கலையையும் கற்றனர். சீன நகரங்களைப் போன்றே ஜப்பானிய நகரங்களும் கட்டப்பட்டன. இவ்வாறு ஜப்பானின் பல துறைகளிலும் சீனாவின் செல்வாக்கு ஏற்பட்டது.

## ஷின்டோ சமயம் (Shintoism)

ஜப்பானியர்களின் பழங்காலச் சமயம் ஷின்டோ சமயம் என்பதாகும். 'ஷின்டோ' என்பது சீனச் சொல் ஆகும். 'ஷின்டோ' என்றால் 'கடவுளரின் வழி' என்று பொருள். ஷின்டோ சமயம், ஒரு தத்துவமோ நன்னெறிக் கோட்பாடோ அல்ல. அது ஒருவகை தனிநபர் பற்றிய சமயம். அது அரசரையும் மக்களையும் இராஜ விசுவாசத்தால் இணைக்கும் சமயமாகும்.

ஷின்டோ சமயத்தில் ஜப்பானிய மன்னர் கடவுளின் மரபினராகக் கருதப்பட்டு மக்கள் அவருக்குக் கீழ்ப்பணிந்து நடக்கவேண்டும் என வலியுறுத்தப்பட்டது. முன்னோர்களுக்கும் பெற்றோர்களுக்கும் மரியாதை அளித்தல், குழந்தைகளிடம் அன்பு செலுத்துதல், குடும்பத்திடமும் அரசாங்கத்திடமும் நன்றியுடையவர்களாக யிருத்தல் முதலியவற்றை ஷின்டோ சமயம் வற்புறுத்துகிறது. ஷின்டோ சமயம் ஜப்பான் அரசரின் ஆதரவு பெற்ற சமயமாகும்.

### கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களை நிரப்புக :**

1. செங்கிஸ்கானின் இயற்பெயர் ———— ஆகும்.
2. செங்கிஸ்கான் பேரரசின் தலைநகரமாக ———— விளங்கியது.
3. மார்கோபோலோ சீனாவிற்கு ———— அரசராக இருந்த பொழுது சென்றார்.
4. ஜப்பானியர்களின் பண்டைக் கால சமயம் ———— ஆகும்.

**II. குறுகிய விடைகள் தருக :**

1. மங்கோலியர்களின் தொழில்கள் யாவை ?
2. செங்கிஸ்கானின் வெற்றிகள் யாவை ?
3. ஷின்டோ சமயத்தைப் பற்றி விளக்குக.

**III. விரிவான விடையளிக்கவும் :**

1. மார்க்கோ போலோவின் வாழ்க்கை வரலாற்றை விவரிக்கவும்.
2. ஜப்பானிய நாகரிக வளர்ச்சிக்குச் சீனா எவ்வாறு உதவியது ?

### பயிற்சி

மார்க்கோ போலோவின் பயணக் கட்டுரைகளைப் படிக்கவும்.

# 13. பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் ஆசியா

**முன்னுரை**

பதினாறாம் நூற்றாண்டில் **ஐரோப்பாவில் நவீன காலம் (Modern Age)** தொடங்கியது எனலாம். இதன் விளைவாக ஐரோப்பாவில் மறுமலர்ச்சியும், புதிய நிலவியல் கண்டுபிடிப்புகளும், மதச் சீர்திருத்த இயக்கமும் ஏற்பட்டன. பல்வேறு தேசிய அரசுகளும் தோன்றலாயின. ஆனால் பதினெட்டு, பத்தொன்பது நூற்றாண்டுகளில்தான் ஆசியாவில் நவீன காலம் தொடங்கியது. இந்தியாவில் 16ஆவது நூற்றாண்டில் **மொகலாயர்களும்,** சீனாவில் **மிங், மஞ்சு**

பேரரசர்களும், ஜப்பானில் **ஷோகன்** தலைவர்களும் சிறப்புடன் விளங்கினர். இக்காலம் ஆசியாவின் **இடைப்பட்ட காலம் (Middle Age)** எனக் கருதப்படுகிறது. இக்காலத்தில் தோன்றிய பேரரசுகளைப் பற்றிச் சற்று விரிவாகப் படிப்போம்.

## மொகலாயப் பேரரசு *(கி.பி. 1526—1707)*

அரேபியர்கள் **முகம்மது-பின்-காசிமின்** தலைமையில் இந்தியாவில் சிந்து மாநிலத்தைக் கைப்பற்றினர். 11, 12 ஆம் நூற்றாண்டுகளில் துருக்கிய ஆப்கானியர், **முகம்மது கஜினி, முகம்மது கோரி** ஆகியோரின் தலைமையில் இந்தியாவின்மீது படையெடுத்தனர். அவற்றின் விளைவாக டில்லியில் சுல்தான்கள் ஆட்சி தொடங்கியது. இவர்களைத் தொடர்ந்து மொகலாயர்கள் இந்தியாவைக் கைப்பற்றித் தங்களது ஆட்சியை ஏற்படுத்தினர். மொகலாய அரசை இந்தியாவில் நிறுவியவர் **பாபர்** ஆவார்.

### I. **பாபர்** (கி.பி. 1526—1530)

பாபர் ஆப்கானிஸ்தானத்திலுள்ள காபூலில் ஆட்சி செய்து கொண்டிருந்தபோது, டில்லியில் **இப்ராகிம் லோடியின்** கொடுங்கோலாட்சியை எதிர்த்த சில பிரபுக்கள் பாபரை இந்தியாவின்மீது படையெடுக்குமாறு வேண்டினர். தக்க சமயத்தை எதிர்பார்த்திருந்த பாபர், இப்ராகிம்லோடியை கி.பி.1526-ல் **முதல் பானிப்பட்** போரில் தோற்கடித்தார். இதன் விளைவாகத்தான் இந்தியாவில் மொகலாயர்களின் ஆட்சி ஏற்பட்டது. பாபர் மேலும் நான்கு ஆண்டுகள் போர் செய்து, மேவார், மாளவம், பீகார், வங்காளம் ஆகிய பகுதிகளைக் கைப்பற்றினார். வட இந்தியாவின் பெரும் பகுதியைத் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்த இவர் தமது அரசை உறுதியாக நிலை நாட்டு முன் கி. பி. 1530 -ல் இறந்தார்.

பாபருக்குப் பின் அவரது மைந்தர் **ஹுமாயூன்** அரசரானார். இவர் பாபரைப் போலவே திறமை வாய்ந்தவரல்லர். தமது திறமையின்மை காரணமாகப் பாபரால் ஏற்படுத்தப்பட்ட இராச்சியங்களை **ஷேர்கான்** என்ற ஆப்கானியரிடம் இழந்து நாடோடியாக நேரிட்டது. தாம் இழந்த இராச்சியங்களை 15 ஆண்டுகளுக்குப் பிறகு ஹுமாயூன் மீண்டும் கைப்பற்றினார். இருப்பினும் ஆறு மாதங்களே ஆட்சி புரிந்து இறந்தார்.

ஷேர்கான், **ஷெர்ஷா** என்ற பெயருடன் ஹுமாயூனிடம் இருந்து கைப்பற்றிய நாட்டை ஐந்து ஆண்டுகள் ஆட்சி செய்தார். இவர் **சூர்** வமிசத்தைச் சேர்ந்தவர். இவரது ஆட்சிமுறை மிகவும் போற்றத் தக்கது. இவர் செய்த நிலவரிச் சீர்திருத்தங்கள் இவருக்குப்பின் ஆட்சி புரிந்த அக்பரால் பின்பற்றப்பட்டதால் இவர் அக்பரின் முன்னோடி ஆவார்.

## II. **அக்பர்** (கி. பி. 1556—1605)

அக்பர் தமது பதின்மூன்றாவது வயதில் அரியணை ஏறினார். அவரது மாமன் **பைராம்கான்** உறுதுணையாக இருந்தார். கி. பி. 1556-ல் **இரண்டாம் பானிப்பட்** போரில் ஹேமு என்பவரை பைராம் கான் தோற்கடித்தார். இதன் விளைவாக மொகலாயரின் ஆட்சி மீண்டும் இந்தியாவில் ஏற்பட்டது. அரியணையேறி நான்கு ஆண்டு களுக்குப் பின் அக்பர் தாமே அரசாட்சியை மேற்கொண்டார். பல ஆண்டுகள் போர் புரிந்து மொகலாயப் பேரரசை வட இந்தியா விலும் காபூல் காந்தகாரிலும் பரவச் செய்தார். அவருடைய பேரரசு 15 சுபாக்களாகப் பிரிக்கப்பட்டது.

இந்தியாவில் இந்துக்களின் ஆதரவைப் பெற்றால்தான் மொகலாயப் பேரரசை நிலைநிறுத்த முடியும் என்பதை உணர்ந்த அக்பர் அதற்கேற்ப தேசிய அரசராக விளங்கினார். இதன்காரண மாக இந்துக்களின் ஆதரவைப் பெற ஜசியா வரி, யாத்திரை வரி ஆகியவைகளை நீக்கினார். இந்துக்களுக்கு அரசாங்கத்தில் உயர்ந்த பதவிகளை அளித்தார். இராசபுத்திரப் பெண்மணிகளை மொகலாய இளவரசர்களுக்குத் திருமணம் செய்வித்தார்.

இவர் சமரச மனப்பான்மையை அடிப்படையாகக்கொண்டு **தீன் இலாகி** என்னும் தெய்வ சமயத்தைத் தோற்றுவித்தார். தீன் இலாகி எல்லா சமயங்களின் முக்கிய கருத்துகளைக் கொண்ட தாகும். இவருக்குப் பின் இச் சமயமும் அழியலாயிற்று.

அக்பர் சிறந்த நிர்வாகத்தை மேற்கொண்டார். இவருக்கு உறு துணையாக இருந்தவர் **இராஜா தோடர்மால்** என்பவர். இவர் அரசின் நிதிமந்திரியாக இருந்தார். ஷெர்ஷாவின் நிலச்சீர்திருத்த முறைகளைப் பின்பற்றி மக்களுக்கு நன்மை செய்தார். அக்பருடைய புகழ் வாய்ந்த நிலவரித் திட்டம் இன்றைய இரயத்வாரி முறையை ஒத்துள்ளது.

கலைகளின் வளர்ச்சிக்குப் பெரிதும ஆதரவு காட்டினார். டெல்லியில் **ஹுமாயூனுக்குக் கல்லறையும்,** ஆக்ராவிற்கு அருகே **பதேபூர் சிக்ரி** என்னும் நகரத்தையும் கட்டினார். ஓவியக்கலை, இசைக்கலை இவர் காலத்தில் சிறந்தோங்கின. **மியான் தான்சென்** என்ற சிறந்த பாடகர் இவரால் ஆதரிக்கப்பட்டார். **அபுல் பாசல், அபுல் பெய்சி** என்ற சகோதரர்கள் அக்பரது அவையில் இருந்தவர்களுள் முக்கியமானவர்கள். அபல் பாசல் என்பவர் **அயினி அக்பரி, அக்பர் நாமா** என்ற நூல்களை எழுதியுள்ளார். அபுல் பெய்சி சிறந்த பாரசீகக் கவிஞராவர். இவர் காலத்தில் **துளசிதாஸர்** இந்தியில் இராமாயணத்தை எழுதியுள்ளார்.

## III. ஜஹாங்கீர் (கி.பி. 1805—1827)

அக்பருக்குப் பின் அவரது மைந்தர் ஜஹாங்கீர் மன்னரானார். தம் மனைவி **நூர்ஜஹானிடம்** ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தார். இவருடைய ஆட்சியின்போது **வில்லியம் ஹாக்கின்ஸ், சர் தாமஸ் ரோ** என்ற ஆங்கிலேயர்கள் இந்தியாவிற்கு வந்தார்கள். மன்னரிடமிருந்து அனுமதி பெற்று இந்தியாவில் வாணிகம் செய்யலாயினர். இதன் விளைவாகத்தான் ஆங்கிலேயரின் செல்வாக்கு இந்தியாவில் ஏற்பட்டு முடிவில் அவர்களது ஆட்சியே நம் நாட்டில் நிலைத்தது. ஜஹாங்கீர் ஆட்சிக்குப் பின் **ஷாஜஹான்** பட்டத்திற்கு வந்தார்.

## IV. ஷாஜஹான் (கி. பி. 1628—1858)

ஷாஜஹான் ஆட்சி **மொகலாயர்களின் பொற்காலம்** எனப் பாராட்டப்படுகிறது. இவர் ஒரு கட்டடப் பிரியர். உலகப் புகழ் பெற்ற **தாஜ்மஹால்** இவரால் கட்டப்பட்டதாகும். முழுவதும் சலவைக் கற்களால் கட்டப்பட்டது. தமது மனைவி **மும்தாஜின்** நினைவாக ஆக்ராவில் உள்ள யமுனை நதிக்கரையில் கட்டினார். டில்லியிலுள்ள **செங்கோட்டையும், ஜும்மா மசூதியும்** இவரால் கட்டப்பட்டவையே. நவரத்தினங்கள் பதிக்கப்பட்டுள்ள மதிப்பிட முடியாத சிறந்த கலைப் பொக்கிஷமான மயிலாசனம் இவரால் செய்யப்பட்டதாகும். இவருக்குப் பின் இவரது மூன்றாவது மகன் **ஔரங்கசீப்** தமது மற்ற சகோதரர்களைக் கொன்றும், தந்தை ஷாஜகானைச் சிறையிலடைத்தும் பட்டத்திற்கு வந்தார்.

**V. ஔரங்கசீப்** *(கி. பி. 1658—1707)*

இவர் இஸ்லாம் சமயத்தில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர். அக்பரைப்போல இந்துக்களை அன்புடன் நடத்தவில்லை. முற்றிலும நேர்மாறான வழியில் அரசு புரிந்தார். அக்பரால் நீக்கப்பட்ட ஜிஸியா வரியை இந்துக்களின்மீது விதித்தார். அரசாங்கத்தில் இந்துக் களுக்கு உயர் பதவிகள் அளிப்பதைத் தடை செய்தார். அதனால் இந்துக்கள் இவருக்குப் பகைவர்களாக மாறினார்கள். சீக்கியர்களின் ஒன்பதாம் குருவான **தேஜ் பகதூரை** ஔரங்கசீப் சிரச்சேதம் செய்தார். அதனால் சீக்கியர்களும் விரோதிகளாக மாறினர். அப்போது தக்காணத்தை ஆண்டு வந்த ஷியா வகுப்பைச் சேர்ந்தவர்களின் **பீஜப்பூர், கோல்கொண்டா** இராச்சியங்களை வென்று தம் பேரரசுடன் இணைத்துக்கொண்டார். மராட்டியர்களின் தலை வரான **சிவாஜியை** அடக்க முயன்றார். ஆனால், தோல்வி யடைந்தார். இதனால் மராட்டியர்களும் ஔரங்கசீபின் விரோதி களாயினர். இதன் காரணமாக ஔரங்கசீபுக்குப் பின் மொகலாயப் பேரரசு வீழ்ச்சி யடைந்தது.

**VI. மொகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்கான காரணங்கள்**

1. ஔரங்கசீபுக்குப் பின் வந்த அரசர்கள் திறமையற்றவர்கள். 2. ஔரங்கசீபின் குறுகிய மனப்பான்மையும் சமயவெறியும் காரணங்களாக அமைந்தன. 3. ஔரங்கசீப் தக்காணத்தில் மராட் டியர்களை அடக்க முயன்றதும், பீஜப்பூர், கோல்கொண்டா இராச் சியங்களை இணைத்ததும் பெரிய தவறாகும். 4. பேரரசர்களின் புதல்வர்களிடையே உண்டான வாரிசுரிமைப் போர்கள் இராச்சி யத்தைச் சீரழித்தன. 5. பிரபுக்களின் ஆடம்பர வாழ்வும் அவர் களிடையே ஏற்பட்ட பூசல்களும் மற்றொரு காரணமாகும். 6. **நாதிர்ஷா, அகமத்ஷா அப்தாலி** ஆகியோரின் படையெடுப்புகள் பேரரசின் வீழ்ச்சியைத் துரிதப்படுத்தின. 7.மொகலாய மன்னர்கள் கடலாதிக்கத்தில் கவனம் செலுத்தாததும், ஐரோப்பியர்களின் இந்திய வருகையும் பிற காரணங்களாகும்.

## சீனாவில் மிங், மஞ்சு வமிசத்தினரின் ஆட்சி

**I. மிங் வமிசம்** *(கி. பி. 1368—1644)*

குப்ளாய்கானுக்குப் பிறகு அவரது மங்கோலிய வமிசம் **சூ-யுவான்-சங்** (Chu-Yuan-Chang) என்பவரால் அழிக்கப்பட்டது.

இவர் கி. பி. 1368 -ல் சீனாவின் அரசரானார். இவரால் நிறுவப்பட்ட **மிங் வமிசம்** கி. பி. 1644 வரை ஆட்சி புரிந்தது. இவர் தம்மை **ஹூங்-வு** (Hung -wu) என்று அழைத்துக் கொண்டார். இவர் ஒரு தொழிலாளியின் மகன் ஆவார். கல்வியறிவு இல்லாதவரானாலும் வாழ்க்கையில் மிகுந்த அனுபவம் பெற்றவராவார்.



**படம் 22. ஹூங் - வு அல்லது சூ - யுவான் - சங்**

ஹூங் -வு பட்டத்திற்கு வந்ததும் சீனாவின் தலைநகரை வடக்கே இருந்த பீகிங்கிலிருந்து, சீனாவின் மையத்திலுள்ள நான் கிங்கிற்கு மாற்றினார். நாட்டின் அமைதியை நிலைநாட்டும் பொருட்டு அதிகாரங்கள் அனைத்தையும் மேற்கொண்டார். நன்கு ஆட்சி புரிந்தார். இவருக்குப் பின் இவரது மகன் **யுங்-லோ** (yung - lo) ஆட்சிப் பொறுப்பேற்றார். இவர் மீண்டும் தலைநகரை பீகிங்கிற்கு மாற்றினார். மிங் வமிச அரசர்களுள் இவர் சிறந்தவராவார்.

மிங் வமிசத்தினரின் ஆட்சி சீன வரலாற்றில் மிகவும் சிறப்பு வாய்ந்தது. நாட்டில் அமைதி நிலவியது. அன்னாம், கொரியா,

கம்போடியா, ஜாவா, சுமத்ரா ஆகிய நாடுகளில் மிங் வமிசத்தினரின் ஆதிக்கம் ஏற்பட்டது. அண்டைநாடுகளுடன் நட்புநிலை ஏற்பட்டது. சிறந்த கப்பற்படை ஒன்று இந்தியப் பெருங்கடலைக் கடந்து பாரசீக வளைகுடாவரை வந்து திரும்பியது.

மக்களிடமிருந்து வரிகள் குறைவாகவே வசூலிக்கப்பட்டன. நாடு முழுவதும் சாலைகள் போடப்பட்டன. கால்வாய்கள் சீராக்கப் பட்டன. நல்ல விளைச்சல் காலங்களில் தானியங்கள் பாதுகாக்கப் பட்டு வறட்சிக் காலங்களில் பயன்படுத்தப்பட்டன. பெரிய கட்டடங்கள் கட்டப்பட்டன. அழகிய வேலைப்பாடுகளுடன்கூடிய கலைத் திறன் உடைய பீங்கான் பொருள்கள் செய்யப்பட்டன.

இவ்வமிசத்தினரின் ஆட்சியில் போர்ச்சுக்கீசியர் சீனாவிற்கு வந்தனர். மிங் வமிசத்தினருடன் நட்புடன் இருந்தனர். போர்த்துக் கீசியர்கள் தவறாக நடந்துகொண்டமையால் சீனாவிலிருந்து விரட்டப் பட்டனர். தவறுதலுக்கு மனம் வருந்தியமையால் மீண்டும் சீனாவுடன் நட்புக் கொண்டனர். கான்டன் நகரில் தங்குவதற்கு அனுமதியும் பெற்றனர். 17ஆம் நூற்றாண்டின் மத்தியில் மிங் வமிசம் முடிவுற்றது.

### II. மஞ்சு வமிசம் *(கி.பி. 1644 – 1912)*

கி. பி. 1644-ல் சீனாவில் மிங் வமிசம் நீக்கப்பட்டு மஞ்சு வமிசம் ஆட்சிக்கு வந்தது. மஞ்சுக்கள் சீனாவின் வட பகுதியான **மஞ்சூரி யாவில்** வசித்து வந்தனர். அவர்கள் டார்டர் இனத்தைச் சேர்ந்தவர் களாவர். சிறந்த போர் வீரர்கள். மிங் வமிசத்து மன்னர்கள் மஞ்சுக் களை சீனாவின் வடபகுதி காப்பாளர்களாக நியமித்து இருந்தனர். மிங் வமிசத்துக் கடைசி மன்னர்களின் திறமையின்மையைப் பயன் படுத்தி மஞ்சு படைத் தலைவர்கள் மிங் மன்னரை நீக்கி, பீகிங்கைக் கைப்பற்றி மஞ்சு வமிசத்தைச் சீனாவில் நிறுவினர். அவர்கள் சீனா விற்கு அந்நியர்களாக இருந்தபோதிலும் சீனமக்களின் நலனை மனத் திற்கொண்டு ஆட்சி செய்தனர். சீன மக்களின் பழக்கவழக்கங்களைக் கடைப்பிடிக்கலாயினர். வரிப்பளுவைக் குறைத்து மக்களின் ஆதரவைப் பெற்றனர். திறமையற்ற அதிகாரிகளைப் பதவிகளில் இருந்து நீக்கினர். சீனர்களை அரசுப் பணிகளில் நியமித்தனர். மூன்று நூற்றாண்டுக்காலம் சீனாவைத் திறமையுடன் ஆட்சி செய்தனர்.

மஞ்சு அரசர்களுள் சிறப்பு வாய்ந்தவர்கள் **காங்-ஹி-ஸி** (Kang-Hi-Si), **யங்-செங்** (Yung-Chung), **சியென்-லங்** (Chien-lung) ஆவர். **காங்-ஹி-ஸி** தம் ஆட்சிக்காலத்தில் நிலவரியைக் குறைத்தார்;




**படம் 23. மஞ்சுப் பேரரசு**

பாசன வசதிகளை ஏற்படுத்தித் தந்து விவசாயம் பெருக உதவினார்; மக்கள் கல்வி கற்க ஆவன செய்தார். இலக்கியத்தையும் அறிவியலையும் ஆதரித்தார். சீனாவின் தலைநகரான பீகிங்கில்

பெரியதோர் அரண்மனையைக் கட்டினார். இவர் கிறிஸ்துவப் பாதிரிமார்களை வரவேற்றார்.

இவருக்குப் பின் வந்த யங்-செங் அண்டை நாட்டாருடன் நட்பு நிலையைக் கொள்ளவில்லை. சீன மக்களின் நலத்தையே கருதினார். காங்-ஹி-ஸியால் வரவேற்கப்பட்ட கிறிஸ்தவப் பாதிரிமார்களை வெளியேற்றினார். மேனாட்டுக் கல்விமுறைகளை வெறுத்தார். இலக்கியம், அறிவியல் கலைகளில் ஆர்வம் கொள்ளவில்லை.

யங்-செங்கிற்குப் பின் சியென் -லங் சீனாவை ஆட்சி புரிந்தார். இவர் வியட்நாம், பர்மா, திபெத் ஆகிய பகுதிகளில் தம் அரசைப் பரப்பினார். இவரது ஆட்சிக்காலத்தில் மங்கோலியாவிலும், சீனத் துருக்கிஸ்தானிலும் ஏற்பட்ட கலகங்கள் ஒடுக்கப்பட்டன. நாட்டில் கலைகளும் கல்வியும் வளர்ச்சியுற்றன. நன்கு வளம் பெருகியதால் சில வரிகள் முழுவதும் நீக்கப்பட்டன. மக்களுக்குப் பல நன்மைகள் ஏற்பட்டன. இவருக்குப் பின் சீனாவில் மஞ்சு வமிசம் சீர் குலையலாயிற்று.

## ஜப்பான் ஒற்றுமையடைதல்

ஜப்பானியர்கள் சீன மக்களின் நூல்களைக் கற்றுச் சீன நாகரிகத்தை ஏற்றுக்கொண்டனர். சீனப் பண்பாட்டை அப்படியே ஏற்காமல் அதில் சில முன்னேற்றங்களைப் புகுத்தியதுடன் தங்கள் பண்பாட்டையும் நாகரிகத்தையும் வளரத்தனர். ஜப்பானியரின் சமயமான ஷின்டோ சமயத்தைப்பற்றி முன் பாடத்தில் படித்தோம்.

ஜப்பானியப் பேரரசர் **மிகாடோ** எனப்பட்டார். அவர் சூரிய வமிசத்தில் தோன்றியவர் எனக் கருதப்பட்டார். மிகாடோ பெயரளவில் மன்னராகக் கருதப்பட்டாரே தவிர பிரபுக்களில் வலிமை வாய்ந்தவர்களின் ஆதிக்கம் ஓங்கியது. இவர்கள் பெரிய பிரபுக்கள் அல்லது **டாமியோ (Damio)** என அழைக்கப்பட்டனர். பெரிய பிரபுக்களில் ஒருவர் கி.பி. 1192-ல் அதிகாரத்தைக் கைப்பற்றினார். அவர் **ஷோகன்** அல்லது **படைத்தலைவர்** எனப்பட்டார். ஷோகன் பரம்பரையினர் நாட்டை ஆண்டு வந்தனர். இவர்களது ஆட்சி இந்தியாவில் மராட்டியர்களின் ஆட்சியில் பீஷ்வாக்கள் ஆட்சி செய்ததை ஒத்திருந்ததெனலாம்.

கி. பி. 1344 முதல் 1573 வரை **அஷிகாகா ஷோகன்கள்** (Ash Kaga shoguns) ஆட்சி புரிந்தனர். **அஷிகாகா டாகா உஜி** (Ash Kaga Taka uji) என்ற ஷோகன் தன் சொற்படி கேட்க மறுத்த மிகா டோவை நீக்கி வேறொருவரை மிகாடோவாக நியமித்தார். இதனால் தென் பகுதியை உண்மையான மிகாடோவும், வடபகுதியை போலி யான அரசரும் ஆட்சி செய்யலாயினர். அதனால் நாடு பிளவு படலாயிற்று. பிளவுபட்டிருந்த நாட்டினை 16 ஆம் நூற்றாண்டின் இறுதியில் **நோபுனாகா** (Nobunaga) என்ற தலைசிறந்த ஷோகன் ஒன்றுபடுத்தினார். மத்திய அரசாங்கத்தை வலிமைப்படுத்தி நாட்டில் அமைதியை நிலவும்படி செய்தார். கி.பி.1569-ல் **புனித பிரான்சிஸ் சேவியர்** (St. Francis Xavier) என்பார், இவர் காலத்தில் ஜப்பா னிற்கு வருகை தந்தார். அவர் ஜப்பானில் கிறிஸ்தவ சமயத்தைப் பரப்ப அனுமதிக்கப்பட்டார். ஜப்பானியர்கள் சிலர் கிறிஸ்தவர்களாக மாறினர். பதினாறாம் நூற்றாண்டு இறுதி வரை ஜப்பானில் தேசிய ஒற்றுமை வளர வேண்டிய செயல்கள் மேற்கொள்ளப்பட்டன. இவருக்குப் பின் வந்த **ஹிடியோஷி** (Hidioshi) கொரியாவின் மீது படையெடுத்து அதைக் கைப்பற்றினார். ஹிடியோஷிக்குப் பின் ஆட்சிப் பொறுப்பேற்ற **டோகுகாவா** (Tokugava) என்ற ஷோகன் தலையிடாக் கொள்கையைப் பின்பற்றினார். மேற்கு நாடுகளுடன் தொடர்பு கொள்ள விரும்பவில்லை. உள் நாட்டில் பிரபுக்களின் வலிமையை ஒடுக்கினார். திறமை மிக்க ஆட்சியை நாட்டில் ஏற்படுத் தினார். ஷோகன்களின் ஆட்சி கி.பி.1867 வரை ஜப்பானில் இருந்து வந்தது.

## கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களை நிரப்புக :**

1. அபுல் பாசல் ————, ———— என்ற நூல்களை எழுதியுள்ளார்.
2. ஜஹாங்கீர் காலத்தில் விஜயம் செய்த ஆங்கிலேயர்கள் ————, ————.
3. ஜப்பானியப் பேரரசர் ———— என அழைக்கப் பட்டார்.
4. புனித பிரான்சிஸ் சேவியர் ———— என்பவர் காலத்தில் ஜப்பானுக்கு வருகை தந்தார்.

**II. குறுகிய விடையளிக்கவும் :**

1. முதல் பானிப்பட் போரின் முக்கியத்துவத்தை எழுதுக.
2. ஷாஜஹான் கட்டிய கட்டடங்களுள் நான்கினை எழுதுக.
3. தாஜ்மஹாலைப்பற்றிக் குறிப்பெழுதுக.
4. மிங் வம்சத்தை ஏற்படுத்தியவர் யார் ?
5. மஞ்சு வம்சத்திய மன்னர்களுள் சிறந்த மூவரைக் குறிப்பிடுக.
6. ஜப்பானில் ஷோகன்களின் ஆட்சியைப்பற்றிக் குறிப்பு எழுதுக.

**III. விரிவான விடையளிககவும் :**

1. அக்பரது ஆட்சியின் சிறப்பியல்புகளை விவரிக்கவும்.
2. ஔரங்கசீப் இந்துக்களின் பகையை எவ்வாறு தேடிக் கொண்டார் ?
3. மொகலாயப் பேரரசு வீழ்ச்சியடையக் காரணங்கள் யாவை ?
4. ஜப்பான் ஒற்றுமையடைந்த விதத்தை விவரி.

**பயிற்சி**

1. அக்பர், ஔரங்கசீப் காலத்திய மொகலாயப்பேரரசைப் படத்தில் குறிக்க.
2. மஞ்சு வமிசம் ஆண்ட காலத்தில் சீனப் பேரரசை விளக்கப் படம் வரைக.

# 14. கி. பி. 19, 20ஆம் நூற்றாண்டுகளில் ஆசியா

**முன்னுரை**

நவீன காலம் தொடங்கியதிலிருந்து ஐரோப்பிய நாடுகள், வளம் பெற்று விளங்கிய ஆசிய நாடுகளுடன் வாணிகம் செய்வதில் ஒன்றோடொன்று போட்டியிட்டன. 18ஆம் நூற்றாண்டில் ஆங்கிலேயர் ஆதிக்கம் இந்தியாவில் தொடங்கியது. அபின் வாணி கத்தில் கொள்ளை லாபம் அடைய வெளி நாட்டவர் சீன அரசின் தடையை மீறிக் கள்ளத்தனமாக சீனாவில் விற்றுவந்தனர். அதனால் **அபினிப் போர்கள் (Opium wars)** ஏற்பட்டன. மேற்கு நாடுகள்

அப்போர்களில் வெற்றி கண்டனர். தங்களுடைய ஆதிக்கத்தை சீனாவில் நிறுவினர். 18ஆம் நூற்றாண்டு ஆசிய நாடுகளைப் பொறுத்த மட்டில் **இன்னல் மிகுந்த காலம்** என்று சொல்லப் படுகிறது. மேலை நாடுகள் எவ்வாறு தங்கள் ஆதிக்கத்தை ஆசியாவில் செலுத்தினர் என்பதைப் படிப்போம்.

**இந்தியாவில் ஆங்கில ஆதிக்கம் ஏற்படுதல்**

முதலாம் எலிசபெத் அரசியிடம் பெற்ற ஒரு தனியுரிமைச் சாசனத்தின் மூலம் கி. பி.1600-ல் **ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி** அமைக்கப்பெற்றது. மேற்குக் கடற்கரையில் மொகலாயப் பேரரசோடு வாணிகம் செய்வதற்கு **சூரத் நகரில்** ஒரு வர்த்தகசாலையை கி. பி. 1612-ல் தொடங்கினர். அதன் பின் சென்னை, கல்கத்தா, பம்பாய் முதலிய இடங்களிலும் ஏற்பட்டன.

**பிரெஞ்சுக் கிழக்கிந்தியக் கம்பெனி :** கி.பி. 1664-ல் பிரெஞ்சு அரசால் இக் கம்பெனி அமைக்கப்பெற்றது. **பாண்டிச்சேரியில்** வாணிகத்தலம் நிறுவிய இவர்கள் நாளடைவில் சுதேச சமஸ்தானங்களின் விவகாரங்களில் தலையிட்டனர். சில சமஸ்தானங்கள் ஆங்கிலேயர்களின் உதவியை நாடியதால் இவ்விரு கம்பெனிகளைச் சேர்ந்தவர்களிடையே வாணிகப் போட்டியும் ஆதிக்கப் போட்டியும் ஏற்படலாயின.

ஆங்கில ஆட்சி இந்தியாவில் நிறுவப்பட முக்கிய காரணமாயிருந்தவர் **இராபர்ட் கிளைவ்** ஆவார். ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியில் வேலைக்கமர்ந்த தருணம் கர்நாடகத்தில் **சந்தா சாகிபுக்கும் அன்வாருதீனுக்கும்** வாரிசுரிமைப் போர் நடந்தது. அதேபோல் ஹைதராபாத்தில் **நாசர்சங்கும், முசபர் சங்கும்** போட்டியிட்டனர். இவர்களில் முசபர்சங்கும், சந்தா சாகிபும் பிரெஞ்சு ஆளுநர் **டூப்ளேயின்** உதவியைப்பெற்று வெற்றி பெற்றனர். இதைக் கண்ணுற்ற கிளைவ் பிரான்ஸ் நாட்டினரின் ஆதிக்கத்தைக் குறைக்க அவர்களின் எதிரிகளுக்கு உதவ ஆரம்பித்தார். அதனால் ஏற்பட்ட கர்நாடகப் போரில் ஆர்க்காட்டைக் கைப்பற்றி அன்வாருதீனின் மைந்தரான **முகம்மது அலியைக்** கர்நாடகத்தின் நவாபாக்கினார். அதன் பின் கி.பி. 1757-ல் வங்காளத்தில் நடந்த **பிளாசிப் போரில்** கிளைவ் வெற்றி பெற்று **மீர் ஜாபர்** என்பவரை வங்காள நவாபாக்கினார். கி.பி. 1764-ல் நடந்த **பக்ஸார் போரிலும்** ஆங்கிலேயர் வெற்றியடைந்தனர். இப்போர்களின் முடிவில் ஏற்பட்ட **அலகாபாத் உடன்படிக்கையில்** (1765) ஆங்கிலேயருக்கு வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களில் வரி

வசூல் செய்யவும், நீதி நிர்வாகம் செய்யவும் உரிமை கிடைத்தன. இது திவானி உரிமை எனப்படும். வாணிகக் கம்பெனி நாட்டை ஆளும் கம்பெனி ஆயிற்று. அப்பொழுது வங்காளத்தில் கிளைவ் **இரட்டையாட்சியை** ஏற்படுத்தினார். அதாவது உண்மையான அதிகாரம் ஆங்கிலக் கம்பெனியிடம் இருந்தது. நவாபின் அதிகாரிகள் வரி வசூலித்தல், நியாயம் வழங்குதல் ஆகிய பணிகளைச் செய்தனர். எனவே, ஆட்சி கம்பெனியாலும் நவாபாலும் நடைபெற்றது.

கிளைவுக்குப் பின் பதவியேற்ற **வாரன்ஹேஸ்டிங்ஸ்** வங்காள மக்கள் நல்வாழ்வு பெறுவதற்குப் பல திட்டங்களை வகுத்தார். இவர், இந்தியாவில் உள்ள ஆங்கில இராச்சியத்தை மராத்தியர், ஹைதர் அலி, திப்புசுல்தான் ஆகியோரின் தாக்குதல்களினின்றும் காப்பாற்றினார்.

வாரன்ஹேஸ்டிங்சுக்குப் பின் **காரன்வாலிஸ்** கவர்னர் ஜெனரல் பதவிக்கு வந்தார். 1793-ல் **நிலையான நிலவரித் திட்டத்தை** அமல் செய்தார். ஜமீன்தார்கள் நிலச் சொந்தக்காரர்கள் ஆனார்கள் அவர்கள் குறிப்பிட்ட ஒரு தொகையைக் கம்பெனிக்குக் கொடுக்க வேண்டும். இவர் **மூன்றாம் மைசூர்ப் போரில்** திப்பு சுல்தானைத் தோற்கடித்து, மைசூர் இராச்சியத்தின் சில பகுதிகள் ஆங்கிலேயர் களுக்குக் கிடைக்கும்படி செய்தார்.

காரன்வாலிசுக்குப் பின் பதவியேற்ற **சர் ஜான் ஷோர்** இந்தியச் சிற்றரசர்களுடைய விவகாரங்களில் தலையிடாக் கொள்கையை உறுதியாக மேற்கொண்டதால் மராத்தியர்களின் ஆதிக்கம் அதிகரிக்க லாயிற்று.

கி. பி. 1798-ல் பதவியேற்ற **வெல்லெஸ்லி பிரபு** இந்திய அரசர் களிடையே இருந்த குழப்ப நிலையை நீக்கி, ஆங்கில ஆதிக்கத்தை இந்தியாவில் நிலைபெறச் செய்யவும், வலிமையுள்ளதாகச் செய்யவும் விரும்பினார். அதற்குத் **துணைப்படைத் திட்டத்தை** வகுத்தார். இதனை முதன்முதலில் ஏற்றுக்கொண்ட ஹைதராபாத் நிஜாம் கடப்பை, கர்நூல், அனந்தப்பூர், பெல்லாரி மாவட்டங்களை ஆங்கிலேயருக்கு அளித்தார். இவையே **கொடை மாவட்டங்கள்** என அழைக்கப்படுகின்றன. அதேபோல் **அயோத்தி நாட்டரசரும்** மராட்டிய அரசர்களான **பேஷ்வா, பான்ஸ்லே, சிந்தியா** முதலியவர்களும் உடன்படிக்கை செய்து கொண்டு பல பகுதிகளை அளித்தனர். இதனை ஏற்க மறுத்த திப்பு சுல்தானுடன் போர் புரிந்து மைசூரை வென்று, அதனைப் பழைய இந்து வமிச அரசரிடம் ஒப்படைத்தார்.

மைசூர்ப் போர்களில் கிடைத்த பகுதிகளையும், கொடை மாவட்டங்களையும் மற்ற ஆங்கிலப் பகுதிகளையும் இணைத்து சென்னை இராஜதானியை வெல்லெஸ்லி பிரபு உருவாக்கினார். மராட்டியரிடமிருந்து பெற்ற பகுதிகளைக் கொண்டு ஹேஸ்டிங்ஸ் பிரபு கவர்னர் ஜெனரலாக இருந்த காலத்தில் பம்பாய் மாகாணம் உருவாக்கப்பட்டது.

கி. பி. 1828-ல் பதவியேற்ற **பெண்டிங் பிரபு** தமது பதவிக் காலத்தில் சிறந்த திட்டங்களைச் செயல்படுத்திப் பெருமை பெற்றார். முக்கியமாக அவர் உடன்கட்டை ஏறுதல் பழக்கத்தை ஒழித்தார். தக்கர்கள் என்ற கொள்ளைக் கூட்டத்தினரை ஒடுக்கினார்.

கி. பி. 1848-ல் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற **டல்ஹௌசி பிரபு** இதுவரையில் ஆங்கில ஆட்சிக்கு உட்படாத பல நாடுகளை வென்று ஆங்கிலப் பேரரசின்கீழ்க் கொண்டுவந்தார். அவைகளில் **பஞ்சாப், தெற்கு பர்மா** அல்லது **கீழ் பர்மா, மத்திய மாகாணங்கள், அயோத்தி** முக்கியமானவையாகும். சுதேச அரசர்களை ஆங்கிலப் பேரரசில் இணைக்க **அவகாசியிலிக் கொள்கையை** ஏற்படுத்தினார். இதனால் **சதாரா, ஜான்ஸி, நாகபுரி** முதலிய பகுதிகள் ஆங்கிலப் பேரரசுடன் இணைக்கப்பட்டன. இந்திய மக்களின் நலங் கருதி பல சீர்திருத்தங்களை இவர் கொண்டு வந்தார். இருப்புப் பாதைகள், தபால்-தந்தி முதலியவைகளைச் சிக்கன முறையில் ஏற்படுத்தினார். பொதுப் பணித் துறையை அமைத்தார்.

கி. பி. 1857ஆம் ஆண்டிற்குள் இந்தியா முழுவதும் பிரிட்டிஷார் ஆதிக்கத்தின்கீழ் வந்தது. அப்போதே பிரிட்டிஷ் ஆதிக்கத்துக்கு எதிர்ப்பு கிளம்பியது. இந்திய மன்னர்கள் எதிர்த்தனர். இதன் விளைவாக முதல் இந்திய சுதந்திரப் போர் தொடங்கியது.

**கிழக்கிந்தியத் தீவுகளில் டச்சு ஆதிக்கம்**

கி.பி. 1602-ல் நிறுவப்பட்ட **டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனி**—கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்த அம்பாய்னாவைப் போர்ச்சுகீசியரிடமிருந்து கைப்பற்றியது. அதன்பின் **ஜகார்த்தா, மலாக்கா** போன்ற இடங்களை டச்சுக்காரர்கள் கைப்பற்றினர். இத்தீவுகளின் இயற்கை வளத்தினை டச்சுக்காரர்கள் தங்களின் வர்த்தக மேன்மைக்காக மட்டுமே பயன்படுத்தினர். மேலும் இந்தியாவில் ஆங்கிலேயர்களுடன் போட்டி போட இயலாத நிலையில், கிழக்கிந்தியத் தீவுகளில் அதிகக்

கவனம் செலுத்தி, வாணிகத்தை மேம்படுத்தினர். அங்கு **அம்பாய்னா** என்னுமிடத்தில் ஆங்கிலேயர்களையும் ஜப்பானியரையும் சதிக் குற்றம் சாட்டி டச்சுக்காரர் கொன்றனர். இதுவே **அம்பாய்னாப் படுகொலை** என்றழைக்கப்படுகிறது. இதனால் ஆங்கிலேயர்கள் கிழக்கிந்தியத் தீவுகளை விட்டுவிட்டு இந்தியாவில் மிகுந்த கவனம் செலுத்தினர். டச்சுக்காரர்கள் கிழக்கிந்தியத் தீவுகளில் ஆழ்ந்த கவனம் செலுத்தினர். டச்சுக்காரர்கள் கிழக்கிந்தியத் தீவுகளில் பெயரளவிற்குச் சுல்தான்களை ஆட்சி புரியச்செய்து, அதிகாரங் களைத் தங்கள் கையில் வைத்துக் கொண்டனர். மேலும் அந்நாட்டு மக்களின் நலனில் அக்கறை காட்டாமல், தங்களின் பொருளாதார உயர்வை முக்கியமாகக் கொண்டனர். நறுமணப் பொருள்களின் வியாபாரம் குறைந்தபோது, காப்பித் தோட்டங்களை ஏற்படுத்திப் பொருளீட்டினர். அந்நாட்டு விவசாயிகளுக்கு மிகக் குறைந்த கூலி கொடுத்து, நிறைந்த வருவாயை அவர்கள் பெற்றனர்.

### இந்தோ சீனாவில் பிரெஞ்சு ஆதிக்கம்

இந்தியாவில் ஆங்கிலேயருடன் ஏற்பட்ட ஆதிக்கப் போட்டியில். பிரெஞ்சுக்காரர்கள் தோற்றதால் அவர்கள் இந்தோ சீனப் பகுதியில் அதிகக் கவனம் செலுத்தினர். இந்தோ சீனாவில் உள்ள **டோங்கின், அன்னாம், கொச்சின் - சீனா** பகுதிகளில் சீனப் பண்பாடும், **கம்போடியா, லாவோஸ்** பகுதிகளில் இந்தியப் பண்பாடும் பரவி யிருந்தன. 19ஆம் நூற்றாண்டில் பிரெஞ்சுக்காரர்கள் இப்பகுதி களைப் படிப்படியாகக் கைப்பற்றினர். சீனாவிற்கும், இந்தோ சீனா விற்கும் ஏற்பட்ட உடன்படிக்கையின் விளைவாக சீனா, பிரெஞ்சுக் காரர்களின் ஆதிக்கம் இந்தோ சீனாவில் ஏற்படுவதை ஏற்றுக் கொண்டது.

இந்தோ சீனாவின் செல்வ வளங்களான அரிசி, துத்தநாகம், தகரம், நிலக்கரி முதலியவற்றை முறையாக பிரெஞ்சுக்காரர்கள் தங்களது வர்த்தக நலனுக்குப் பயன்படுத்தத் தொடங்கினர். பிரெஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்தால் அந்நாட்டு மக்களுக்கு எந்த விதமான நன்மையும் ஏற்படவில்லை. இந்தோ சீனா, சீனாவிற் கருகில் இருப்பதால், சீனப் பண்பாடே மிகுந்து காணப்பட்டது. பிரெஞ்சுக்காரர்கள் சீனாவுடன் போக்குவரத்து வைத்துக்கொள்ள பல வசதிகளைச் செய்துகொண்டனர்.

### பிலிப்பைன் தீவுகளில் அமெரிக்க ஆதிக்கம்

பசிபிக் பெருங்கடலில், பார்மோசாத் தீவிற்குத் தெற்கில் ஏழாயிரத்திற்கும் அதிகமான தீவுகளைக் கொண்ட தீவுக்கூட்டமே **பிலிப்பைன் தீவுகள்** ஆகும். இத்தீவுகளில் உயர்ந்த மலைகளும், அடர்ந்த காடுகளும், எரிமலைகளும் மிகுந்து காணப்படுகின்றன. 1521-ல் ஸ்பானியப் பேரரசரான ஐந்தாம் சார்லஸின் காலத்தில் **மெகல்லன்** என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டு, ஸ்பானிய இளவரசர் **பிலிப்பின்** பெயரில் இத்தீவுக் கூட்டம் இப்பெயரைப் பெற்றது. கி. பி. 1898 வரை ஸ்பெயினின் ஆதிக்கத்தில் இத்தீவுகளிருந்தன. அவ்வாண்டு அமெரிக்காவிற்கும் ஸ்பெயினுக்குமிடையே போர் மூண்டு, அதில் ஸ்பெயின் தோற்கடிக்கப்பட்டு, அத்தீவுகளை அமெரிக்கா கைப்பற்றியது. அமெரிக்காவின் ஆட்சிக்கு எதிராக மக்கள் கலகம் செய்தனர். அக் கலகம் அமெரிக்கர்களால் அடக்கப் பட்டது. பின் பசிபிக் பெருங்கடலில் ஆதிக்கத்தையும் செல்வாக் கையும் ஏற்படுத்திக்கொள்ள அமெரிக்கர்கள் இத்தீவுகளைப் பயன் படுத்தினர். அதே சமயம் இத்தீவுகளில் பல பள்ளிகளும், இருப்புப் பாதைகளும், சாலைகளும், தொழிற்சாலைகளும் நிறுவப்பட்டன.

### ஜப்பானின் எழுச்சி

கி.பி. 1853ஆம் ஆண்டுவரை ஜப்பான் வேறு எந்த நாட்டுடனும் எந்தவிதமான உறவும் கொள்ளாமல் தனிமையில் வாழ்ந்து வந்தது. இது **மூடிய கதவுக் கொள்கை** (Closed Door Policy) என்றழைக்கப் பட்டது. ஜப்பானின் தனிமையை அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய நாடுகள் நீக்க முயன்றன. ஜப்பானுடன் அவை வாணிகம் செய்ய விரும்பின. கி.பி. 1853-ல் அமெரிக்கக் கடற்படை அதிகாரி **பெர்ரி** என்பவர் நான்கு போர்க் கப்பல்களுடன் ஜப்பானுக்கு வந்து அரசருக்குப் பல பரிசுப் பொருள்கள் கொடுத்துத் துறைமுகங்களைப் பயன்படுத்த அனுமதி வேண்டினார். ஓராண்டிற்குள் நல்லதொரு முடிவைக் கொடுக்குமாறு கேட்டுக்கொண்டார். ஜப்பானில் உண்மை யாக ஆட்சி செய்துவந்த ஷோகன் பெர்ரியின் வேண்டுகோளை ஏற்க முடியாமல் தவித்தார். அதனால் ஏற்படும் பின் விளைவுகளை எண்ணிக் குழம்பினார். இறுதியில் ஜப்பானின் முன்னேற்றத்தைக் கருத்திற்கொண்டு இரண்டு துறைமுகங்களைப் பயன்படுத்திட அமெரிக்காவிற்கு ஷோகன் அனுமதி அளித்தார். இதன் பின் பிரிட்ட னும் அமெரிக்காவைப் பின்பற்றி ஜப்பானுடன் வாணிக உறவு கொண்

டது. இங்ஙனம் பல ஐரோப்பிய நாடுகளுடன் வாணிக உறவு ஒப்பந்தம் செய்துகொண்டதற்கு ஷோகனே காரணமாயிருந்தார். இதனால் ஷோகன்கள் ஜப்பானிய மக்களிடம் தங்கள் செல்வாக்கை இழந்தனர்.

ஜப்பானுக்கு வந்து குடியேறியவர்கள் வாணிகத்தை மட்டும் செய்யாமல், சமய விவகாரங்களிலும் தலையிட்டனர். ஜப்பான் நாடு முழுவதும் பரவிய அவர்கள் பல்வேறு உரிமைகளைப் பெற்று விளங்கினர். இது ஜப்பானியர்களின் மனத்தில் வெறுப்பை வளர்த்தது. ஷோகன்களின் அதிகாரங்களைப்பறித்து நாட்டைப் பலப்படுத்த ஜப்பானியர்கள் ஒன்று கூடினர். 1868 ஆம் ஆண்டு ஷோகன் பதவி ஒழிக்கப்பட்டு, எல்லா அதிகாரங்களும் மிகாடோவிடம் கொடுக்கப் பட்டன. மக்கள் நலனில் பேரார்வம் கொண்ட **முட்சுஹிடோ** என்ற மிகாடோ அதிகாரத்தைப் பெற்றார். இதுதான் **மெய்ஜி மீட்சி** என்றழைக்கப்படுகிறது. இவரின் காலம் (1868—1912) **மெய்ஜி காலம்** என்றழைக்கப்படுகிறது. அவரைத் தெய்வமாகக் கருதி உரிய மரியாதையைச் செலுத்தினர். நாட்டுப்பற்றுடன் ராஜ விசுவாசம் இணைக்கப்பட்டது. அதை **ஷிண்டோ சமயம்** என்பர்.

இக்காலத்தில் பல புரட்சிகரமான சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. நிலமானிய முறை ஒழிக்கப்பட்டது. பிரபுக்களின் செல்வாக்கு அழிக்கப்பட்டது. 1889ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட அரசியலமைப்பின்படி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளு மன்றம் ஒன்று அமைக்கப்பட்டது. இராணுவம் ஜெர்மானிய முறையிலும், கடற்படை பிரிட்டிஷ் முறையிலும் மாற்றி அமைக்கப்பட்டது. கட்டாயக் கல்விச் சட்டம் இயற்றப்பட்டது. பல இளைஞர்கள் அந்நிய நாடுகளுக்குச் சென்று, அங்குள்ள பல்கலைக் கழகங்களில் தொழில் நுட்பங்களைக் கற்று, நாட்டிற்குத் திரும்பி அங்கு அநேக தொழிற் சாலைகளை அமைத்தனர். மேலை நாடுகளிலிருந்து வரவழைக்கப் பட்ட தொழில் வல்லுநர்களின் உதவியுடன் பல தொழிற்சாலைகள் நிறுவப்பட்டன. வேளாண்மைத் துறையிலும் நவீன முறைகள் பயன் படுத்தப்பட்டன. இங்ஙனம் பல துறைகளிலும் கவனம் செலுத்தி, அத்துறைகளில் வியத்தகு முன்னேற்றங்களை அடைந்து, மற்ற உலக நாடுகள் திகைக்கும் அளவில் ஜப்பான் கால் நூற்றாண்டு காலத்திற்குள் திகழ்ந்தது.

## சீனாவில் பாக்ஸர் இயக்கம்

மஞ்சு வம்சம் ஆட்சி செய்த காலத்தில் ஐரோப்பியர் சீனாவில் வாணிகர்களாக நுழைந்தனர். சீனர்கள் அபினியை மட்டுமே




படம் 24. சீனாவில் ஐரோப்பிய வாணிகத் தலங்கள்

ஐரோப்பியரிடமிருந்து அதிக அளவில் வாங்கினர். ஆங்கில வாணிகர்கள் கேட்ட சலுகைகளைச் சீன அரசு கொடுக்க மறுத்தது. மேலும் கள்ளத்தனமாக நடைபெற்றுவந்த அபின் வாணிகத்தைத்

தடை செய்ய மிகக் கடுமையான நடவடிக்கைகளைச் சீன அரசு எடுத்தது. இதனால் **முதல் அபினிப் போர்** ஏற்பட்டது. இது கி.பி. 1842-ல் **நான்கிங் உடன்படிக்கையுடன்** முடிவடைந்தது. அதன் படி சீனா, பிரிட்டனுக்கு **ஹாங்காங்** தீவைக் கொடுத்தது. மேலும் ஐந்து துறைமுகங்களின் வாணிகம் நடத்தும் உரிமையையும் அளித்தது. இவ்வுடன்படிக்கையால் ஏற்பட்ட மன நிறைவின்மை யால், அயல் நாட்டு வாணிகர்களுக்கும் சீனர்களுக்கும் அடிக்கடி கைகலப்பு ஏற்பட்டது. இதனால் கி.பி. 1856-ல் **இரண்டாம் அபினிப் போர்** ஏற்பட்டது. இப்போரில் பிரிட்டனுடன் பிரான்சும் சேர்ந்து சீனாவைத் தாக்கியது. கி.பி. 1861-ல் ஏற்பட்ட **டியென்ஸ்டின் உடன் படிக்கை** போரை முடிவடையச் செய்தது. அதன்படி அபின் இறக்கு மதி சட்டப்படி அனுமதிக்கப்பட்டதுடன் மேலும் பல துறைமுகங் களையும் அயல் நாட்டவர்கள் பயன்படுத்த அனுமதி அளிக்கப்பட்டது. அவர்கள் கிறிஸ்தவச் சமயத்தைப் பரப்பவும் உரிமை பெற்றனர். அயல்நாட்டுத் தூதுவர் தலைநகரமான பீகிங்கில் தங்கவும் அனு மதிக்கப்பட்டனர். சீனாவில் தங்கியிருந்த ஐரோப்பியர் சீன சட்டங் களுக்குக் கட்டுப்பட்டவர்களல்லர். **கான்டன், ஹாங்காங்** போன்ற உடன்படிக்கைத் துறைமுகங்களில் (Treaty Ports) ஐரோப்பியச் சட்டங்களே செயல்பட்டு வந்தன. எனவே, இந்தச் சீனத் துறை முகங்கள் குட்டி ஐரோப்பிய நாடுகளாகத் திகழ்ந்தன. அங்குள்ள ஐரோப்பியர் சுதந்திரமாக வாழ்ந்தனர்.

மெய்ஜி புரட்சியினால் வலுவடைந்த ஜப்பான் சீனாவின் பல வீனத்தை நன்கு பயன்படுத்தியது. சீனாவின் மேலாதிக்கத்தில் இருந்த **கொரியாவை** ஜப்பான் தாக்கியது. அதனால் போர்மூண்டது. அது **சீன ஜப்பானியப் போர்** (கி.பி. 1894 - 95) எனப்படும். அப் போரில் ஜப்பான் பல வெற்றிகளைப் பெற்றது. இறுதியில் ஏற் பட்ட **ஷிமோனோசேகி உடன்படிக்கையின்**படி, ஜப்பான் சீனாவிட மிருந்து **பார்மோசா தீவையும் ஷியோடுங்** தீபகற்பத்தையும் பெற்றது. பின்னர் ருஷ்யாவின் தலையீட்டால் அத் தீபகற்பத்தை மீண்டும் சீனா பெற்றுக் கொண்டு அதற்குப் பதில் நஷ்ட ஈடாகப் பெருந் தொகையை ஜப்பானுக்குத் தந்தது.

நாட்டுப்பற்று மிக்க சீனர்கள், ஐரோப்பியர்களின் ஆதிக்கத்தை வெறுத்து, அவர்களை விரட்டியடிக்கச் சீனாவில் தொடங்கிய இயக்கம் **பாக்ஸர் இயக்கம்** (கி.பி. 1899—1900) எனப்படும். இவ்வியக்கத் திற்குச் சீனப் பேரரசியாக அப்போது பதவியிலிருந்த **ஸூ-ஸி** (Tzu-Hsi) என்பவர் ஊக்கமளித்தார். மக்களைத் தூண்டிவிட்டு, அயல்

நாட்டவர் கொல்லப்பட்டு, அவர்களின் சொத்துகள் சீனர்களால் கைப்பற்றிக் கொள்ளப்பட வேண்டுமெனத் தம் ஆணையில் குறிப் பிட்டிருந்தார். அதன்படி அயல் நாட்டவர் பலர் கொல்லப்பட்டனர். அயல் நாட்டவர் தங்களின் நாடுகளை உதவிக்கு அழைத்தனர். அவ் வழைப்பிற்கிணங்க ஜப்பான், அமெரிக்கா, ரஷ்யா, பிரிட்டன், ஜெர்மனி முதலிய நாடுகளின் படைகள் சீனாவிற்குச் சென்று பக்ஸார் இயக்கத்தை ஒடுக்கின. சீன அரசு பணிந்தது. மேலும் வெற்றி யடைந்த அயல் நாட்டினர் விதித்த கடும் நிபந்தனைகளுக்கெல்லாம் சீன அரசு உடன்பட்டது.

**ரஷ்ய ஜப்பானியப் போர்** *(1904—05)*

கி.பி. 1894-95-ல் நடைபெற்ற சீன ஜப்பானியப் போரின் முடிவில் ஏற்பட்ட உடன்படிக்கையின் விளைவாக சீனாவிடமிருந்து லியோடுங் தீபகற்பத்தை ஜப்பான் பெற்றது. பின்னர் ரஷ்யாவின் தலைமீட்டால் ஜெர்மனி, பிரான்ஸ் முதலிய நாடுகள் கூட்டமாகச் சேர்ந்து அத் தீபகற்பத்தையும் அங்குள்ள போர்ட் ஆர்தர் துறை முகத்தையும் சீனாவிற்குத் திருப்பிக் கொடுத்துவிடும்படி ஜப்பானை வற்புறுத்தின. அதன்படி ஜப்பான் அதனை விட்டுக்கொடுத்தது. எனினும், ரஷ்யாதான் இதற்குக் காரணமென எண்ணி அதன்மீது பகைமையைப் பாராட்டியது. இவ்வாறு ஜப்பான் திருப்பி சீனா விற்குக் கொடுத்த போர்ட் ஆர்தரை ரஷ்யா கைப்பற்றி பிறநாட்டுக் கப்பல்கள் அங்கு வரத் தடை விதித்தது. மேலும் சீனாவின் வட பகுதியான மஞ்சூரியாவையும் ரஷ்யா ஆக்ரமித்தது. இதனைப் பார்த்த ஜப்பான் ரஷ்யாவை முறியடிக்க பிரிட்டனுடன் கி.பி.1902-ல் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டது. அதன்படி இரு நாடுகளுக்கும் போர்க்காலங்களில் ஒருவருக்கொருவர் உதவி புரிவது என்று முடி வெடுக்கப்பட்டது.

ரஷ்யா சைபீரிய இருப்புப்பாதையை போர்ட் ஆர்தர் வரை அமைத்திருந்தது. இதனை எதிர்த்த ஜப்பான் சில கோரிக்கைகளை நிறைவேற்றும்படி ரஷ்யாவைக் கேட்டுக் கொண்டது. அதனைச் செய்யாததால் ரஷ்யாவுடன் கி.பி. 1904-ல் ஜப்பான் போரில் ஈடு பட்டது. இப்போரில் வலிமை மிக்க நாடான ரஷ்யாவை, மிகச் சிறிய நாடான ஜப்பான் நீரிலும் நிலத்திலும் பல இடங்களில் தோற் கடித்தது. முக்கியமாக **சுஷிமா** (Tsushima) ஜலசந்தியில் ரஷ்யாவின் கப்பற்படை ஜப்பானால் சிதறடிக்கப்பட்டது. ஜப்பானின் புகழ் ஓங்கியது. போர்ட் ஆர்தரை ஜப்பான் கைப்பற்றியது. ரஷ்யா

போரை நிறுத்த முன் வந்தது. அமெரிக்கக் குடியரசு தலைவர் **தியோடர் ரூஸ்வெல்டின்** முயற்சியால் **போர்ட்ஸ்மவுத் உடன்படிக்கை** 1905-ல் ஏற்பட்டது. அதன்படி லியோடுங் தீபகற்பத்தை ஜப்பான் பெற்றது. மஞ்சூரியாவைச் சீனா மீண்டும் பெற்றது. ஜப்பானும் ரஷ்யாவும் அதை விட்டு வெளியேறின. இப்போரின் விளைவாக ரஷ்யாவின் ஆதிக்க வளர்ச்சி தடைப்பட்டது. ஜப்பான் மிகப் பெரிய வல்லரசு என்பதை உலக நாடுகள் புரிந்துகொண்டன.

### இந்திய தேசிய இயக்க வளர்ச்சி

இந்தியாவில் தேசிய இயக்க வளர்ச்சி தோன்ற ஆங்கில ஆட்சியும் ஆங்கில அறிவும் சில காரணங்களாகும். ஆங்கிலேயர்கள் இந்தியா முழுவதையும் வென்று ஒன்றுபடுத்தி ஒரு நிலையான ஆட்சியை நாடு முழுவதும் அமைத்தனர். இதனால் நாட்டில் ஒற்றுமை வளர்ந்தது. ஆங்கிலக் கல்வி பரவியதால் ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளில் தோன்றிய புரட்சிகளையும், சுதந்திர இயக்கங்களையும், பாராளுமன்ற ஆட்சி முறையினையும் இந்திய மக்கள் அறிந்தனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பல சமூக, சமயச் சீர்திருத்த இயக்கங்கள் இந்தியாவில் நடைபெற்றன. மேலை நாட்டவரின் ஆட்சியால் இந்தியக் கலாச்சாரம் பெரிதும் பாதிக்கப்பட்டது. இந்தியக் கலாச்சாரத்தைக் காக்கவும், அதில் உள்ள குறைகளைப் போக்கவும் இராஜாராம் மோகன்ராய், தயானந்த சரஸ்வதி, ஈஸ்வர சந்திர வித்யாசாகர், இராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகானந்தர் முதலானோர் பல சமூக, சமயச் சீர்திருத்த இயக்கங்களை உருவாக்கி மக்களிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தினர்.

அரசியல் அறிவு வளர்ச்சி பெற்ற இந்தியர் மக்களாட்சி முறையை இந்தியாவில் தோற்றுவிக்க விரும்பினர். கி.பி.1885-ல் **எ.ஒ. ஹியூம், வில்லியம்வெட்டர்பன், தாதாபாய் நௌரோஜி** முதலியவர்களின் முயற்சியால் **இந்திய தேசிய காங்கிரஸ்** நிறுவப்பட்டது. இந்த நிறுவனம் ஆங்கிலேயர்களிடமிருந்து படிப்படியாக விடுதலையைப் பெறுவதையே நோக்கமாகக் கொண்டிருந்தது. மேலும் ஆட்சியிலும் அரசுப் பதவிகளிலும் இந்தியர்களுக்கு வாய்ப்பளிக்கச் செய்தல், இராணுவச் செலவினைக் குறைத்து மக்களின் இன்றியமையாச் செலவுகளைக் கவனித்தல் போன்ற பல நோக்கங்களைத் தன்னிடத்தே கொண்டிருந்தது. **திலகர், கோகலே, பானர்ஜி, தாதாபாய்**

**நௌரோஜி** முதலிய தேசிய விடுதலைத் தலைவர்கள் பணியினைத் திறம்படச் செய்து மக்களிடையே தேசிய உணர்வை வளர்த்தனர்.

கி.பி. 1905-ல் தோற்றுவிக்கப்பட்ட **இந்திய சுதேசி இயக்கம்** கர்ஸனின் வங்கப் பிரிவினையால் ஏற்பட்டதாகும். இதன் விளைவாகக் கப்பலோட்டிய தமிழர் **வ.உ. சிதம்பரனார்** சுதேசிக் கப்பல் கம்பெனியைத் தூத்துக்குடியில் நிறுவினார். இந்தியத் தொழில்கள் நன்கு வளர்ச்சி பெற இவ்வியக்கம் பெரிதும் உதவியது. கி.பி. 1909-ல் ஏற்பட்ட **மின்டோ-மார்லி சீர்திருத்தங்களின்** மூலம் இந்தியர்கள் சட்டசபையில் இடம் பெறவும் கேள்வி கேட்கவும் உரிமை கிடைத்தது. முஸ்லிம்களுக்குத் தனித் தொகுதிகள் அளிக்கப் பட்டன.

**சீனப் புரட்சி**

சீனாவில் **நவீன காலம்** 20ஆம் நூற்றாண்டில் தொடங்கியது எனலாம். ஒரு சில சீன ஆசிரியர்கள் கல்வியறிவு பெற்று சீனப் புரட்சியை வளர்த்து நவீன சீனாவை ஏற்படுத்தினர். மஞ்சு அரசர்களின் வலிமை குன்றிய ஆட்சியும், கி.பி. 1894-95-ல் ஏற்பட்ட சீன ஜப்பானியப் போரினால் ஏற்பட்ட செலவைச் சரி செய்ய விதித்த வரிச்சுமையும், இயற்கையின் சீற்றத்தால் ஏற்பட்ட வெள்ளம், பஞ்சம் முதலியன கொடுத்த இன்னல்களும் சீனப்புரட்சி ஏற்படக் காரணமாயிருந்தன. அப்புரட்சி ஏற்பட **டாக்டர் சன்-யாட்-சென்** காரணமாயிருந்ததுடன், அவரே முன்னின்று நடத்தவும் செய்தார். அவர் மஞ்சுப் பேரரசர்களின் ஆட்சிக்குப் பதில் குடியரசு ஏற்படுத்த முயற்சித்தார். மூன்று மாதங்கள் நடைபெற்ற உள்நாட்டுப் போரின் முடிவில் சீனாவில் 1912-ல் குடியரசு ஏற்படுத்தப்பட்டு டாக்டர் சன்-யாட்-சென் குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அவரது மூன்று முக்கியக் கொள்கைகள் **தேசியம், குடியாட்சி, பொதுவுடமை** என்பவையாகும். இருப்பினும் சீனாவில் போட்டிக் குடியரசு ஏற்பட்டு உள்நாட்டுப் போர் நடந்தது. நாட்டின் ஒற்றுமையைக் காக்க சன்-யாட்-சென் தம் பதவியைத் துறந்து **யவான்-ஷி-கே** (Xuan-Shi-Keh)யைத் தலைவராக்கினார். யவான் காலத்தில் அந்நியர்களுக்கு மீண்டும் சலுகைகள் தரப்பட்டதால் அவர் திறமையாக ஆட்சி செய்ய முடியவில்லை. அவருக்கும், மக்கள் சபைக்கும் அடிக்கடி தகராறு ஏற்பட்டது. கி. பி. 1916-ல் அவர் இறக்கவே, சீனாவில் படைத் தலைவர்கள் தோன்றி அவரவர்கள்

பகுதியில் அவரவர்கள் ஆண்டனர். நாட்டில் ஒரே நிலையான அரசு பீகிங் தலைநகரத்தில் அமைக்கப்படவில்லை.

சீனப் புரட்சி தோல்வியடைந்தது.

## கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களை நிரப்புக :**

1. ——— இந்தியாவில் ஆங்கில ஆட்சிக்கு அடிகோலினார்.
2. ——— ம் ஆண்டில் பிளாசிப் போர் நடைபெற்றது.
3. காரன்வாலிஸ் பிரபுவின் முக்கிய சீர்திருத்தம் ——— .
4. துணைப்படைத் திட்டத்தை ஏற்படுத்தியவர் ——— .
5. இந்திய தேசிய காங்கிரஸ் ——— ஆண்டில் ஏற்பட்டது.
6. சீன முதல் குடியரசு தலைவர் ——— .

**II. குறுகிய விடையளிக்கவும் :**

1. அம்பாய்னாப் படுகொலையைப்பற்றிக் குறிப்பு வரைக.
2. இந்தோனேஷியாவில் (கிழக்கிந்தியத் தீவுகளில்) டச்சுக்காரரின் ஆதிக்கத்தைப்பற்றிச் சிறு குறிப்பு வரைக.
3. பிலிப்பைன் தீவுகளைக் கண்டுபிடித்த மாலுமி யார்? இத்தீவுகள் ஏன் இப்பெயர் பெற்றன?
4. மெய்ஜி காலம் — குறிப்பு வரைக.
5. அபினிப் போர் என்றால் என்ன?
6. பாக்ஸர் இயக்கம்பற்றிச் சிறு குறிப்பு வரைக.

**III. விரிவான விடையளிக்கவும் :**

1. ரஷ்ய-ஜப்பானியப் போரைப்பற்றி விரிவாக எழுதுக.
2. இந்திய தேசிய இயக்க ஆரம்ப வளர்ச்சியை விவரிக்கவும்.
3. சீனப் புரட்சியை விவரிக்கவும்.

## பயிற்சி

1. இந்திய விடுதலை வீரர்களின் படங்களைச் சேகரித்து உனது படப் புத்தகத்தில் ஒட்டுக.
2. கி.பி. 1857 ஆம் ஆண்டு இந்தியா படத்தைக் குறிப்பிடுக.

# 15. கி. பி. 19, 20ஆம் நூற்றாண்டுகளில் ஆசியா (தொடர்ச்சி)

**முன்னுரை**

பத்தொன்பதாவது நூற்றாண்டின் முக்கிய நிகழ்ச்சி ஆசியாவின் சில பகுதிகளில் ஐரோப்பிய, அமெரிக்க நாடுகள் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்தியதே என நாம் அறிந்தோம். ஆனால், இருபதாம் நூற்றாண்டு பல வகைகளிலும் சிறப்புடையது. அறிவியல் பொருளியல், அரசியல் போன்ற துறைகளில் பெரும் வளர்ச்சி இந்நூற்றாண்டில் ஏற்பட்டுள்ளது. என்றாலும் இந்நூற்றாண்டில் தான் உலக நாடுகளை உலுக்கிய இரு உலகப்போர்கள் தோன்றின. பல மாறுதல்கள் ஏற்பட்டன. இப்பாடத்தில் முதல் உலகப்போரைப் பற்றியும், அவற்றின் விளைவுகளைப்பற்றியும், நாம் படிப்போம்.

## முதல் உலகப் போர் (கி.பி. 1914—1918)

**காரணங்கள்**

1. முதல் உலகப்போருக்கு முக்கிய காரணம் ஜெர்மனியின் பேராசையாகும். 1888-ல் பதவியேற்ற ஜெர்மன் கெய்சர் **இரண்டாவது வில்லியம்** ஜெர்மனியை வன்மையுள்ள வல்லரசாக்க விரும்பினார் ; தமது நாட்டின் தொழில், வாணிக வளர்ச்சிக்கு இங்கிலாந்து, பிரான்ஸ் நாடுகளைப்போல குடியேற்றங்கள் அமைக்கவும் விரும்பினார். அவர் தமது இராணுவப் படையைப் பெருக்கி நவீன முறையில் அமைத்தார். ஜெர்மனிக்குக் கடற்கரை சிறிது தூரம் இருந்தபொழுதிலும் ஒரு பெரிய கப்பற்படையும் நவீன முறையில் அமைத்தார். பிரிட்டன் அதனால் திகிலடைந்தது.

இரண்டாம் வில்லியம் கெய்சராவதற்குமுன் **பிஸ்மார்க்** ஜெர்மனி, ஆஸ்திரியா, இத்தாலி ஆகிய நாடுகள் அடங்கிய ஒரு **முக்கூட்டு உடன்படிக்கையை** 1882-ல் அமைத்திருந்தார். அதற்கு எதிராக பிரான்சும் ரஷ்யாவும் 1892-ல் **இரட்டை ஒப்பந்தம்** ஒன்றை ஏற்படுத்திக் கொண்டன.

ஜெர்மனியின் வலிமையும் பேராசையும் தனக்கு பெரும் இடையூறு விளைவிக்குமென்று கருதி, பிரிட்டன் 1904-ல் பிரான்சுடன் ஒரு **நேச உடன்பாடு** (entente Cordiale) செய்து கொண்டன. 1907-ல் அந்த நேச உடன்பாட்டில் ரஷ்யாவும் சேர்க்கப்பட்டு, அது முக்கூட்டு நட்புறவு (Triple Entente) ஆயிற்று.

இவ்வாறாக ஐரோப்பா இரு முகாம்களாகப் பிரிந்து காணப்பட்டது. அந்த இரண்டு கூட்டுகளின் போட்டியும் பொறாமையும் முதல் உலகப்போருக்கு வித்திட்டன.

2. முதல் உலகப்போர் ஏற்பட மற்றொரு காரணம் பால்கன் தீபகறபத்தில் ஆஸ்திரியாவுக்கும் செர்பியாவுக்கும் இடையே ஏற்பட்ட போட்டியாகும். ஆஸ்திரியா செர்பியாவிற்கு எதிராக அத்தீப கற்பத்தின் போஸ்னியாவையும் ஹொர்ஜிகோனியாவையும் ஆக்கிர மித்துத் தன் ஆட்சிக்குட்படுத்திற்று. முக்கூட்டு நாடுகளில் ஒன்றான ஆஸ்திரியா பால்கன் தீபகற்பத்தில் இவ்வாறு தனது செல்வாக்கை அதிகப்படுத்தியதை ரஷ்யா விரும்பவில்லை. ரஷ்யா செர்பியாவை ஆதரித்தது. அதனால் பால்கன் பிரதேசத்தில் நெருக்கடி தோன்றியது.

3. போருக்கு உடனடி காரணம் 1914-ல் ஜூன் திங்களில் ஆஸ்திரிய இளவரசரான **ஆர்ச் டியூக் சார்லசும்,** அவரது மனைவியும் போஸ்னியாவின் தலைநகரான **ஸாஜிவோ** என்னுமிடத்தில் செர்பிய மாணவனொருவனால் சுட்டுக் கொல்லப்பட்டதேயாகும். அதற்கு செர்பியா அரசாங்கமும் உடந்தை எனக் குற்றஞ்சாட்டி, ஆஸ்திரியா, செர்பியாவின் மீது கடுமையாக நிபந்தனைகளை விதித்தது. அவற்றை செர்பியா ஏற்றுக்கொள்ள மறுக்கவே, ஆஸ்திரியா செர்பியாமீது போர் தொடுத்தது. ரஷ்யா, செர்பியாவின் சார்பில், போரில் இறங்கியது. ஆஸ்திரியாவின் நேச நாடான ஜெர்மனி ரஷ்யாவுடன் போர் தொடுத்தது. பிரான்ஸ் ரஷ்யாவுடன் சேர்ந்து கொண்டு ஜெர்மனியை எதிர்த்தது. ஜெர்மனி நடுநிலை நாடான பெல்ஜியம் வழியாக பிரான்சைத் தாக்க படையெடுத்துச் சென்றதால் பெல்ஜியத்தின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக பிரிட்டன் ஜெர்மனிக்கு எதிராகப் போரில் ஈடுபட்டது. துருக்கியும் பல்கேரி யாவும் ஜெர்மனியுடன் சேர்ந்து போரிட்டன.

இப்போரில் முக்கூட்டு உடன்படிக்கையில் உறுப்பினரான இத்தாலி நாடு ஜெர்மனி, ஆஸ்திரியாவுடன் சேரவில்லை. போர் நடக்கும்போது 1915-ல் பிரிட்டன், பிரான்சுடன் இத்தாலி சேர்ந்தது. போரின் இறுதிக்கட்டத்தில் அமெரிக்கா பிரிட்டனுடன் சேர்ந்தது. பிரிட்டிஷ் கட்சி நாடுகள் நேச நாடுகள் (Allies) என்றும், ஜெர்மன் கட்சி நாடுகள் **மத்திய வல்லரசுகள்** (Central Powers) என்றும் அழைக்கப்பட்டன.

1918 நவம்பர் 11ஆம் நாள் ஜெர்மனி அடிபணிந்தது. ஜெர்மனியின் அரசர் தம் கெய்சர் பதவியைத் துறந்து நாட்டை விட்டு ஹாலந்திற்கு ஓடினார். போர் முடிவுற்றது. சமாதான உடன்படிக்கை 1919-ல் வெர்சய்ல்ஸ் நகரில் ஏற்பட்டது.

## 2. போரின் விளைவுகள்

1. போரில் பெருமளவு உயிர் இழப்பும் பொருள் இழப்பும் ஏற்பட்டன.
2. போரின் விளைவாக ஜெர்மனி, ஆஸ்திரியா, துருக்கி ஆகிய நாடுகளின் பேரரசுகள் மறைந்தன.
3. உலகில் அமைதியை நிலைநாட்டச் சர்வதேசச் சங்கம் (League of Nations) உருவாக்கப்பட்டது.
4. ஐரோப்பிய நாடுகளின் எல்லைகள் திருத்தி அமைக்கப் பட்டுப் புதிய நாடுகள் உருவாயின. **செக்கோஸ்லோவாகியாவும் போலந்தும்** புதிய நாடுகள் ஆகும். செர்பியா விரிவாக்கப்பட்டு, **யூகோஸ்லாவியா** என அழைக்கப்பட்டது.

## 3. வெர்சய்ல்ஸ் சமாதான மாநாடு (1919)

1919-ல் வெர்சய்ல்ஸ் சமாதான மாநாடு கூடியது. அதில் அமெரிக்க ஐக்கிய நாட்டு ஜனாதிபதி **உட்ரோ வில்சனும்,** பிரான்ஸின் முதன் மந்திரியான **கிளமென்ஸோ**வும், பிரிட்டனின் பிரதமரான **லாயிட் ஜார்ஜும்,** இத்தாலி நாட்டுப் பிரதிநிதியான **ஆர்லன்டோவும்** செல்வாக்குப் பெற்றிருந்தனர். சமாதான உடன்படிக்கைகள் குடியாட்சி, தேசியம் ஆகிய கொள்கைகளை ஏற்றுக்கொண்டு போலந்து, செக்கோஸ்லோவகியா என்ற புதிய நாடுகளுக்குச் சுதந்திரம் அளித்தன. செர்பியா நாடானது யூகோஸ்லாவியா என்ற ஒருபெரிய நாடாக உருவாக்கப்பட்டது. தோல்வியடைந்த நாடுகள் மீது கடுமையான நிபந்தனைகள் சுமத்தப்பட்டன. வெற்றி பெற்ற நாடுகள் பல புதிய பகுதிகளையும் சலுகைகளையும் பெற்றன. அந்த மாநாட்டில் சர்வதேசச் சங்கம் உருப்பெற்றது.

## துருக்கியப் பேரரசு சிதறுதல்

முதல் உலகப்போரில், வெற்றிபெற்ற நேச நாடுகள் தோல்வி அடைந்த பேரரசுகளின்மீது கடுமையான நிபந்தனைகளை விதித்தன என நாம் அறிந்தோம். துருக்கியின்மீது கடுமையான நிபந்தனைகள்

1920-ல் **செவ்ரஸ்** உடன்படிக்கையில் விதிக்கப்பட்டன. அவ்வுடன் படிக்கையின்படி துருக்கிப் பேரரசு ஒழிக்கப்பட்டது. கான்ஸ்டான்டி நோபிள் சர்வதேசக் கண்காணிப்பில் வைக்கப்பட்டது. அரேபியா சுதந்திர நாடானது. சிரியா, பாலஸ்தீனம், ஈராக் மான்டேட் நாடுகளாயின. சிரியாவின் நிர்வாகத்தை பிரான்ஸிடமும ஈராக், பாலஸ்தீனம் ஆகிய நாடுகளின் நிர்வாகத்தைப் பிரிட்டனிடமும் சர்வ தேசச் சங்கம் ஒப்படைத்தது.

செவ்ரஸ் உடன்படிக்கையை முஸ்தபா **கெமால் பாஷாவின்** தலைமையில் இயங்கிய தேசியவாதிகள் ஒப்புக்கொள்ளவில்லை முஸ்தாபா கெமால் பாஷாவின் முயற்சியினால் செவ்ரஸ் உடன்படிக்கை 1923-ல் **லாசேன் (Lausanne)** என்னுமிடத்தில் துருக்கிக்குச் சாதக மாகத் திருத்தி அமைக்கப்பட்டது.

லாசேன் உடன்படிக்கையின்படி துருக்கியரல்லாத பிறர் வாழும் பகுதிகளின் மீது தமக்கிருந்த உரிமையை விட்டுக் கொடுக்கத் துருக்கியர் இசைந்தனர். கான்ஸ்டான்டிநோபிள், துருக்கிக்குத் திரும்ப வழங்கப்பட்டது. ஆனால் துருக்கியின் தலைவரான முஸ்தாபா கெமால் பாஷா ஆசியா மைனரிலுள்ள **அங்கோராவையே** துருக்கிக் குடியரசின் தலைநகராக்கிக் கொண்டார்.

## இந்தியாவில் கிலாபத் இயக்கம்

துருக்கி சுல்தான் இந்திய முஸ்லிம்களின் **கலிபாவாகக்** (மதத் தலைவராக) கருதப்பட்டார். செவ்ரஸ் உடன்படிக்கையின்படி அவருக்கு இழைத்த அநீதிகளைக் கண்ட இந்திய முஸ்லிம்கள் வீரிட் டெழுந்தனர். பிரிட்டிஷ் அரசை, துருக்கிபற்றிய அதன் கொள்கையை மாற்றிக் கொள்ளும்படி 1920ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் அவர்கள் ஓர் இயக்கத்தைத் தொடங்கினர். அது **கிலாபத் இயக்கம்** எனப் படும். அவ்வியக்கத்தில் **முகம்மது அலி, சவுக்கத் அலி** என்ற இரு சகோதரர்கள் தலைவர்களாக விளங்கினர்.

இந்திய தேசியக் காங்கிரஸ் மகாசபையின் தலைவராக இருந்த மகாத்மா காந்தியும் அவ்வியக்கத்தை ஆதரித்து அதில் ஈடுபாடு கொண்டார். ஏனெனில், அவர் அவ்வியக்கத்தில் நியாயம் இருந்ததாக உணர்ந்தார்; அதோடு அவ்வியக்கத்தை ஆதரிப்பதனால் தமது ஒத்துழையாமை இயக்கத்திற்கு இந்திய முஸ்லிம்களின் ஆதரவு நிச்சயமாகக் கிடைக்கும் என நம்பினார்; இந்து முஸ்லிம் ஒற்றுமை யும் ஏற்படும் என்றும் எண்ணினார். ஆனால், 1922-ல் துருக்கியில்

கிலாபத் ஒழிக்கப்பட்டது. துருக்கி சுல்தான் பதவி இழந்தார். துருக்கி முஸ்தாபா கெமால் பாஷா தலைமையில் குடியரசு ஆயிற்று. அதனால் இந்தியாவில் கிலாபத் இயக்கம் கைவிடப்பட்டது.

**முஸ்தாபா கெமால் பாஷாவும், துருக்கிக் குடியரசும்**

1453-ல் கான்ஸ்டான்டி நோபிளைத் துருக்கியர்கள் கைப்பற்றியதி லிருந்து பால்கன் தீபகற்பத்தில் துருக்கிப் பேரரசு இருந்துவந்தது. **ஆட்டோமான் பேரரசு** என்றும் அழைக்கப்பட்டது. துருக்கியின் மன்னர் சுல்தான் எனப்பட்டார். அவர் இஸ்லாம் சமயத்தின் கலிபா அல்லது தலைவராகக் கருதப்பட்டார். அவரது பேரரசில் பாலஸ் தீனம், சிரியா, எகிப்து, அரேபியா, பால்கன் பிரதேசங்கள் முதலியன அடங்கியிருந்தன. முதல் உலகப் போருக்குப்பின் துருக்கிப் பேரரசு சிதறுண்டது என நாம் அறிந்தோம். நலிவுற்ற துருக்கி **ஐரோப்பா வின் நோயாளி** என ஐரோப்பிய நாடுகளினால கேலி செய்யப்பட்டது. அந்நிலையில் துருக்கிக்குப் புத்துயிர் அளித்தது. அதைப் பிற ஐரோப்பிய நாடுகளைப் போன்று வல்லரசாக்கிய பெருமை முஸ்தாபா கெமால் பாஷாவைச் சாரும்.

**முஸ்தாபா கெமால் பாஷா** (கி. பி. 1881 — 1938) : முஸ்தாபா கெமால் கி.பி. 1881-ல் சலோனிகா என்னுமிடத்தில் பிறந்தார். அவரது தந்தை சுங்கவரி அதிகாரியாவார். அவர் இராணுவக் கல்லூரியில் **சேர்ந்து போர்** முறைகளைப் பயின்றார். அவருடைய கணித அறிவை வியந்து அவரைஅவரது ஆசிரியர் **கெமால்** என்றழைத் தார். கெமால் என்ற அராபிய மொழிக்கு **சிறப்படைதல்** என்று பொருள். 1907-ல் கெமால் துருக்கி இராணுவத்தில் சேர்ந்தார். துருக்கிக்கும் இத்தாலிக்கும் **போர்** ஏற்பட்டபொழுது கெமால் இத்தாலியர்களுடன் போர் புரிந்து வீரச் செயல்கள் செய்து கர்னல் பதவிபெற்றார்.

முதல் உலகப்போரில் துருக்கி ஜெர்மனியிடம் சேர்ந்தது. கெமால் **டார்டனல்ஸ்** பிரதேசத்திலிருந்து இராணுவத்தின் தலைவரானார் ; அதன் வழியாகச் சென்று துருக்கியின் தலைநகரைக் கைப்பற்றத் திட்டமிட்டிருந்த பிரிட்டிஷ் படைகளை முறியடித்தார். அவரது அரிய தொண்டினைப் பாராட்டி துருக்கி அரசாங்கம் அவருக்கு 1915-ல் தளபதி பதவியையும் **பாஷா** என்ற விருதையும் வழங்கியது.

முதல் உலகப்போரில் துருக்கி தோல்வியுற்றதை எண்ணி மக்கள் மனம் வருந்தினர். திறமையற்ற சுல்தானை மக்கள் வெறுத்தனர். அந்நிலையில் முஸ்தாபா தேசியக் கட்சி ஒன்றைத் தோற்றுவித்தார். அப்பொழுது ஆசியாமைனரில் உள்ள ஸ்மிர்னா என்னும் இடத்தைத் தாக்கிய கிரேக்கப் படையை முறியடித்து விரட்டினார். அவருக்கு மக்களிடம் செல்வாக்கு வளர்ந்தது. இதைப் பயன்படுத்தி சுல்தானைப் பதவியிலிருந்து இறக்கி, துருக்கி ஒரு குடியரசு என்று விளம்பரப் படுத்தினார். 'கலிபா' பதவி ஒழிக்கப்பட்டது. துருக்கிக் குடியரசுக்கு அவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆசியா மைனரில் உள்ள அங்கோரா நவீன துருக்கியின் தலைநகரமாயிற்று. நவீன துருக்கி சமயச் சார்பற்ற குடியரசாயிற்று. முதன்முதலில் கெமால் பாஷா செவ்ரஸ் உடன்படிக்கையின் கடுமையான நிபந்தனைகளை லாசேனில் மாற்றினார். அதைப்பற்றி நாம் முன்பே அறிந்துள்ளோம்.

முஸ்தாபா கெமால் பாஷா மக்களின் சமூக, பொருளாதார நிலைகளை உயர்த்தப் பல சீர்திருத்தங்கள் செய்தார். மக்களிடம் காணப்பட்ட மூடப் பழக்கவழக்கங்களை ஒழித்தார். பெண்கள் மேற்கொண்டிருந்த 'பர்தா' முறையை நீக்கிப் பொதுவிடங்களிலும் பொதுக்கூட்டங்களிலும் அவர்கள் பங்கு பெறுவதை வரவேற்றார். பெண்கள் கல்வி அறிவு பெறத் தனிச் சலுகைகள் அளிக்கப்பட்டன. ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ வழி வகுத்தார். ஆண்கள் பெஸ் என்னும் துருக்கிக் குல்லாய் அணிவதையும் தாடி வளர்ப்பதையும் கைவிட்டு ஐரோப்பியரைப் போன்று உடைகளும் தொப்பியும் அணியுமாறு செய்தார். கவிஞர்களும், நூலாசிரியர்களும் நவீன கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு புதிய கவிதைகள், நூல்கள் எழுத வேண்டுமென வற்புறுத்தினார். அராபிய எழுத்துகளுக்குப் பதிலாக இலத்தீன் எழுத்துகளைப் பயன்படுத்தச் செய்தார். நீதிமன்றங்களும் சட்டதிட்டங்களும் மேனாட்டு முறையில் மாற்றியமைக்கப்பட்டன. புதிய முறைகளில் வேளாண்மை பெருக வழி செய்தார். வாணிகம் வளர்ச்சி அடைந்தது. போக்குவரத்து வசதிக்காக நல்ல சாலைகள் அமைக்கப்பட்டன. இரும்பு எஃகு ஆலைகள், நெசவு ஆலைகள் முதலியன நிறுவப்பட்டு ஆலைத் தொழில்கள் வளர்ச்சியடைந்தன. தொழிலாளர் முன்னேற்றம் கருதித் தொழிற்சாலைச் சட்டங்கள் இயற்றப்பட்டன. துருக்கியின் முன்னேற்றத்திற்குப் பலவாறு பாடுபட்ட முஸ்தாபா

கெமால் பாஷாவுக்குத் துருக்கியர்கள் **அட்டாடர்க்** (துருக்கியின் தந்தை) என்ற விருதை அளித்துச் சிறப்பித்தனர். அவர் கி. பி. 1938-ல் உயிர் நீத்தார்.

**சவுதி அரேபியா**

அரேபியா துருக்கிப் பேரரசின் ஒரு பகுதியாக இருந்துவந்தது. முதலாம் உலகப்போரின் இறுதியில் அரேபியா சுதந்திர நாடாயிற்று. **இபன்சவுத்** என்பவர் தற்கால ஆரேபியாவை இணைத்தார். சவுத் ஆட்சி புரிந்த அரேபியா **சவுதி அரேபியா** எனப் பெயர் பெற்றது. தீபகற்பத்தில் தன்னாட்சி பெற்றுள்ள நாடுகளில் சவுதி அரேபியா, **ஏமன், பஹ்ரீன், குவைத், ஓமன்** முக்கியமானவையாகும். அந்நாடுகள் எண்ணெய் வளம் மிக்கவை. பாறை எண்ணெயில் சவுதி அரேபியா வும், மற்ற சிறிய அராபிய நாடுகளும் செல்வம் மிகுந்த நாடாகத் திகழ்கின்றன.

**ஈராக்**

பண்டைய மெசபொடேமியா சமவெளியே இன்றைய ஈராக் நாடாகும். அது பழம்பெரும் நாகரிகங்களின் பிறப்பிடம். அப்பகுதி துருக்கியப் பேரரசுக்குட்பட்டு இருந்தது. இதன் மக்கள் பெரும் பான்மையோர் அராபியர்கள். முதல் உலகப்போருக்குப்பின் ஏற்பட்ட சமாதான உடன்படிக்கையின்படி ஈராக் சர்வதேசச் சங்கத்தின் மான்டேட் நாடாகியது. சர்வதேசச் சங்கம் அதன் நிர்வாகத்தை பிரிட்டனிடம் ஒப்படைத்தது. கி.பி. 1921-ல் மக்களின் விருப்பத்திற் கிணங்க **எமிர் பெய்ஸல்** (Emir Feizel) ஈராக்கின் மன்னரானார். 1927-ல் ஈராக்கின் சுதந்திரத்தைப் பிரிட்டன் ஒப்புக்கொண்டது. 1932-ல் அது சர்வதேசச் சங்கத்தில் உறுப்பு நாடாயிற்று.

பதவிப் போட்டி காரணத்தினால் 1932-லிருந்து பல அரசியல் மாறுதல்கள் நடைபெற்றுள்ளன. இப்பொழுது அது குடியரசாக விளங்குகிறது. ஈராக் நாட்டின் செல்வத்திற்கு அங்குள்ள எண்ணெய் வளம் முக்கிய காரணமாகும்.

**சிரியா**

சிறிய ஆசியாவில் தென்கிழக்கில் மத்தியதரைக்கடல் ஓரத்தி லுள்ள குடியரசு சிரியாவாகும். அந்நாடு முதல் உலகப்போருக்கு முன் துருக்கிப் பேரரசின் ஒரு பகுதியாக விளங்கியது. போருக்குப்பின்

சிரியா பிரான்சிற்கு மான்டேட் நாடாக வழங்கப்பட்டது. 1944-ல் சிரியா முழு சுதந்திரக் குடியரசாயிற்று. 1958-ல் **ஐக்கிய அரேபியக் குடியரசு (United Arab Republic)** அமைக்கப்பட்டதும் சிரியா எகிப்துடன் சேர்ந்து பின்னர் பிரிந்தது. ஈராக் போன்று சிரியாவிலும் அநேக அரசியல் மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. இன்று அது ஒரு குடியரசு; அந்நாட்டைப் போன்றே சிரியாவும் அரேபியர்கள் பெரும் பான்மையாக வசிக்கும் நாடாகும். சிரியாவும் மிக்க எண்ணெய் வளமுடையது.

**பாலஸ்தீனம்**

முன்னர் ஒன்பதாவது பாடத்தில் பாலஸ்தீனத்திலிருந்து அங்கு பழங்காலத்திலிருந்து வாழ்ந்து வந்த யூதர்கள் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் ரோமானியர்களால் விரட்டப்பட்டனர் என்றும் அந் நிகழ்ச்சி வரலாற்றில் **டயஸ் போரா** எனப்படுகின்றது என்றும் நாம் படித்தோம். டயஸ் போராவிற்குப் பிறகு சில நூற்றாண்டுகள் பாலஸ்தீனம் ரோமப் பேரரசின் ஒரு பகுதியாக இருந்தது. கி. பி. 8ஆம் நூற்றாண்டில் பாலஸ்தீனம் முஸ்லிம் ஆதிக்கத்திற்குட் பட்டிருந்தது. அப்பொழுதுதான் சிலுவைப் போர்கள் நிகழ்ந்தன. முதல் உலகப் போர் முடியும் வரை பாலஸ்தீனம் துருக்கிப் பேரரசின் ஒரு பகுதியாக விளங்கியது.

முதல் உலகப் போர் நடைபெற்றபொழுது பாலஸ்தீனம் துருக்கியரிடமிருந்து ஆங்கிலேயரால் கைப்பற்றப்பட்டது. சர்வதேசச் சங்கத்தின் ஏற்பாட்டின்படி அந்நாடு ஆங்கிலேயரிடம் மான்டேட் நாடாக விடப்பட்டது.

பழங்காலத்திலிருந்தே வெளிநாட்டிற்கு விரட்டப்பட்ட யூதர் ஒவ்வொருவருக்கும் தம் தாய் நாடாகிய பாலஸ்தீனத்திற்குச் செல்ல வேண்டுமென்ற எண்ணம் இருந்து வந்தது. அதற்காக யூதர்கள் **சியானிஸ்ட் (Zionist)** இயக்கத்தை 19 ஆவது நூற்றாண்டின் இறுதியிலிருந்து நடத்திவந்தனர். 'சியான்' ஜெருசலேமின் மற்றொரு பெயர். சியான் குன்றின் மீதுதான் யூதர்களின் சிறந்த அரசரான சாலமோன் ஒரு கோயிலைக் கட்டியிருந்தார். எனவே, சியானிஸ்ட்டு இயக்கத்தின் நோக்கம் பாலஸ்தீனத்தில் யூதர்கள் குடியேறி அது அவர்கள் நாடாக்கப்பட வேண்டும் என்பதேயாகும். அவ்வியக்கம் வலுப்பெறலாயிற்று.

1916ஆம் ஆண்டு உலகப்போர் நடைபெற்றபொழுது டாக்டர் செய்ம் வெய்ஸ்மான் இங்கிலாந்திலுள்ள மான்செஸ்டர் பல்கலைக் கழகத்தில் இரசாயனப் பேராசிரியராக இருந்தார். அவர் ஒரு யூதர். அவரது ஓர் இரசாயனக் கண்டுபிடிப்பு நேசநாடுகள் முதல் உலகப் போரில் வெற்றிப் பெறுவதற்கு பெரிதும் உதவியது. அதனால் அவருக்கு பிரிட்டிஷ் அரசிடம் அதிகச் செல்வாக்கு இருந்தது. அவருடைய முயற்சியினால் பால்பர் (Balfour) என்ற பிரிட்டிஷ் அயல்நாட்டுச் செயலர் (Foreign Secretary) தமது புகழ்பெற்ற அறிக்கையை பிரிட்டிஷ் அரசிடம் 1917ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 2 ஆம் நாள் சமர்ப்பித்தார். **பால்பர் அறிக்கையில்** (Balfour Declaration) 'பாலஸ்தீனத்தில் யூதர்கள் குடியேறி தங்கள் தேசிய நாட்டை அமைக்கலாம்; அதற்கு பிரிட்டிஷ் அரசு வழிவகுக்கும்' என்று கூறியது. அரேபியர் பால்பர் அறிக்கையை ஏற்றுக்கொள்ள மறுத்தனர்.

பால்பர் அறிக்கைக்குப்பின் உலகின் பல பகுதிகளிலிருந்தும் யூதர்கள் பாலஸ்தீனத்திற்கு வந்து குடியேறலாயினர். உலக யூதர் மன்றமும் (World Zionist Federation), அமெரிக்காவும், இங்கிலாந்தும் இணைந்து பாலஸ்தீனத்தில் யூதர்கள் குடியேற உதவின. ஹிட்லர் ஜெர்மனியில் ஆதிக்கம் பெற்று அங்கிருந்து யூதர்களை விரட்டியதும், அவர்கள் பாலஸ்தீனத்தில் அதிகமாகக் குடியேறினர். யூதர்களின் குடியேற்றத்தினால் அண்டைய அரேபிய நாடுகள் அச்சமுற்றன. அவைகள் யூதர்களைத் தாக்கலாயின. 1939-ல் இரண்டாம் உலகப்போர் மூண்டதும் தற்காலிகமாக அரேபிய-யூதர்கள் சச்சரவுகள் ஓய்ந்தன. போர் முடிந்ததும் மீண்டும் அவர்களிடையே சண்டைகள் தோன்றின. யூதர்கள் அரேபியர் தாக்குதல்களை வெற்றிகரமாகச் சமாளித்தனர். முதல் உலகப் போருக்குப் பின் பாலஸ்தீனம் மான்டேட் பிரதேசமாக பிரிட்டனால் நிர்வகிக்கப் பட்டு வந்தது. இரண்டாம் உலகப்போருக்குப் பின் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தின் உதவியால் 1948 மே மாதம் 15 ஆம் நாள் யூதர்கள் வாழும் பகுதியில் **இஸ்ரேல்** என்ற புதிய யூதர் அரசு அமைக்கப் பட்டது. அது **மேற்கு ஜெருசல** நகரைத் தலைநகராகக் கொண்டது. மற்றொரு பிரிவு அரேபியர் வாழும் ஜோர்டான் நாடாயிற்று. ஜோர்டான் ஒரு முடியாட்சி நாடு. இஸ்ரேல் குடியாட்சி நாடு. அதன் முதல் தலைவராக **டாக்டர் செய்ம் வெய்ஸ்மான்** தேர்ந்தெடுக்கப் பட்டார்.

## கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களை நிரப்புக :**

1. முதல் உலகப் போரின் முடிவில் ———— நகரில் சமாதான உடன்படிக்கை ஏற்பட்டது.
2. கிலாபத் இயக்கத்தின் தலைவர்கள் ————, ———— என்ற சகோதரர்கள்.
3. ஐரோப்பாவின் நோயாளி என ———— நாடு கேலி செய்யப்பட்டது.
4. பண்டைய மெசபொடேமியா தற்காலத்தில் ———— நாடாகும்.
5. பாலஸ்தீனம் ————, ———— என இரு பிரிவு களாகப் பிரிக்கப்பட்டது.

**II. சுருக்கமாக விடை அளிக்கவும் :**

1. முதல் உலகப்போருக்கு உடனடியான காரணம் எது ?
2. கிலாபத் இயக்கத்தைக் காந்தியடிகள் ஆதரிக்க காரணம் யாது ?
3. கெமால்பாஷா பெண்கள் முன்னேற்றத்திற்கு ஆற்றிய பணி யாது ?
4. அரேபியத் தீபகற்பத்திலுள்ள முக்கிய நாடுகள் எவை ?
5. பால்பர் அறிக்கையை விளக்குக.

**III. விரிவான விடை தருக :**

1. முதல் உலகப்போரின் காரணங்களையும் விளைவுகளையும் குறிப்பிடுக.
2. முஸ்தாபா கெமால் பாஷாவின் சாதனைகளை விவரிக்கவும்.
3. யூதர்கள் எவ்வாறு தனி நாட்டைப் பெற்றனர்?

# 16. தற்கால ஆசியா

**முன்னுரை**

உலக நாடுகள் அனைத்தையும், இனி உலகில் போர் மூண்டால் உலகே அழியும் என்ற உண்மையை இரண்டாம் உலகப்போர் உணரச் செய்தது. அதோடு முதல் உலகப்போர் தூண்டிவிட்ட சுதந்திர உணர்ச்சியும், தேசியப்பற்றும் இரண்டாம் உலகப் போரினால் வளர்ச்சி பெற்று அந்நியர் ஆதிக்கத்திலிருந்த ஆசிய, ஆப்பிரிக்க நாடுகள் சுதந்திரம் பெறலாயின. தற்காலத்தில் ஆசிய நாடுகள் சுதந்திர நாடுகளாகத் திகழ்ந்து பல துறைகளிலும் முன்னேற்றம் அடைந்து வருகின்றன.

## இரண்டாம் உலகப்போரும் (1939—1945) அதன் விளைவுகளும்

முதல் உலகப்போர் முடிவடைந்து 20 ஆண்டுகளுக்குப் பின்னர் இரண்டாம் உலகப்போர் ஏற்பட்டது. அப்போர் முதல் உலகப் போரைவிட பல வகைகளில் கொடுமையானதும் பயங்கரமானது மாகும்.

**போருக்குக் காரணங்கள்**

முதல் உலகப் போரின் முடிவில் ஏற்பட்ட வெர்செய்ல்ஸ் உடன் படிக்கை இரண்டாம் உலகப்போர் தோன்றுவதற்கு முக்கிய காரண மாகும். அச்சமாதான உடன்படிக்கையில், தோல்வியுற்ற நாடுகளின் மீது கடுமையான நிபந்தனைகள் சுமத்தப்பட்டன என நாம் அறிந் தோம். அவ்வுடன்படிக்கையின் விளைவாக ஜெர்மனியின் குடியேற்றங்கள் அனைத்தும் பறிக்கப்பட்டன: அதன் தரைப்படை, கப்பற்படை கலைக்கப்பட்டன. கிழக்கு பிரஷ்யா மேற்கு பிரஷ்யா வினின்றும் பிரிக்கப்பட்டு அவற்றிற்கிடையே போலந்து நாட்டின் ஆதிக்கம் ஏற்படுத்தப்பட்டது. மிகுதியான போர் நஷ்ட ஈடு ஜெர்மனி கொடுக்கவேண்டியதாயிற்று. உலகப் பொருளாதார மந்தத்தினாலும் ஜெர்மனியின் பொருளாதாரம் பாதிக்கப்பட்டது. அந்நிலையில் ஜெர்மனியில் **அடால்ப் ஹிட்லர்** ஜெர்மானியரிடையே தேசிய வெறி, இனவெறியைப் பரப்பி வெர்செய்ல்ஸ் திட்டத்தை உடைத்தெறிய வேண்டுமென முழங்கினார். மக்கள் அவரை ஆதரிக்கலாயினர். 1934-ல் ஹிட்லர் சர்வாதிகாரியானார். அவர் வெர்செய்ல்ஸ் உடன் படிக்கையை மீறினார். ஜெர்மன் மொழியினரை ஒன்று சேர்த்து ஜெர்மனி இழந்த பகுதிகளை மீண்டும் கைப்பற்றி ஜெர்மனியை ஒரு

வல்லரசாக்க முனைந்தார். அவர் உருவாக்கிய கட்சி **நாசிக் கட்சி** எனப்படும்.

இத்தாலியிலும் ஜப்பானிலும் அவ்வாறே நாடு பிடிக்கும் ஆசையும் ஆதிக்க வெறியும் தோன்றின. இத்தாலியின் சர்வாதிகாரி **முசோலினி** தமது **பாசிஸ்ட்** கட்சியை உருவாக்கி மக்களிடையே இனவெறியையும் தேசிய வெறியையும் தூண்டிப் பரப்பி வந்தார். இக்கட்சி இத்தாலியை மத்தியதரைக் கடல் பிரதேசத்தில் ஒரு வல்லரசு ஆக்க முயன்றது.

ஜெர்மனி, இத்தாலியைப்போல ஜப்பான் ஆசியாவில் ஒரு வல்லரசு ஆக விரும்பியது. 1931-ல் ஜப்பான் சீனாவைச் சார்ந்த மஞ்சூரியாவைக் கைப்பற்றியது. 1936-ல் இத்தாலி ஆப்பிரிக்காவிலுள்ள அபிசினியா நாட்டின் மீது போர் தொடுத்து அதைத் தனது பேரரசுடன் இணைத்துக் கொண்டது. அச்செயல்களுக்கெதிராக சர்வதேசச் சங்கம் நடவடிக்கைகள் எடுக்கவில்லை. அதனால் அவை மேலும் ஆக்கிரமிப்புச் செயல்களில் ஈடுபட்டன.

பின்னர் ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் நாடுகள் சர்வதேசச் சங்கத்திலிருந்து விலகிக் கொண்டன. அந்த மூன்று நாடுகளும் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டன. அந்தக் கூட்டு **ரோம்—பெர்லின்—டோக்கியோ அச்சு** எனப்பட்டது.

1938-ல் ஜெர்மனி ஆஸ்திரியாவைத் தன்னுடன் இணைத்துக் கொண்டது. அதே வருடத்தில் ஜெர்மன் மக்கள் பெரும்பான்மையாக வாழும் செக்கோஸ்லோவாக்கியாவின் ஒரு பகுதியான **சூடேட்டான் லாண்டை** ஹிட்லர் ஜெர்மனியுடன் இணைத்தார்.

1939-ல் ஹிட்லர் செக்கோஸ்லோவாக்கியாவின் மற்றைய பகுதிகளையும் கைப்பற்றி போலந்து நாட்டைத் தாக்கினார். ஹிட்லரின் ஆக்கிரமிப்புச் செயல்களை அதுவரை பொறுத்துக் கொண்டிருந்த கிரேட் பிரிட்டனும் பிரான்சும் 1939ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 3ஆம் நாள் போரில் இறங்கின. அப்போரில் முதலில் பிரிட்டனும் பிரான்சும் ஜெர்மனியுடன் போர் புரிந்தன. 1940-ல் இத்தாலி ஜெர்மனியின் சார்பிலும் 1941-ல் ரஷ்யா ஜெர்மனிக்கு எதிராகவும் போரில் இறங்கின. 1941ஆம் ஆண்டு இறுதியில் ஜப்பான் ஜெர்மனியின் சார்பிலும், அமெரிக்கா, பிரிட்டன் பிரான்ஸ் சார்பிலும் போரில் இறங்கின. பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா, சீனா முதலிய நாடுகள் **நேச நாடுகள்** என்றும் ஜெர்மனி,

இத்தாலி, ஜப்பான் ஆகிய நாடுகள் **அச்சு நாடுகள்** என்றும் அழைக்கப்பட்டன.

போர்தொடக்கத்தில் அச்சு நாடுகள் அநேக வெற்றிகள் அடைந்தன. என்றாலும் 1943-ல் இத்தாலியும், 1945-ல் ஜெர்மனியும் சரணடைந்தன. முசோலினியும் ஹிட்லரும் உயிர் இழந்தனர். ஜப்பான் தன்னந்தனியாகப் போரை நடத்தி வந்தது. ஆனால், ஜப்பானியத் தொழில் நகரங்களான **ஹிரோஷிமா, நாகசாகி** ஆகியவற்றில் அமெரிக்கப் படை அணுகுண்டுகளை வீசவே ஜப்பானும் சரணடைந்தது. உலகப்போர் முடிவுக்கு வந்தது.

போரில் நேசநாட்டினரின் வெற்றிக்கு அமெரிக்க ஜனாதிபதி **ரூஸ்வெல்ட்**, ரஷ்ய சர்வாதிகாரி **ஸ்டாலின்**, இங்கிலாந்துப் பிரதம மந்திரி **சர்ச்சில்** ஆகிய மூவரும் காரணமாவர்.

**போரின் விளைவுகள்**

1. ஜெர்மனியில் ஹிட்லரின் நாசிக் கட்சியும், இத்தாலியில் முசோலினியின் பாசிஸ்ட் கட்சியும் ஒழிக்கப்பட்டன
2. ஐரோப்பியரின் பேரரசுக் கொள்கை மறைந்தது. ஆசிய, ஆப்பிரிக்க நாடுகள் விடுதலை பெற்றன.
3. உலகில் போரைத் தவிர்த்து அமைதியை நிலைநாட்ட ஐக்கிய நாடுகள் சபை தோற்றுவிக்கப்பட்டது.
4. பிரான்ஸ், பிரிட்டன் ஆகியவை செல்வாக்கை இழந்தன. அமெரிக்க ஐக்கிய நாடுகளும் ரஷ்யாவும் செல்வாக்கு பெற்றன.
5. கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலும் சீனாவிலும் பொதுவுடைமைக் கொள்கை பரவியது.

## இரண்டாம் உலகப்போருக்குப் பின் ஆசியாவில் தோன்றிய சுதந்திர நாடுகள்

### இந்தியா

இந்திய தேசிய இயக்கம் வளர்ச்சியடைந்ததைப்பற்றிப் பதினான்காவது பாடத்தில் அறிந்தோம். மகாத்மா காந்தியின் தலைமையில் நாட்டின் விடுதலைக்கு அறப்போர் நடந்ததுபற்றி எட்டாம் வகுப்பில் விரிவாகப் படித்தோம்.

கி.பி. 1945-ல் இரண்டாம் உலகப் போர் முடிந்தவுடன் இங்கிலாந்தில் தொழிற்கட்சி பதவியேற்றது. அக்கட்சியின் தலை

வரும் பிரிட்டனின் பிரதமருமான **அட்லி** என்பவர் இந்தியாவிற்குச் சுதந்திரம் அளிக்கத் தீர்மானித்து இந்தியாவிற்கு **மௌண்ட் பேட்டன் பிரபுவை** இராசப் பிரதிநிதியாக அனுப்பினார். அவர் நமது நாட்டின் சுதந்திரத்திற்கு ஒரு திட்டம் வகுத்தார். அதில் முஸ்லிம்கள் பெருவாரியாக வாழும் பகுதிகளை ஒன்றாக இணைத்துப்




**படம் 25. இரண்டாம் உலகப் போருக்குப்பின் ஆசிய சுதந்திர நாடுகள்**

**பாகிஸ்தான்** என்ற நாடும் இதர பகுதிகள் **இந்திய யூனியன்** என்றும் இந்தியா இரண்டாகப் பிரிக்கப்பட்டது. இந்திய தேசியக் காங்கிரஸ் அத்திட்டத்தை ஏற்கவே, ஆங்கில நாடாளுமன்றத்தில் **இந்தியச் சுதந்திரச் சட்டம்** நிறைவேற்றப்பட்டு கி.பி. 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 15ஆம் நாள் இந்தியா விடுதலை பெற்றது; ஆகஸ்டு 14ஆம் நாள் பாகிஸ்தான் என்ற புதிய நாடு தோன்றியது.

சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமராக **ஜவஹர்லால் நேருவும்,** கவர்னர் ஜெனரலாக **மௌண்ட் பேட்டன் பிரபும்** பதவியேற்றனர். மௌண்ட்பேட்டனுக்குப் பின்1948 ஜூனில் **சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார்** முதல் இந்திய கவர்னர் ஜெனராலாகப் பதவியேற்றார். சுதந்திரம் பெற்ற பின்பு இந்தியாவிலிருந்த 600க்கும் அதிகமான சுதேச சமஸ்தானங்களை **சர்தார் வல்லபாய்படேல்** இந்திய அரசுடன் இணைத்து **இந்தியாவின் பிஸ்மார்க்** என்ற பெயரைப் பெற்றார். பாபு இராசேந்திர பிரசாத் தலைமையில் அமைக்கப்பட்ட இந்திய அரசியல் நிர்ணய சபை இந்தியாவுக்கான அரசியல் அமைப்புத் திட்டத்தைத் தயாரித்தது. அத்திட்டம் 1950 ஜனவரி 26 ஆம் நாள் நடைமுறைப்படுத்தப்பட்டு இந்தியா குடியரசு நாடாயிற்று. இந்தியக் குடியரசின் முதல் தலைவராக **பாபு இராசேந்திர பிரசாத்** தேர்ந்தெடுக்கப் பட்டார். பிரிட்டிஷ் பொதுநல அரசிலும், ஐக்கிய நாடுகள் சபையிலும் அங்கம் வகிக்கும் இந்தியா எந்த வல்லரசுடனும் இணையாமல் நடுநிலை நாடுகளுள் ஒன்றாகத் திகழ்கின்றது. உலக அமைதிக்குப் பாடுபடுவதுடன் பொருளாதாரத் துறையில் முன்னேறி வரும் நாடுகளில் இந்தியாவும் ஒன்றாகும்.

ஜவஹர்லால் நேருவிற்குப் பின் **லால்பகதூர் சாஸ்திரி**யும், திருமதி **இந்திரா காந்தி**யும், **மொரார்ஜி தேசா**யும், **சரண்சிங்கும்** முறையே பிரதமர்களாகப் பதவி வகித்தனர். 1980 ஜனவரி தேர்தலில் **திருமதி இந்திரா காந்தியின்** தலைமையிலான காங்கிரஸ் கட்சி வெற்றிபெற்றுத் திருமதி இந்திரா காந்தி மீண்டும் இந்தியாவின் பிரதம மந்திரியாகப் பொறுப்பேற்றார்.

### பாகிஸ்தான் — பங்களாதேஷ்

**மௌண்ட் பேட்டன்** பிரபு திட்டத்தின் அடிப்படையில் 1946-ல் இங்கிலாந்து நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட இந்தியச் சுதந்திரச் சட்டத்தின்படி இந்தியா பாகிஸ்தான், இந்திய யூனியன் என்ற இரு நாடுகளாகப் பிரிக்கப்பட்டது. 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 14ஆம் நாள் பாகிஸ்தான் தோன்றியது. மேற்குப் பாகிஸ்தானில் சிந்து, மேற்குப் பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பலுசிஸ்தானம் ஆகியவையும், கிழக்குப் பாகிஸ்தானம் ஆகியவையும், கிழக்குப் பாகிஸ்தானில் கிழக்கு வங்காளமும் அடங்கின. பாகிஸ்தானின் முதல் கவர்னர் ஜெனரலாக **முகம்மது அலி ஜின்னா** பதவியேற்றார். .பாகிஸ்தான் இஸ்லாமியக் குடியரசாயிற்று. அங்கு நிலையான ஆட்சி நடைபெறவில்லை. கி. பி. 1958

அக்டோபரில் குடியரசு தலைவர் **இஸ்கந்தர் மிர்ஸா** அரசியல் சட்டத்தை ரத்து செய்து இராணுவச் சட்டத்தை அமலாக்கினார். அவருக்குப் பின் **அயூப்கானும் யாஹ்யா கானும்** இராணுவ ஆட்சித் தலைவர்களாக இருந்தனர்.

கி. பி. 1970 டிசம்பரில் நடைபெற்ற தேர்தல்களில் தேசிய அவாமி லீக் பெரும்பான்மை இடங்களைக் கைப்பற்றியது. **ஷேக் முஜிபுர் ரஹ்மான்** அக்கட்சியின் தலைவரானார். ஆனால் யாஹ்யா கானும், மேற்குப் பாகிஸ்தானிலுள்ள மற்ற தலைவர்களும் கிழக்குப் பாகிஸ்தானைச் சார்ந்த ஷேக் முஜிபுர் ரஹ்மானிடம் அதிகாரத்தை ஒப்படைக்க விரும்பவில்லை. அதனால் புதிய சட்டசபையைக் கூட்டக் காலம் தாழ்த்தப்பட்டது. கிழக்குப் பாகிஸ்தானில் பயங்கர ஆட்சி நடைபெற்றது. ஷேக் முஜிபுர் ரஹ்மான் அதை எதிர்த்தார். முடிவில் கி.பி. 1971 ஏப்ரல் 17ஆம் நாள் முஜிபுர் ரஹ்மானை ஜனாதிபதியாகப் பெற்ற **பங்களாதேஷ்** குடியரசு உருவாயிற்று. மேற்குப் பாகிஸ்தான் போர் தொடுத்தது. இந்தியா, பங்களா தேசத்திற்கு உதவி செய்தது. போரில் தோல்வியடைந்த யாஹியாகான் பதவியிலிருந்து விலக்கப்பட்டார். **பூட்டோ** பாகிஸ்தானின் தலைவரானார். 1977 ஜூலையில் இராணுவத் தளபதி **ஜியா உல் ஹக்** என்பவர் ஆட்சியைக் கைப்பற்றி இராணுவ ஆட்சியை ஏற்படுத்தினார். அவர் பூட்டோவையும் மற்றத் தலைவர்களையும் சிறையிலடைத்தார். பூட்டோ மீது கொலைக் குற்றம் சாட்டப்பட்டு தூக்கிலிடப்பட்டார். இன்று பாகிஸ்தானில் இராணுவ ஆட்சி நடைபெற்று வருகிறது.

பாகிஸ்தானிலிருந்து பிரிந்த பங்களாதேஷின் முதல் தலைவரான முஜிபூர் ரஹ்மான் 1975-ல் ஏற்பட்ட புரட்சியின் விளைவாகக் கொல்லப்பட்டார். இராணுவத் தளபதி ஜியா உர் ரஹமான் ஆட்சியைக் கைப்பற்றினார். சமீபத்தில் அவரும் கொல்லப்பட்டார்.

**ஸ்ரீலங்கா**

இலங்கையில் ஆங்கில ஆட்சிக்கு எதிராகக் கிளர்ச்சிகள் தோன்றின. அவற்றின் விளைவாக அரசியல் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. இரண்டாம் உலகப் போருக்குப்பின் இலங்கைக்கு டொமினியன் அந்தஸ்து வழங்கப்பட்டது. 1972-ல் புதிய அரசியல் அமைப்பின்படி அந்நாடு குடியரசு நாடாயிற்று. பாராளுமன்றக் குடியாட்சி ஏற்பட்டது. **ஜெயவர்த்தனா** என்பவர் இப்பொழுது குடியாட்சியின் தலைவராக இருக்கிறார்.

**பர்மா**

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பர்மா இந்தியாவின் ஒரு மாநிலமாக ஆங்கில ஆட்சிக்குட்பட்டிருந்தது. கி. பி. 1935ஆம் ஆண்டு இந்தியச் சட்டப்படி பர்மா இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டு, இரண்டாம் உலகப் போரின்போது பர்மாவிற்கு முழு சுதந்திரம் அளிக்கக் கோரிய **தாகின் கட்சி** ஆங்கிலேயருக்கு எதிராகப் படையெடுத்த ஜப்பானுக்கு உதவ முன் வந்தது. பின்னர் ஜப்பானிய ஆட்சியை பர்மியர் வெறுத்தனர். ஜப்பானியரிடமிருந்து பர்மாவை விடுவித்த பிரிட்டிஷ் படையைப் பர்மியர் வரவேற்றனர். போர் முடிவடைந்தபின் பர்மா சுதந்திர நாடாயிற்று. **தாகின் நு** என்பவர் பிரதம மந்திரியானார். ஆனால், நாட்டில் புரட்சி ஏற்பட்டு இராணுவத் தளபதி **நிவின்** தலைமையில் இராணுவ ஆட்சி ஏற்பட்டது.

**இந்தோனேஷியா**

டச்சு ஆதிக்கத்திலிருந்து இந்தோனேஷியாவை ஜப்பான் இரண்டாம் உலகப்போர் நடைபெற்றுக் கொண்டிருந்தபொழுது கைப்பற்றியது. அங்கு இயல்பாகவே டச்சு ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடிவந்த தேசியவாதிகளின் இயக்கத்தை ஜப்பான் ஏற்றுக்கொண்டு அங்கு அவர்களையே அரசாங்கம் அமைக்க அனுமதித்தது. அங்கிருந்து ஜப்பான் தனக்கு வேண்டிய மூலப் பொருள்களைப் பெற்றுவந்தது. 1945 ஆகஸ்டு மாதத்தில் ஜப்பான் சரணடைந்ததற்குப் பின் இந்தோனேஷியாவில் மீண்டும் தன் ஆட்சியை ஏற்படுத்த டச்சு அரசாங்கம் டச்சுப் படையை அங்கு அனுப்பியது. இந்தோனேஷியாவிலிருந்த தேசியக் குடியரசு டச்சுப் படையை எதிர்த்துப் போராடியது. டச்சு அரசாங்கத்தின் எகாதிபத்தியப் போக்கைக் கண்டிக்கும் வகையில் இந்தியப் **பிரதமர் ஜவஹர்லால் நேரு** 1948-ல் டில்லியில் **திருமதி சரோஜினி தேவியார்** தலைமையில் **ஆசிய நாடுகளின் மாநாடு** ஒன்றைக் கூட்டினார். பிற உலக நாடுகளும் டச்சு அரசாங்கத்தின் நடவடிக்கைகளைக் கண்டனம் செய்தன. ஐக்கிய நாட்டுச் சபையின் ஆதரவில் பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. இந்தோனேஷியாவுக்கு சுதந்திரம் அளிக்கப்பட்டது. புதிய அரசியல் அமைப்பு உருவாக்கப்பட்டது. **டாக்டர் சுகர்ணோ** ஜனாதிபதியாகவும், **முகம்மது ஹட்டா** பிரதமராகவும் பதவியேற்றனர். டாக்டர் சுகர்ணோ **பாண்டுங்** நகரில் 1955-ல் ஆப்பிரிக்க, ஆசிய நாடுகளின் மாநாடு நடைபெறக் காரணமாயிருந்தார். அம் மாநாட்டில்தான் பண்டித ஜவஹர்லால் நேரு தமது **பஞ்சசீலக்** கொள்கையை வெளியிட்டார்.

டாக்டர் சுகர்ணோ சர்வாதிகாரியாக ஆட்சி புரிந்தார். 1956 டிசம்பர் முதல் நாள் ஹட்டா அரசியல் கருத்து வேறுபாட்டினால் பதவியிலிருந்து விலகினார். நாட்டில் இராணுவச் சட்டம் பிரகடனம் செய்யப்பட்டது. நாளடைவில் நாட்டில் பொருளாதாரம் சீர்குலைந் தது. மக்கள் சுகர்ணோவை வெறுக்கலாயினர். அந்நிலையில் தளபதி **சுகார்ட்டோ** என்பவர் 1968ஆம் ஆண்டு மார்ச் மாதம் 28ஆம் நாள் இந்தோனேஷியாவின் தலைவரானார். இன்று இந்தோ னேஷியாவில் இராணுவ ஆட்சி நடைபெற்று வருகிறது.

**மலேசியா—சிங்கப்பூர்**

இரண்டாம் உலகப் போருக்கு முன் மலேயாத் தீபகற்பம் பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருந்தது. பிரிட்டிஷ் ஆட்சியினால் மலேயா பெரிதும் பயனடைந்த பொழுதிலும் மலேயாவின் இயற்கைச் செல்வத்தினால் கிடைத்த வருவாய் மலேயா நாட்டிற்குக் கிடைக்க வில்லை. அங்கு மலேயரும், சீனரும், இந்தியரும் வாழ்ந்துவந்தனர்.

இரண்டாம் உலகப்போர் நடைபெற்றபொழுது, மலேயாவில் ஜப்பானியர் ஆதிக்கம் ஏற்பட்டபின், ஜப்பானியர் சில துறைகளில் மலேயா மக்களின் தன்னாட்சி ஏற்பட முயற்சி செய்த தனர். அதனால் மலேசியாவில் விழிப்புணர்ச்சி தோன்றியது. 1945-ல் ஜப்பான் போரில் சரணடைந்தபொழுது ஆங்கிலேயர்கள் மலேயாவிலிருந்த மக்களின் தேசிய உணர்ச்சியை நன்குணர்ந்தனர்.

1955-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் மலேயர், இந்தியர், சீனர் ஆகியோரின் அரசியல் கட்சிகள் இணைந்த **கூட்டணிக் கட்சி** வெற்றி பெற்றது. அதனால் அக்கட்சியின் தலைவரான **துங்கு அப்துர் ரஹ்மான்** தலைமையில் அமைச்சரவை அமைக்கப்பட்டது. கி. பி. 1957 ஆகஸ்டு மாதம் 31 ஆம் நாள் பிரிட்டன் மலேயா விற்கு சுதந்திரம் அளித்தது. மலேயா ஐக்கிய நாட்டு சபையில் ஓர் உறுப்பு நாடாகச் சேர்ந்தது. பிரிட்டனுடன் ஒரு பாதுகாப்பு ஒப்பந்தம் செய்துகொண்டது. சிங்கப்பூர் தனிநாடாக அமைக்கப்பட்டது. 1963-ல் மலேசியா என்ற கூட்டுக் குடியரசு உருவாகியது. அதில் **மலேயா, சிங்கப்பூர், சாபா** அல்லது **வடபோர்னியோ, சாரவாக்** முதலியன அடங்கியிருந்தன. ஆனால், கி. பி. 1965 ஆகஸ்டு 9 ஆம் நாள் சிங்கப்பூர் மலேசியாக்கூட்டாட்சியிலிருந்து பிரிந்து தனிக்குடியரசு நாடாயிற்று.

சிங்கப்பூர் **லீகுவான்யூ** என்ற பிரதமரின் தலைமையில் பொருளாதாரத்தில் அதிக முன்னேற்றம் அடைந்துள்ளது

மலேசியாவின் தலைநகரம் குவாலாலம்பூர். அந்நாட்டில் மலேயர் பெரும்பான்மையான மக்கள்; சீனர்களும் இந்தியர்களும் வசிக்கின்றனர். இஸ்லாம் பெரும்பான்மையான மக்களின் சமயமாகும். பல இனத்தவர், பல சமயத்தினர் அடங்கிய நாட்டை மலேசியா அரசாங்கம் சிறந்த முறையில் மதசகிப்புத் தன்மையுடன் ஆட்சி செய்துவருகின்றது.

**பிலிப்பைன் தீவுகள்**

16ஆம் நூற்றாண்டில் **மெகல்லன்** உலகத்தைச் சுற்றிவந்த பொழுது, பிலிப்பைன் தீவுகளைக் கண்டுபிடித்தார். ஸ்பெயின் இளவரசர் பிலிப் என்பவர் பெயரால் அத்தீவுக் கூட்டம் பிலிப்பைன்ஸ் என அழைக்கப்படலாயிற்று. 19 ஆவது நூற்றாண்டின் இறுதிவரை அத்தீவுகள் ஸ்பெயினின் ஆதிக்கத்தின்கீழ் இருந்தன. அதன் விளைவாகக் கத்தோலிக்க மதமும் மேல்நாட்டு நாகரிகமும் அத்தீவுகளில் பரவின. 1898-ல் அமெரிக்காவுக்கும் ஸ்பெயினுக்கும் ஏற்பட்ட போரின் விளைவாக பிலிப்பைன்ஸ் அமெரிக்க ஆதிக்கத்திற்குட்பட்டது.

அமெரிக்க ஆதிக்கத்திற்குட்பட்ட பின் பிலிப்பைன்ஸில் தேசிய இயக்கம் வலுப்பெற்றது. அமெரிக்க அரசாங்கமும் இயக்கத்தின் நியாயத்தை உணர்ந்து கி. பி. 1934-ல் ஒரு சட்டம் இயற்றியது. அச்சட்டத்தின்படி பிலிப்பைனில் பொது நல அரசு (Commonwealth) அமைக்கப்பட்டது. அது முழு சுதந்திரம் வழங்குவதற்கு முதல் நடவடிக்கையாகும். அந்த அரசியல் அமைப்பு ஆறு வருடங்கள் ஒழுங்காகச் செயல்பட்டது. 1939-ல் இரண்டாவது உலகப்போர் மூண்டது. அப்போரில் ஜப்பான் பிலிப்பைன் தீவுகளைக் கைப்பற்றியது. ஆனால் போரின் முடிவில் அவற்றை அமெரிக்க ஐக்கிய நாடுகள் கைப்பற்றி மீண்டும் அங்கு பொதுநல அரசை நிறுவியது. முதலில் வாக்களித்தபடி அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசாங்கம் கி.பி. 1946-ல் பிலிப்பைனுக்கு சுதந்திரம் வழங்கியது. பிலிப்பைன் குடியரசாயிற்று.

**கொரியா**

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஜப்பானிய ஆதிக்கத்திலிருந்த கொரியா இரண்டாம் உலகப் போருக்குப்பின் இரண்டாகப் பிரிக்கப்பட்டது. 38° வட அட்ச ரேகைக்கு வடக்கேயுள்ள பகுதி வடகொரியா என்றும் அதற்குத் தெற்கேயுள்ள பகுதி தென் கொரியா என்றும் அழைக்கப்பட்டது. வடகொரியாவில் ரஷ்யாவின்

செல்வாக்கும், தென்கொரியாவில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செல்வாக்கும் தோன்றின.

கி. பி. 1950 ஜூன் மாதத்தில் வடகொரியப் படைகள் தென் கொரியாவில் நுழையவே கொரியாப் போர் தொடங்கியது. ஐக்கிய நாடுகள் சபை பாதுகாப்புக் குழு அந்த போர், உலகப் போராகப் பரவ விடாதபடி அமெரிக்கத் தளபதி **டக்ளஸ் மெக் ஆர்தர்** என்பவரின் தலைமையில் ஐ. நா. படையை கொரியாவுக்கு அனுப்பியது. **மெக்ஆர்தர்** வடகொரியப் படைகளை 38° வடஅட்ச ரேகைக்கு வடக்கில் துரத்தினார். பாதுகாப்புக் குழு போர் நிறுத்த யோசனைகளை வெளியிட்டது. அவற்றை ஏற்று கி. பி. 1953 ஜூலை 27-ல் போர் நிறுத்த உடன்பாடு ஏற்பட்டது. 38° வட அட்ச ரேகை இரு நாடுகளின் பொது எல்லையாயிற்று. தென்கொரியாவின் தலைநகர் **சியோல்**; வடகொரியாவின் தலைநகர் **பியாங்யாங்கு** ஆகும்.

அண்மைக்காலத்தில் இரண்டு கொரியப் பகுதிகளையும் இணைக்க முயற்சிகள் நடந்து வருகின்றன.

## IX. இஸ்ரேல்

பாலஸ்தீனத்தில் இஸ்ரேல், ஜோர்தான் என்ற இரு நாடுகள் அமைக்கப்பட்ட வரலாற்றை முந்திய பாடத்தில் பார்த்தோம். கி. பி. 1948 மே 14 ஆம் நாள் இஸ்ரேல் யூதர்களின் குடியரசு நாடானதை அரபு நாடுகள் ஏற்றுக்கொள்ளாமல் அதனுடன் போரிட்டன. கி. பி. 1967 ஜூன் மாதத்தில் அரபு நாட்டுப் படைகள் எகிப்து ஜனாதிபதி **நாசரின்** தலைமையில் இஸ்ரேல்மீது போர் தொடுத்தன. அப்போர் 6 நாட்கள் நடைபெற்றது. போரில் வெற்றி பெற்ற இஸ்ரேல் எகிப்து, சிரியா நாடுகளின் சில பகுதிகளை கைப்பற்றியதுடன் ஜெருசலத்தின்மீது முழு உரிமையும் பெற்றது. சூயஸ் கால்வாயை எகிப்து பயன்படுத்த இயலாதவாறும் செய்துவிட்டது. பெரும்பகுதி களை இழந்த அரபு நாடுகள் அவற்றை மீண்டும் பெற கி. பி. 1973 ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் இஸ்ரேலுடன் போர் தொடுத்தன. இரண்டு வாரங்களுக்குப் பிறகு போர் முடிவுற்றது. நிலையான சமாதானம் ஏற்பட எகிப்தைத்தவிர பிற அரபு நாடுகள் ஒத்துழைக்க வில்லை.

இஸ்ரேலைச் சுற்றியுள்ள ஈராக், சிரியா, ஜோர்தான், லெபெனான், எகிப்து, அரேபியா ஆகியவை அரபு நாடுகள் ஆகும். அவற்றில் எகிப்து மட்டும் இஸ்ரேலுடன் சமாதான உடன்படிக்கை ஏற்பட

பேச்சு வார்த்தைகள் நடத்தி வருகின்றது. ஆனால் மற்ற அரபு நாடுகள் இஸ்ரேலுடன் பகைமை பாராட்டிவருக்கின்றன. இஸ்ரேல் 1967 ஆம் ஆண்டுப் போரில் கைப்பற்றிய பகுதிகளை முக்கியமாக கிழக்கு ஜெருசலம் நகரைத் திருப்பித்தரும் வரையில் சமாதானம் இல்லை எனக் கூறுகின்றன. எனவே இஸ்ரேல் - அரேபியத் தகராறு இன்னும் தீர்ந்தபாடில்லை.




படம் 26. இஸ்ரேலும் அண்டை நாடுகளும்

## (இ) சீனாவில் உள்நாட்டுப்போரும், இரு சீன நாடுகளும்

### 1. மக்கள் சீனக் குடியரசு

சீனாவின் சில பகுதிகளில் படைத் தலைவர்களின் அரசாங்கமும், தென்பகுதியில் **டாக்டர் சன்யாட்சென்** தோற்றுவித்த **கோமின்டாங்** கட்சியைச் சார்ந்த கான்டன் புரட்சி அரசாங்கமும்

ஏற்பட்டன என நாம் முன்னர் அறிந்தோம். அவற்றிற்கிடையே ஒற்றுமை இல்லை; டாக்டர் சன்யாட்சென் சீனாவை ஐக்கியப்படுத்த ருஷ்யாவின் உதவியை நாடினார். சீனாவின் தேசிய ஒற்றுமைக்கும், முழு சுதந்திரத்திற்கும் ருஷ்யா உதவிபுரிய சம்மதித்தது. ருஷ்யா கோமின்டாங் கட்சிக்கு உதவி அளிப்பதன் மூலம் அக்கட்சியைப், பொதுவுடைமைக் கட்சியின் கட்டுப்பாட்டிற்குட்படுத்த வேண்டு மென்ற அடிப்படை நோக்கத்தைக் கொண்டிருந்தது.

1925ஆம் ஆண்டில் டாக்டர் சன்யாட்சென் இறந்தார். அவருக்குப் பின் அவருடைய மனைவியின் தங்கை கணவரான **சியாங்கேஷேக்** என்பவர் கோமின்டாங் கட்சியின் தலைவரானார். டாக்டர் சன்யாட் சென் முற்போக்காளர்; அவர் கம்யூனிஸ்டுகளை தமது கட்சி யில் சேர்த்திருந்தார். ஆனால் சியாங்கேஷேக் பிற்போக்காளர்: அவர் பொதுவுடைமைக் கட்சியை வெறுத்தார்; அவர் கோமின்டாங் கட்சி யிலிருந்து பொதுவுடைமை வாதிகளை வெளியேற்றினார். வெளியேற்றப்பட்ட பொதுவுடைமை வாதிகள் **மா-சே-துங், சூ-என்-லாய்** ஆகியோர் தலைமையில் ஒன்று சேர்ந்தனர். தென் சீனாவில் **கியாங்சி** என்னும் மாநிலத்தில் தங்கள் கட்சியின் தலைமைச் செயலகத்தை **சீன கம்யூனிஸ்டு கட்சி** (C. P. C) ஏற்படுத்தியது. 1934-ல் மா-சே-துங், சூ-என்-லாய் ஆகியோர் தலைமையில் **ஜுய்சென்** எனும் இடத்திலிருந்து புறப்பட்டு 9,600 கி. மீ. தூரத்தைக் கடந்துசென்று 1935ஆம் ஆண்டில் வடச் சீனாவிலுள்ள **ஷென்சி** மாநிலத்தை அடைந்தனர். அது புகழ் பெற்ற **நீண்ட பயணம்** என வரலாற்றில் குறிப்பிடப்படுகின்றது. ஷென்சி மாநிலத்திலுள்ள **ஏனான்**என்னுமிடத்தில் தங்கள் கட்சியின் தலைமைச் செயலகத்தை அமைத்துக்கொண்டு அவர்கள் கோமின்டாங் கட்சியினருடன் உள்நாட்டுப் போர் புரிந்தனர்.

1937-1941 ஆண்டுகளில் சீன - ஜப்பானியப் போர் நடைபெற்ற பொழுது கோமின்டாங்கும், பொதுவுடைமைக் கட்சியும் இணைந்து ஜப்பானை எதிர்த்தன. அப்போரைப் பயன்படுத்தி மாவோ தம் கட்சியின் செல்வாக்கைப் பெருக்கிக் கொண்டார்.

சீனாவிலேயே பொதுவுடைமைக் கட்சியினர் ஷென்சி மாநிலத் திலுள்ள ஏனான் என்னுமிடத்தில் அரசாங்கத்தை அமைத்து படை, பள்ளிகள், பல்கலைக்கழகம் முதலியன ஏற்படுத்தினர். அவர்கள் ஆதிக்கத்திலிருந்த பகுதிகளில் நிலங்கள் உழுது பயிரிடுபவனிடமே ஒப்படைக்கப்பட்டன. சீனப் பொதுவுடைமைக் கட்சி விவசாய மக்களைச் சார்ந்தே இருந்தது.

இரண்டாம் உலகப்போர் தொடங்கியதும் சீனப் பொதுவுடைமை கட்சியும் கோமின்டாங்கும் ஜப்பானுடன் தனித்தனியே போரிட்டது.

இரண்டாம் உலகப்போர் முடிவுற்று ஜப்பானியர் சீனாவிலிருந்து விரட்டப்பட்ட பின் சியாங்கேஷேக்கும், மா-சே-துங்கும் சீனாவில் ஆதிக்கம் பெற போட்டியிட்டனர். இந்த உள்நாட்டுப் போரில் மா-சே-துங்கும், சூ-என்-லாயும் வெற்றி மேல் வெற்றி பெற்று சியாங்கேஷேக்கை சீனாவிலிருந்து விரட்டினர். சியாங்கேஷேக் சீனாவிலிருந்து **தைவான் தீவிற்கு** (பார்மோசாத் தீவிற்கு) ஓடி அங்குப் பெயரளவில் அமெரிக்காவின் ஆதரவுடன் தேசிய அரசாங்கத்தை நடத்தி வந்தார். சீனா முழுவதும் பொதுவுடைமைக் கட்சியின் ஆதிக்கத்திற்குட்பட்டது. 1949ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் முதல் நாள் மா-சே-துங், சூ-என்-லாய் ஆகியோர் தலைமையில் சீனாவில் மக்கள் குடியரசு நிறுவப்பட்டது. உள்நாட்டுப் போரின் விளைவாக **பீகிங்கிலிருந்து** ஆட்சி புரிந்த **கம்யூனிஸ்டு சீனா, தைவானிலுள்ள தேசிய சீனா** என்ற இரண்டு சீனாக்கள் தோன்றின.

சீன மக்கள் குடியரசை அல்லது கம்யூனிஸ்டு சீனாவை இந்தியா போன்ற நடுநிலைமை நாடுகள் ஆரம்பத்திலிருந்தே ஆதரித்து வந்தன. அமெரிக்கா போன்ற முதலாளித்துவ நாடுகள் தைவானிலுள்ள அரசாங்கத்தையே சீன அரசாங்கமாக முதலில் கருதின. ஆனால் நாளடைவில் அந்நாடுகள் தங்கள் கருத்தை மாற்றிக்கொண்டன. இந்தியா போன்ற நாடுகளின் இடைவிடா முயற்சியால் மக்கள் சீனக் குடியரசு 1971 அக்டோபரில் ஐ. நா. சபையில் இடம் பெற்றது. சீனா ஐ. நா. சபையின் பாதுகாப்புக் கவுன்சிலில் ஒரு நிரந்தர அங்கம் வகிக்கின்றது. சூ-என்-லாய், மா-சே-துங் ஆகியோர் இறந்ததும் சீன கம்யூனிஸ்டுகட்சியில் பெரிய மாறுதல்கள் ஏற்பட்டன. இன்று அக் கட்சி கூட்டுத் தலைமையின்கீழ் இயங்கி நாட்டை ஆட்சி செய்து வருகின்றது.

## II. தைவான்

தைவான் தீவு முன்பு பார்மோசா தீவு என அழைக்கப்பட்டது. சீன - ஜப்பான் போரில் (1894 - 1895) தைவான் ஜப்பானால் கைப்பற்றப்பட்டது. ஆனால் இரண்டாம் உலகப் போரின் முடிவில் அத்தீவு சீனாவிடமே ஒப்படைக்கப்பட்டது. பொதுவுடைமைக் கட்சியினரால் சீனாவிலிருந்து விரட்டியடிக்கப்பட்ட சியாங்கேஷேக் தைவானில் ஒரு தேசிய அரசாங்கத்தை நிறுவினார். அது அமெரிக்கா வின் ஆதரவைச் சார்ந்திருந்தது. சியாங்கே ஷேக் தனது 82 ஆவது

வயதில் இறந்ததும் அவரது மகன் தலைவரானார். நீண்ட காலமாகத் தைவான் அரசாங்கமே சீன அரசாங்கமாகக் கருதப்பட்டு அது ஐ. நா. சபையில் அங்கம் வகித்து வந்தது. மக்கள் சீனக் குடியரசு ஐ. நா. சபையில் இடம் பெற்றதும் தைவான் தனது இடத்தை இழந்தது.

**வியட்நாம் போர்**

இந்தோசீனாவின் ஓர் அரசியல் பிரிவு வியட்நாம் ஆகும். 17ஆம் நூற்றாண்டில் பிரெஞ்சு ஆதிக்கம் இந்தோசீனாவில் ஏற்பட்டு, வியட்நாம் பிரெஞ்சு நிர்வாகத்திற்குட்பட்டது. பிரெஞ்சுப் புரட்சியின் விளைவாக வியட்நாமிலும் தேசிய உணர்ச்சி தோன்றலாயிற்று. முதல் உலகப் போருக்குப்பின் வியட்நாம் மக்களின் தேசிய உணர்ச்சி பிரெஞ்சு அரசாங்கத்தினால் அடக்கப்பட்டது. என்றாலும் இரண்டாம் உலகப் போரில் பிரான்ஸ் வீழ்ச்சியடைந்ததும், வியட்நாம் மக்களின் விடுதலை உணர்ச்சி வலுப்பெறலாயிற்று. **ஹோசிமின்** என்ற பொதுவுடைமைவாதி, **வியட்நாம் சுதந்திரக் கழகம்** அல்லது **வியட்மின் (Viet Minh)** என்ற அமைப்பை ஏற்படுத்தினார்.

1945-ல் ஜப்பான் போரில் சரண் அடைந்தபின், வியட்மின் தனது அதிகாரத்தை வியட்நாமில் நிறுவியது. ஆனால் பிரான்ஸ் வியட்நாமிலுள்ள **சைகோன்** நகரில் ஒரு பொம்மை அரசை ஏற்படுத்தியது. அந்த அரசை வியட்மின் எதிர்த்தது. டாக்டர் ஹோசிமின் வியட்நாமுக்கு முழு சுதந்திரம் அளிக்க வேண்டும் என்று கிளர்ச்சி செய்தார். அவர் வியட்நாம் குடியரசை நிறுவினார். அக் குடியரசை கம்யூனிஸ்ட் சீனாவும் சோவியத் ரஷ்யாவும் ஏற்றுக் கொண்டன.

வியட்நாம் பிரச்சினைக்கு 1954-ல் **ஜெனிவா** நகரில் கூடிய மாநாடு ஒரு தீர்வு கண்டது. வியட்நாம் இரு பகுதிகளாகப் பிரிக்கப் பட்டது. 17° அட்சக் கோட்டிற்கு வடக்கில் ஒரு பகுதியும், தெற்கில் ஒரு பகுதியுமாகப் பிரிக்கப்பட்டது. வட வியட்நாமில் **ஹனாய்** நகரில் ஹோசிமினின் பொதுவுடைமைக் குடியரசு ஏற்பட்டது. தெற்கு வியட்நாமில் **சைகோன்** நகரில் பிரெஞ்சு ஆதரவும் பின்னர் அமெரிக்க ஆதரவும் பெற்ற ஒரு பொம்மை அரசு அமைக்கப்பட்டது. தேர்தல் களின் மூலமே தென்வியட்நாமும், வடவியட்நாமும் இணைக்கப்பட வேண்டுமென ஒப்புக்கொள்ளப்பட்டது.

ஹோசிமின், வடவியட்நாம் குடியரசின் தலைவரானார். வட வியட்நாம் பல துறைகளிலும் முன்னேற்றம் அடைந்தது. 1969-ல் ஹோசிமின் இறந்ததும், மற்றத் தலைவர்கள் கூட்டாக நிர்வாகத்தைக்

கவனித்தனர். தென்வியட்நாமில் நிர்வாகம் திறமையாக நடைபெற வில்லை. அங்கு அரசிற்கெதிராக ஒரு தேசிய இயக்கம் தோன்றியது. அக்கட்சியே வியட்காங் (Vietcong) என்ற பொதுவுடைமைக் கட்சி யாகும். அக்கட்சி தென்வியட்நாமில் விவசாய மக்களிடையே செல்வாக்கு பெற்றது, வியட்காங் வலிமையடையவே, அமெரிக்க ஐக்கிய நாடு தென்வியட்நாம் அரசியலில் தலையிடலாயிற்று. அமெரிக்காவிலிருந்து தென்வியட்நாமைக் காக்கப் படைகள் அனுப்பப்பட்டன. பல்லாயிரக் கணக்கான வியட்நாம் வீரர்கள் நாட்டிற்காகப் போரிட்டு மடிந்தனர். இறுதியில் அமெரிக்கப்படை பின்வாங்கி நாட்டைவிட்டு வெளியேறியதும் வியட்காங் கட்சியினர் சைகோனைக் கைப்பற்றி புரட்சி அரசாங்கத்தை நிறுவினர். பின்னர் இரண்டு வியட்நாமும் இணைந்தன. இன்று வியட்நாம் ஒன்றுபட்டு ஒரு வலிமையுள்ள அரசாக விளங்குகிறது. வியட்நாமின் தலைநகர் **ஹோசிமின் நகர்** ஆகும்.

**ஜப்பானின் வியத்தகு முன்னேற்றம்**

ஜப்பான் ஒரு மலைப்பாங்கான நாடு. அங்கு பல எரிமலைகள் உள்ளன. நில அதிர்ச்சிகளும் அடிக்கடி அங்கு நிகழும். தாதுவளம் அங்கு குறைவு. ஜப்பானில் பயிரிடுவதற்கேற்ற நிலப்பரப்பும் குறைவு. இத்தகைய இயற்கைக் கேடுகளைப் பெற்ற ஜப்பான் இரண்டாம் உலகப் போரில் பல துறைகளிலும் மிகவும் பாதிக்கப் பட்டது ; பேரரசு ஒழிக்கப்பட்டது. அணுகுண்டுகளின் வீச்சினால் நாடுகளை இழந்தது. அளவிலா சேதமுற்றது அந்நிலையில் ஜப்பான் பொருளாதாரத் துறையில் மீட்சி பெற்று வளமுற, நீண்டகாலம் பிடிக்கும் என கருதப்பட்டது. ஆனால் ஜப்பான் மிகக் குறுகிய காலத்தில், எல்லாத் துறைகளிலும் முன்னேறி பொருளாதார வலிமையும் பெற்று வியத்தகு வளர்ச்சியடைந்துள்ளது ; அவ் வளர்ச்சியே **ஜப்பானின் அருஞ்செயல்** எனப்படுகின்றது.

ஜப்பானின் வியத்தகு பொருளாதார வளர்ச்சிக்குக் கீழ்க்கண்ட காரணங்களை குறிப்பிடலாம்.

1. ஜப்பானுக்கு கிடைத்த அமெரிக்க ஐக்கிய நாடுகளின் உதவி.
2. ஜப்பானியர்களின் கடின உழைப்பும் தியாக உணர்வும்.
3. ஜப்பானியர்களின் தொழில் நுட்ப அறிவு.
4. ஜப்பானின் பாதுகாப்பு அமெரிக்காவின் பொறுப்பானது. அதனால் நாட்டின் பணம், பாதுகாப்பிற்காக அல்லாமல் முழுவதும் வளர்ச்சித் திட்டங்களுக்கே செலவிடப்பட்டது.

விவசாயத் துறையில் பல சீர்த்திருத்தங்கள் செய்யப்பட்டன. ஒரு சிலர் வசமிருந்த நிலங்கள் உண்மையான விவசாயிகளிடம் ஒப்படைக்கப்பட்டன. விவசாயம் வளர்ச்சி அடைந்தது. விளை நிலப்பரப்பு குறைவாக இருந்ததால் செறிந்த சாகுபடிமுறை கையாளப்பட்டது. இன்றும் ஜப்பானியச் சாகுபடிமுறை புகழ் பெற்றுள்ளது. ஆலைப் பொருள் உற்பத்தியிலும் ஜப்பான் முன்னேறியுள்ளது. ஜப்பானியர் தம் நாட்டின் வளர்ச்சிக்காக குறைந்த கூலியில் நீண்ட நேரம் வேலை செய்கின்றனர். அதனால் ஜப்பான் நாட்டுப் பொருள்களின் விலை உலகச் சந்தையில் மலிவாகி விற்பனை அதிகரிக்கின்றது. தொழில்கள் வளர்கின்றன. இன்று ஜப்பான் பொருளாதாரத் துறையில் ஆசியாவில் முதலிடத்தைப் பெற்றுள்ளது ; உலகில் அமெரிக்க ஐக்கிய நாடுகள், ரஷ்யா ஆகியவற்றிற்கு அடுத்தபடியாக சிறந்து விளங்குகின்றது.

**ஆசியாவின் மக்கள் பெருக்கம்**

உலக மக்கள் தொகையில் சுமார் 75 சதவிகித மக்கள் ஆசியாக் கண்டத்தில் வாழ்கின்றனர். ஆசியாவிலுள்ள சீனா உலகிலேயே மிகுந்த மக்கள் தொகையுள்ள நாடாகும். அதற்கு அடுத்தபடியாக இந்தியா மக்கள் தொகை மிகுந்த நாடாக விளங்குகின்றது. 1981 மக்கள் தொகை கணக்குப்படி இந்திய யூனியனின் மக்கள் தொகை ஏறத்தாழ 70 கோடிகளாகும்.

ஆசியா முதன்முதலாக மக்கள் தோன்றிய கண்டம் என்பதாலும், அது தொன்றுதொட்டுப் பண்பாட்டிற்குச் சிறந்த நிலப்பகுதி என்பதாலும் ஆசியாவில் மக்கள்தொகை அதிகம். மேலும் ஆசியாவின் தட்பவெப்ப நிலையும், வளமான ஆற்றுப்பள்ளத்தாக்குகளும், போக்கு வரவு வசதிகளும் மக்கள் பெருக்கத்திற்குக் காரணங்களாக அமைகின்றன. ஆசிய மக்கள் வேறு நாடுகளுக்குச் சென்று குடியேற வாய்ப்பில்லை. வெள்ளையரின் ‘வெள்ளைஆஸ்திரேலியக் கொள்கை’ போன்ற கோட்பாடுகள் ஆசிய மக்கள் வெளிநாடுகளுக்குச் சென்று குடியேறுவதைத் தடுக்கின்றன. கல்வியறிவும், விஞ்ஞான அறிவும் ஆசியாவில் விரைவாக வளர்ந்து வருகின்றன. கல்வியறிவு வளர்ச்சியினால் இவர்கள், மக்கள் பெருக்கத்தால் விளையும் தீமைகளை உணர்ந்து, பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் அடைய, குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளால் மக்கள் பெருக்கத்தைக்

குறைக்கவும் முயல்கின்றனர். எனவே வருங்காலத்தில் ஆசியாக் கண்டம் உலகில் சிறந்து விளங்கும் என்பதில் ஐயமில்லை.

## கேள்விகள்

**I. கோடிட்ட இடங்களை நிரப்புக :**

1. ஹிட்லரின் கட்சி ———— ம் முசோலியின் கட்சி ———— ம் ஆகும்.
2. 'இந்தியாவின் பிஸ்மார்க்' எனப் பெயர் பெற்றவர் ———— ஆவார்.
3. பர்மா ———— ஆம் ஆண்டு இந்தியச் சட்டப்படி இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டது.
4. கோமின்டாங் கட்சி ———— என்பவரால் தோற்று விக்கப்பட்டது.
5. சீனக் கம்யூனிஸ்ட் தலைவர்கள் ————, ———— ஆவர்.
6. ஹோசிமின் நிறுவிய கட்சி ———— ஆகும்.
7. தென் வியட்நாமில் ———— அமெரிக்கர்களுடன் போர் புரிந்த கட்சியாகும்.

**II. சுருக்கமான விடை தருக :**

1. இரண்டாம் உலகப் போரின் விளைவுகளில் இரண்டைக் குறிப்பிடுக.
2. ஸ்ரீலங்கா எவ்வாறு சுதந்திரம் பெற்றது ?
3. 'கொரியாப் போர்'—குறிப்பு வரைக.
4. வியட்நாம் போருக்குக் காரணம் யாது ?

**III. விரிவான விடை அளிக்கவும் :**

1. இரண்டாம் உலகப் போரின் முக்கிய காரணங்களைக் குறிப்பிடுக.
2. இந்தோனேஷியா குடியரசான வரலாற்றை விவரிக்கவும்.
3. வியட்நாம் போரை விளக்குக.
4. ஜப்பானின் முன்னேற்றத்தை விவரிக்கவும்.

## பயிற்சி

இரண்டாம் உலகப் போருக்குப்பின் சுதந்திரம் பெற்ற நாடுகளைப் படத்தில் குறிக்கவும்.

